

# மங்கள ஸ்நானம்!

தன் பிள்ளை போன தினத்தில் எல்லோருக்கும் கங்கா ஸ்நான புண்ணியம் கிடைக்க வேண்டும் என்று பூமாதேவி கேட்டுக் கொண்ட விசேஷம்தான், இன்றைக்கும் நாம் தீபாவளியன்று 'கங்கா ஸ்நானம்' செய்வது.

இந்த ஸ்நானத்திலே நாம் வைத்துக் கொள்கிற எண்ணெயில் லக்ஷ்மி தேவி வாஸம் பண்ண வேண்டும் என்றும், குளிக்கிற வெந்நீரில் கங்கா தேவி வஸிக்க வேண்டும் என்றும் பூமாதேவி கேட்டுக் கொண்டாள். அதன் பின்பாதியை ஒட்டித்தான், பிரஸித்தமாக தீபாவளியன்று 'கங்கா ஸ்நான்ம்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் தைலத்தில் லக்ஷ்மி இருக்கிறாள் என்பதை நாம் மறந்து விட்டோம். என்றாலும் அதுதான் தீபாவளிக் கதையை பூமாதேவியோடு மட்டுமல்லாமல், ஸ்ரீதேவியுடனும் சேர்த்து வைக்கிறது! வடக்கே தீபாவளியை விசேஷமாக லக்ஷ்மி பூஜையாகவே செய்து, வியாபாரிகள் புதுக் கணக்கு ஆரம்பிக்கிறார்கள். இதிலேயும் பூமா தேவியின் பெருமை தெரிகிறது. தன்னை எந்தத் திருஷ்டியிலும் பெருமைப்படுத்திக் கொள்ளாமல், சக்களத்தியான ஸ்ரீதேவிக்கும், பரமேச்வரனின் பத்னி ஸ்தானத்தில் நினைக்கப்படும் கங்கா தேவிக்குமே பண்டிகையில் ஸம்பந்தம் இருக்கும்படி செய்திருக்கிறாள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# வட்டமேஜை






தனிப்பட்ட, அந்தரங்க வாழ்க்கை நிகழ்வுகளை அறிந்து கொள்வதிலே அதீத வேட்கை காட்டும் ரசிகர்கள் உள்ள வரையில், இப்படிப்பட்ட கிசுகிசுக்கள் தான் பண்பாடற்ற ஒரு சில பத்திரிகைகளின் ஜீவன்.

மணவாளநகர், என்.பி.எஸ். மணியன்

✉ உட்கட்சி ஜனநாயகத்துக்கு என்று மதிப்பு தரப்படுகிறதோ, அன்றுதான் காங்கிரஸ் கட்சி உருப்படும். நச்சென்று சொல்லியிருக்கிறீர்கள் தலையங்கத்தில். சொல்லப்பட்டிருக்கும் அறிவுரைகளை, ஜி.கே.வாஸன் சரியாகக் கடைப்பிடித்தால், தமிழகத்திலும் காங்கிரஸ் தலை நிமிரலாம்.

மதுரை, என்.பாலகிருஷ்ணன்



✉ தன் தனிப்பட்ட சுக துக்கங்களை முழுமையாக ஒதுக்கிவிட்டு தனித்தனியே ஒதுங்கியிருக்கும் காங்கிரஸ் தலைவர்களை ஒருங்கிணைத்து, தொண்டர்களை உற்சாகப்படுத்தி வளப்படுத்துவதுதான், தற்போதைய தமிழக காங்கிரஸின் ஒருமித்த குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று ஜி.கே.வாஸனுக்கு 'ஸ்பெஷல் புத்துணர்ச்சி வகுப்பு எடுத்து இருக்கும் தலையங்கம் வெகு அருமை.

பள்ளிபாளையம், ரமேஷ்

## சூடான சமோசா!



✉ குஷ்பு பொங்குகிற ஸ்டைல், சிலரது ஸ்மைலைத் துடைத்தெறிந்திருக்கும்.

இசையன்விளை, பாலன்

✉ குஷ்புவின் வேதனையும், ஆதங்கமும் நியாயமானதே. நடிகர், நடிகையரின்



அனைவருக்கும் இனிய தீபாவளி வாழ்த்து!

- ஆர்.

✉ மக்களுக்கு நல்ல கருத்தைச் சொல்ல வேண்டும். அப்படித்தான் முன்பு இருந்தது. அதைத் தற்போதைய சினிமா கடைப்பிடிக்க வேண்டும் என டாக்டர் ராமதாஸ் சொல்வது 100% உண்மை.
சென்னை, கே.வி.ராமன்



✉ படுதலம் சுகுமாரன் எழுதிய 'நினைப்பதெல்லாம்' சிறுகதை மிகவும் சிறப்பு. 'சுப்பிரமணி' கதாபாத்திரம் நெஞ்சில் கண்ணாடியாய் ஒட்டியது.
காமநாயக்கன்பாளையம், மா.மோகனராசன்

✉ மீனவக் குப்பத்திலும், குழந்தைகள் காப்பகத்திலும் மேஜிக் செய்து காண்பித்து, தமது கலையை விலையாக்காமல், ஏழை எளியவர்களை சந்தோஷப்படுத்தி, எங்கள் இதயங்களை கொள்ளையடித்து விட்டார் அலெக்ஸ்!
வேலூர், வே.ந. கதிர்வேல்

✉ கிரிக்கெட் சுசமுசா செய்திகள் முற்றிலும் புதியவை. இந்தக் குளிருக்கு இதமான சூடான சமோசா.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ முதல் பக்கத்திலும், கடைசி பக்கத்திலும் மாஸ்டர் அர்ஜுன் பாவனை, ஏ.ஒன்!
சென்னை, பெ.தர்மன்

✉ வாடிடும் மனிதப் பயிரை காணும் போதெல்லாம் வருந்தி - கால் வயிற்றுக் கேனும் அன்னமிட்டு, மனிதத்தைக் காத்து வரும் ராமாண்டி சிறந்த மனிதர்.
திண்டுக்கல்,
தயாகவிச் சிற்பி



✉ 'குங்குமம்' இதழ் 9 லட்சத்தைக் கடந்து விற்பனையாவது குறித்து (இக்கடிதம் எழுதும்போது 10 லட்சத்து 11 ஆயிரத்து 660?) தராசாரின் பதில் பளிச். இலவசப் பொருள்களை நிறுத்துவார்களானால் விற்பனை எவ்விதம் இருக்கும் என்பது எவரும் யூகிக்கக் கூடியதுதான்!

ஆலங்குளம், ரா. சாலமோன்




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.330/-**
**ஆறு மாதம் : ரூ.165/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
**இலங்கை : ரூ.2000/-**

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு






**திருட்டு வீசிடி ஒழிப்பு! ஆங்கிலத்தில் படத் தலைப்புகள் தவிர்ப்பு! ரஜினி படப் பிடிப்பு என, ஏகத்துக்கும் பரபரப்பு கூடியிருக்கும் கோடம்பாக்கத்திலிருந்து தீபாவளிப் பரிசாக ஏழு படங்கள். கடைசி நேரத்தில் ஒரு சில படங்கள் கழன்று கொண்டால், அதற்கு 'கல்கி' பொறுப்பல்ல. இதோ தீபாவளி டிரெய்லர்!**

### நெறைஞ்ச மனசு:

விஜய்காந்த் நூற்று நாற்பத்தைந்து படங்களில் நடித்திருக்கிறார். அவற்றில் நூறு படங்கள் மண்வாசனைப் படங்கள். அவருக்கு அதிக வெற்றிகளைத் தந்திருக்கும் படங்களும் கிராமத்துப் படங்கள் தான். நெறைஞ்ச மனசு அசல் மயில் மார்க் பட்டாசு மாதிரி, அசல் கிராமத்துப் படம். மதுரை மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் நடக்கிறது கதை. குற்றப்பரம்பரை என்று முத்திரை குத்தப்பட்டு, போலீசாராலும், அரசாங்கத்தாலும் ஒதுக்கப்பட்ட ஓர் ஊரை, முன் மாதிரி கிராமமாக உருவாக்குகிறார் அய்யனார் என்ற இளைஞர். அந்த இளைஞர் வேறு யாருமல்ல, விஜய்காந்த்தான். (விஜய்காந்த் போன்ற ஹீரோக்களுக்கு இரட்டை வேடம் போட்டால்தான் வயதாகும்) கமலுக்கு ஒரு தேவர் மகன் என்றால், விஜய்காந்துக்கு நெறைஞ்ச மனசு என்று அடித்துச் சொல்கிறார் படத்தின் இயக்குனர் சமுத்திரக்கனி. 'உன்னைச் சரணடைந்தேன்' என்ற யதார்த்தமான படத்தைத் தந்தாரே அதே சமுத்திரக்கனி.



### சத்ரபதி:

தமது தோற்றத்துக்கேற்ற கதைகளில் அதிக ஆர்வம் காட்டி வரும் சரத்குமார், "சத்ரபதியில் கொஞ்சமல்ல, நிறையவே வித்தியாசமாக வரப்போகிறேன்" என்கிறார். "எந்தவித ஹீரோயிச பில்ட்-அப்பும் இல்லாமல், இயல்பான பஸ் டிரைவராக அறிமுகமாகும் சரத்தின் உண்மையான கேரக்டர் என்ன என்பது, பத்தாவது ரீலில்தான் தெரிய வரும்" என்று கூடுதல் பில்ட்-அப் கொடுக்கிறார் படத்தின் இயக்குனர் ஸ்ரீமகேஷ். சரத் ஏற்றிருக்கும் பாத்திரத்தில் அப்படி என்ன புதுமை? சமுகத்தின் மீது கோபம் கொண்ட இளைஞர்! (உடலை பிரமாதமாக பராமரிப்பதால் இவரை இளைஞர் என்று ஓரளவு ஏற்றுக் கொள்ளலாம்.)

### அட்டகாசம்:

அஜித்துக்கு இரட்டை வேடப் படங்கள் எல்லாமே


ஆனைவெடி அஜீத்...
மத்தாப்பு மன்மதன்...
சங்குசக்கர சரத்...
தௌசன்வாலா தனுஷ்...
விஷ்ணு சக்கரம் விஜயகாந்த்...!

சூப்பர் ஹிட் ரகம். அதிலும் அஜித் - சரண் கூட்டணி என்றால் சொல்லியடிப்பதுதான் வழக்கம். 'வாலி', 'வில்லன்' படங்களைத் தொடர்ந்து இப்போது அட்டகாசத்திலும் டுயல் ரோல். ஒருவர் சென்னையில் டிரைவிங் ஸ்கூல் நடத்தும் ரோமியோ! மற்றொருவர் தூத்துக்குடி துறைமுகப் பின்னணியில் தாதா. இருவருக்கும் இடையில் உறவு ரீதியாக எந்தத் தொடர்பும் இல்லை. சென்னைக்கும் தூத்துக்குடிக்கும் இடையில் ஏகப்பட்ட தூரம். பிறகு எந்தச் சூழ் நிலையில் இவர்கள் சந்தித்துக் கொள்ளப் போகிறார்கள்? "திரைக்கதையில் திருப்பமே அதுதான்'' என்கிறார் சரண். அஜித்தோ




"காமெடியிலும், ஆக்ஷனிலும் ஒரு கை பார்த்திருக்கிறேன். அதை மக்கள் சொல்லட்டும்" என்று நெஞ்சை நிமிர்த்துகிறார்.

**மன்மதன்:**

தனுஷின் எக்குத்தப்பான வெற்றியால் ஆடிப்போன சிலம்பரசன், ஒரு மெகா வெற்றியைக் கொடுத்தே தீருவது என்று, தமக்காக தாமே கதை, திரைக்கதை எழுதியிருக்கும் படம். (படத்தையும் கூட அவரேதான் இயக்கினார். அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்ட முருகன் ஒப்புக்குச் சப்பாணிதான் என்கிறது கோடம்பாக்கம்) படத்தின் தலைப்பே, கதை ஒரிஜினல் முனியாண்டி விலாஸ் என்பதைச் சொல்லிவிடுகிறது. என்றாலும் தயாரிப்பாளரைத் தாஜா செய்து கேட்ட வகையில் "மன்மதன் ஒரு பிளேபாய்! அழகான பெண்களைப் பார்த்துவிட்டால், முதலில் கனவில் அவர்களோடு குடும்பம் நடத்துவான். அடுத்து நேரிலேயே அணுகுவான். மனநல ஆலோசனை தரும் பெண் உளவியல் நிபுணர் மந்திராபேடியைக் கூட விட்டு வைக்காதவன் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி அதிர வைக்கிறார்.

**ட்ரீம்ஸ்:**

சிம்புவின் படத்துக்குப் போட்டியாக இருக்கட்டும் என்று, தனுஷை இரவு பகலாக நடிக்க வைத்து படத்தை முடித்திருக்கிறார்களாம். "சக்தி என்ற கல்லூரி மாணவனைச் சுத்தித்தான் கதை. இது தனுஷுக்கான கதை இல்லை,

> ''ஐயோ வேணாம்னு அந்தப் போலீஸ்காரர் அலறியடிச்சுக்கிட்டு ஓடறாரே! என்ன கேட்டே அவரிடம்?''
>
> ''லேட்டஸ்ட்டா வந்திருக்கிற ஜெயலக்ஷ்மி வெடி வேணுமா ஸார்னு!''
>
> - உ. ராஜாஜி

அவனது வயசுக்கான கதை" என்கிறார் ட்ரீம்ஸ் படத்தை இயக்கியிருக்கும் தனுஷின் தந்தை கஸ்தூரி ராஜா.

'கல்லூரி வளாகத்தில் கிடைக்கும் நட்பு, காதல், கனவுகள் எதுவுமே வாழ்க்கைக்கு உதவாது' என ஃப்ளாஷ்பேக்கில் நினைத்துப் பார்க்கும் ஆட்டோகிராஃப் சாயல் கொண்ட கதை. முதல் முறையாக தனுஷ் படத்துக்கு பரத்வாஜ் இசை.

இவற்றைத் தவிர அருண் விஜய குமார் பெரிதும் நம்பும் 'ஜனனம்', சத்தியராஜின் 'மகா நடிகன்' படங்களும் கோதாவில் குதிக்கின்றன. எந்தப் படம் யானைவெடி, எந்தப் படம் ஊசிவெடி என்பது அடுத்த வாரம் தெரிந்துவிடும்.

**- ஸ்ரீசக்கரம்**

படங்கள் உதவி : **ஜான்சன், நிகில், மௌனம் ரவி**

**COT WITH STORAGE**



More than 25 Models

**SOFA SETS**



More than 50 Models

**DINING SETS**



More than 50 Models

**WOODEN WARDROBES**



More than 25 Models

# Mega Furniture Fair 2004

## Till Nov. 14, 2004

Upto **30% Off***

## Genuine Discounts!!

**Sunday Open**

*Ample Car Parking* *Credit Cards Accepted*

**SATHYA MAHAL**

New # 139, R H Road, (Near Sanskrit College ) (Entrance at Brindavan Street) Mylapore, Chennai - 4. Ph : 24982930 / 31

**STEEL ALMIRAHS**



More than 50 Models

**SOFA-CUM-BED**



More than 10 Models

**Also Available**

Institutional Furniture
Slotted Angle Racks
Industrial Lockers
Kitchen Cabinets
Filing Cabinets
Book Case

**Exchange Option available for Old Furniture**

**ENTERTAINMENT SETS**



More than 50 Models,

**COMPUTER TABLES**



More than 50 Models

**OFFICE CHAIRS**



More than 50 Models

**EXECUTIVE TABLES**



More than 50 Models



'அட்டகாசம்' படப்பிடிப்பின் சண்டைக் காட்சியில் உஷ்ணமாக நடித்துக் கொண்டிருந்த அஜித்தை, அதிர வைக்கும் எட்டுக் கேள்விகளோடு சந்தித்தோம். கடைசி வரை நாக் அவுட் ஆகாமல் தாக்குப் பிடித்தார். அவ்வப்போது அணுகுண்டாகவும் வெடித்தார். இதோ அவரது ராக்கெட் பாய்ச்சல்...



**கார்பந்தயத்தில் காட்டிய ஈடுபாட்டை நீங்கள் கதைத் தேர்வில் காட்டவில்லை என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?**

உங்களுக்கென்ன செலக்டிவ் அம்னிஷியாவா? உன்னைத்தேடி, ஆனந்த பூங்காற்றே, வாலி, அமர்க்களம், தீனா, சிட்டிசன், முகவரி, நீ வருவாயென, கண்டு கொண்டேன் கண்டு கொண்டேன் உட்பட, வரிசையாக ஒன்பது வெற்றிப் படங்கள் கொடுத்தேன். ஒவ்வொன்றும் மாறுபட்ட கதையம்சம் கொண்ட படங்கள். எனது பாத்திரங்களும் வெவ்வேறானவை. நடுவில் ரெட், ராஜா, ஆஞ்சநேயா ஆகிய மூன்று படங்கள் மட்டும்தான் தோல்விப் படங்கள். இளைய தலைமுறை ஹீரோக்களில் வெரைட்டியான கேரக்டர், புது கெட்அப்புகள் போடும் டிரெண்டை முதலில் ஆரம்பித்து வைத்ததே நான்தான். 'முகவரி' எத்தனை எதார்த்தமான படம். பிறகெப்படி நீங்கள் இப்படியொரு கேள்வியைக் கேட்கலாம்?



**இயக்குனர்கள் ஹீரோக்களாக ஜெயிப்பதில் உங்களைப் போன்ற முன்னணி ஹீரோக்கள் சந்திக்கும் எதிர்விளைவுகள் என்ன?**

எதுவுமில்லை. ரசிகர்களாகிய மக்கள் கையில் தீர்ப்பு இருக்கிற வரை, யார் வேண்டுமானாலும் ஹீரோவாக வரலாம். இதற்காக டென்ஷன் ஆவது நம்மை நாமே கண்ணாடியில் பார்த்து பயப்படுவது மாதிரி. இது கிவ் அண்ட் டேக் ரிலேஷன்ஷிப். நிறைய நடிகர்கள், பெரிய இயக்குனர்களாக ஜெயித்திருக்கிறார்கள். இதற்கு வடக்கே ராஜ்கபூர் நல்ல உதாரணம். இங்கே கமல் சார்.



**நந்தா, நியூ போன்ற கதைகள் நீங்கள் நிராகரித்தவை. அந்தப் படங்கள் இப்போது பெரும் வெற்றியைச் சந்தித்திருக்கும் நிலையில் அவற்றை பேரிழப்பாகக் கருதுகிறீர்கள் இல்லையா!**

நிச்சயமாக இல்லை! அவரவர்க்கான அரிசியில் அவரவர் பெயர்கள் எழுதப்பட்டுள்ளது. அதை நான் நம்புகிறேன். எனக்கு என்ன வரவேண்டுமோ, அது என் மடியில் வந்து சேரும். வராமல் போனதற்காக வருத்தப்படுகிறவன் அல்ல இந்த அஜித்.



**தொடர்ச்சியான தோல்விகளால் துவண்டுபோனது**

# – அஜித்திடம்



# நீங்க நடிகரா? தாதாவா?

## 8 'அட்டகாச' கேள்விகள்!

**உண்மைதானே?**

இன்றைய தேதிக்கு தோல்வி என்பது போலியோ டிராப்ஸ் போல ஒரு கட்டாய ஆண்டிபயாடிக். தோல்வியை ஏற்றுக் கொள்ளாதவன், வெற்றியைத் தொடும் முன்பே முடமாகி விடுவான். இதில் நான் மட்டும் தோல்வியைச் சந்திக்க மாட்டேன் என்றால் முடியுமா? தோல்வி, புறக்கணிப்பு, நிராகரிப்பு, ஒடுக்குமுறை, ஏக்கம், போராட்டம் வெற்றி எல்லாம் இருந்தால்தான் வாழ்க்கையில் ஒரு 'பெப்' இருக்கும். தென்னாப்பிரிக்காவில் காந்திஜியை ரயிலில் இருந்து வெளியே தள்ளி விட்டார்கள். அப்போதுதான் நிராகரிப்பின் வலி அவருக்குப் புரிந்தது. அதன் பிறகுதான் போராட்டத்தின் தேவையை உணர்ந்தார். மகாத்மாவுக்கே விழிப்புணர்வு தேவைப்படுகிறபோது, அஜித் எம்மாத்திரம்? நாளை பற்றி எனக்குத் தெரியாது. இன்று தெளிவாக இருக்கிறேன்.

**அரசியலுக்கு வரத் துடிக்கிறவர்களிடம் மூன்று நோக்கங்கள் இருக்கின்றன. அரசியலுக்குப் போனால் நிறையப் பணம் சம்பாதித்து விடலாம் என்பது தான் டாப் ஒன்.**



**அரசுடன் மோதுவது, அரசியல்வாதிகளோடு மோதுவது, தம்மை வருங்கால முதல்வராக பில்ட்அப் செய்து கொள்வது என்று பல பெரிய ஹீரோக்கள், பெரிய கனவுகளோடு உலா வருகிறார்கள். தமிழகத்திற்கு மற்றொரு எம்.ஜி.ஆர். சாத்தியமா?**

இதுவரை சினிமாவிலிருந்து மூன்று முதலமைச்சர்கள் கிடைத்திருக்கிறார்கள். அவர்கள் சினிமா உலகைச் சேர்ந்தவர்கள் என்பதற்காக மட்டும் அரசியலில் அவர்களுக்கு வெற்றி கிடைத்துவிடவில்லை. முதலில் கட்சி உறுப்பினராகி, பிறகு தீவிர தொண்டராக உழைத்து, பிறகு தொண்டர்களின் நம்பிக்கையைப் பெற்று, கட்சியின் தலைமைப் பொறுப்பை அடைந்து மக்கள் மன்றத்தில் நிறுத்தப்பட்டவர்கள். இவர்களுக்கு சினிமா புகழ் ஒரு ஊன்றுகோலாக இருந்தது. அவ்வளவுதான்.

என்னைப் பொறுத்தவரை நடிகர் நடிகைகளின் பொறுப்பு, மக்களை சந்தோஷப்படுத்துவது. எந்தத் துறையாக இருந்தாலும் அரசு உதவி இல்லாமல் இயங்க முடியாது. எந்தக் கட்சி ஆட்சியில் இருந்தாலும் கலைஞர்கள் பொதுவானவர்களாக இருக்க வேண்டும். தங்களது தனிப்பட்ட உணர்வுகளை அரசு மீது காட்டக் கூடாது. ஆனால் பல பேர் இதைத்தான் செய்கிறார்கள். இது சினிமாவுக்கு நல்லதல்ல. உங்களுக்கு ஒரு தலைவரைப் பிடிக்கும் என்றால், அவர் தலைமையை ஏற்றுக் கொண்டு, அந்தக் கட்சியில் சேர்ந்து மக்களுக்கு என்ன செய்ய முடியும் என்று பாருங்கள். அதே நேரம் சினிமாவில் இருங்கள். மக்களுக்கு குழப்பம் வராது.

சில பேர் சுயமாக அரசியலுக்கு வர வேண்டும், ஆட்சியைப் பிடிக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். அப்படி ஆசைப்படுவதில் தவறில்லை. அவர்களுக்கு தகுதி இருக்கிறதா இல்லையா என்பதை மக்கள் முடிவு செய்வார்கள்.

**இத்தனை தெளிவோடு இருக்கும் நீங்கள், ஏன் அரசியலுக்கு வரக் கூடாது?**



நான் ஏற்கெனவே அரசியலில்தான் இருக்கிறேன். எனது ஜனநாயகக் கடமையாக ஒவ்வொரு தேர்தலிலும் எனது வாக்கை தவறாமல் போட்டிருக்கிறேன். யாருக்குப் போட்டேன் என்ற ரகசியம் காத்திருக்கிறேன். நீங்கள் கேட்பது தீவிர அரசியல் பற்றி. இன்று அரசியலுக்கு வரத் துடிக்கிறவர்களிடம் மூன்று நோக்கங்கள் இருக்கின்றன. அரசியலுக்குப் போனால் நிறையப்

பணம் சம்பாதித்து விடலாம் என்பது தான் டாப் ஒன். இரண்டாவது பதவி ஆசை. மக்களுக்கு சேவை செய்ய வேண்டும் என்பதை கடைசியில் தூக்கிப் போட்டுவிட்டார்கள். மக்களுக்கு சேவை செய்ய வேண்டும் என்று வந்தவர்கள் தான் எம்.ஜி.ஆர்., கருணாநிதி, ஜெய லலிதா போன்றவர்கள். தகுதியில்லாத வர்கள் யாரும் அந்தப்பதவியில் உட் கார்ந்தது கிடையாது. நான் அரசியலுக்கு இப்போது வரவில்லை. ஏனென்றால் எனக்கு வயது போதாது. பக்குவம் போதாது. நான் அரசியலுக்கு ஆசைப் படுவதை விட, நான் வர வேண்டும் என்று மக்கள் விரும்ப வேண்டும். அரசியலை வெறுத்து ஒதுக்குபவன் அல்ல அஜித். அரசியல் மூலம்தான் நாட்டுக்கு நல்லது செய்ய முடியும். ஏழ்மையை ஒழிக்க முடியும். அதற்காக வீட்டுக்கொரு கட்சி தொடங்கினால் நாடு விளங்காது. தலைவர்கள், பிறக்கிறார்கள். தயாரிக்கப்படுவதில்லை.



**அஜித் பாய்ச்சல்! அஜித் சீறல்! எனத் தலைப்பிட்டு வெளி யாகும் உங்கள் பேட்டி களில் தாங்கமுடியாத வெப்பம்! நீங்க என்ன நடிகரா? தாதாவா?**

தெரியாது! நான் நானாக இருக்கிறேன் அவ்வளவுதான்! வேஷம் போடவில்லை. திரையுலகில் எனக்கு வேண்டாதவர் யாருமே கிடையாது. நான் இப்படி இல்லையென்றால் எல்லோரும் என்னை மிதித்துவிட்டுப் போய்விடுவார்கள். இங்கே எனக்கு காட்ஃபாதரோ, வழி காட்டியோ இல்லை. எனது ஒவ்வொரு முடிவையும் நானே யோசித்து எடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறேன். சில சமயம் எடுத்த முடிவு தப்பாகி விடுகிறது. பாடமும் கற்றுத் தருகிறது. வாழு! வாழவிடு! என்பதுதான் எனது கொள்கை. என்னை வழி மறித்துச் சீண்டினால் சும்மாயிருக்க மாட்டேன். நானொரு திறந்த புத்தகம். என்னைப் படிக்க டிக்ஷனரி தேவையில்லை. ஆனால் நான் எப்படி வாழவேண்டும் என்று நீங்கள் சொல்லாதீங்கள். எந்த உறவாக இருந் தாலும் மூக்கு நுனிவரைதான். நான் கொஞ்சம் ஒதுங்கியிருக்க நினைப்பவன். இது முரட்டுத்தனமோ, தாதாயிஸமோ அல்ல. நம் ஒவ்வொருவருக்கும் தேவைப் படும் பிரைவசி. இதைக் கேள்விகேட் டால் பொறுத்துக் கொண்டு சும்மா யிருக்க முடியாது. பத்திரிகைகளில் பேட்டி தரும்போது, நான் பேசும் விஷயங்களை கூர்மையான, அழகான வார்த்தைகளைப் போட்டு எழுதுகிறார்கள், அஜித்தின் பாய்ச்சல் என்று. இது பத்திரிகையின் மொழிச் சுதந்திரம். அதில் தவறு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. பரபரப்பாக படத்துக்கு தலைப்பு வைப்பதில்லையா, அப்படித்தான் இதுவும். பேட்டியின் தலைப்பை மட்டும் படிக்கிறவர்களுக்கு வேண்டுமானால், நான் தாதாவாகத் தெரியலாம். அதைப் பற்றிக் கவலைப்படுவது வீண்.



**நிறையப் படங் களில் நடிக்கிறீர்கள். ஆனால் எந்தப்படம் எப்போது வெளி யாகும் என்பது குழப்பமாகவே இருக் கிறதே?**

தீபாவளிக்கு 'அட்ட காசம்'. வாலி, வில்லன் படங்களை அடுத்து மீண்டும் இதில் இரட்டை வேடம். ஒருவன் ஜாலியான ஆள். இன்னொருவன் சீரியஸ் தாதா. இருவருக்குமே புதுமையான களைக்களம். பொங்கலுக்கு 'ஜி'. அரசியல் ஒரு சாக்கடை என்று சொல்லிவிட்டு ஒதுங்கிப் போய் விடாமல், களத்தில் குதிக்கும் ஒரு மாணவனின் கதை. எனவே அடுத்த ஆறுமாதத்திற்கு எனது ரசிகர்கள் மண்டையைப் பிய்த்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. அனை வருக்கும் அஜித் அண்ட் ஷாலினியின் தீபாவளி வாழ்த்துகள்!

சந்திப்பு: **ஜெய்**

அட்டை, படங்கள்: **ஸ்ரீஹரி**

தலைப்பு : **எதையும் ஒரு முறை**

கதை : **இ**தை சிறையிலிருந்து எழுதுகிறேன்





தலைப்பு : **கந்து வட்டி**

கதை : **ஸ்**டூலை உதைத்ததில் நின்றது.






தலைப்பு : **அப்பா**

டிஜிட்டல் கதை : **நெ**டுநேரமாக ஆடாமல் அசையாமல் செயலிழந்து அமர்ந்திருந்த அப்பாவின் தலையில் இருந்த பட்டனை அழுத்தி, ரீசெட் செய்தான் ஆத்மா.



தலைப்பு : **ரோபோ**

விஞ்ஞானக் கதை : **வி**ஞ்ஞானியான நான் தத்ரூபமாக மனிதனைப் போன்ற ரோபோட்டைப் படைத்தேன். உயிரூட்டியதும் அது கேட்ட முதல் கேள்வி - ராகு காலத்தில் பெத்துட்டியே...!

தலைப்பு : **காணிக்கை**

கதை : **கோ**யில் உண்டியலில் வைரக் கம்மல்... காதுடன்.



எம்.ஆர். மூர்த்தி

இறக்க விட்டுருவேனா...?

ஆளை விடுங்க நானே இறங்கிடறேன்

யோவ், ரப்பர் ஸ்டாம்பு இறங்குய்யா...!

இறக்கிட்டா நல்லது, ஆனா இறக்கணும்னு நான் சொல்லலை...

## ஆளுனரைப் பந்தாடும் அரசியல்!

'**மா**நில முதல்வரைக் கலந்தாலோசியாமல் ஆளுனரை மத்திய அரசு தனது விருப்பத்துக்கேற்ப மாற்றக் கூடாது' என்று தமிழக அரசு உச்சநீதிமன்றத்தில் மனு செய்ய, அந்த மனுவை நிராகரித்துவிட்டது உச்சநீதி மன்றம்.

'கருணாநிதி வற்புறுத்தியதன் பேரில்தான் கவர்னரை மாற்ற ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. அதை அனுமதிக்கக் கூடாது. மத்திய அரசு தனது விருப்பத்துக்கேற்ப ஆளுனரை மாற்றலாம் என்றால், 'விருப்பம்' என்பதற்கான முழு விளக்கம் தெளிவாக இல்லையே...' என்றெல்லாம் தமிழக அரசு சார்பில் அரசு வழக்குரைஞர்கள் வாதாடிப் பார்த்திருக்கிறார்கள்.

அத்தனை வாதங்களையும் ஒதுக்கித்தள்ளிவிட்டது உச்ச நீதிமன்றம். மனுவுக்கு வலுவான அடிப்படையே இல்லை என்றும் கூறியிருக்கிறது.

ஆளுனர் மாற்றம் என்பது அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படும் முன்னரே இவ்வளவும் நடந்துவிட்டது. அதற்குள் தமிழக அரசியல் தலைவர்கள் தங்கள் இஷ்டத்துக்குக் 'கமெண்ட்' அடித்து, ஆளுனருக்கும் அவரது பதவிக்கும் அவமரியாதை செய்தனர்.

"நாங்கள் ஒன்றும் ராம்மோகன் ராவ் மாற்றப்பட வேண்டும் என்று கேட்கவில்லை. ஆனால் அவர் மாற்றப்பட்டால்



கல்கி



**2004** நவம்பர் **7**
தாரண ஐப்பசி **22**
மலர் : **63**
இதழ் : **15**




மகிழ்ச்சியே!" என்றார் கருணாநிதி! தாங்கள் கொடுத்த மனுவின் பேரில் ஆளுனர் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை என்பது தி.மு.க. தரப்பின் ஆதங்கம்!

பா.ம.க. தலைவர் ராமதாஸோ, "ராம்மோகன் ராவ் ஒரு ரப்பர் ஸ்டாம்ப் ஆளுனர்" என்று விமர்சித்தார்!

உண்மையில், அனைத்து ஆளுனர்களுக்குமே அலங்கார, அடையாள பொறுப்புகள்தாம் பெரும்பாலும் உள்ளன. அரசு எப்படி நடக்க வேண்டும், அல்லது நடத்தப்பட வேண்டும் என்பதை அவர்கள் தீர்மானிக்க முடியாது. சட்டம் ஒழுங்கு அடியோடு சீர்குலைந்தாலோ, ஆட்சியில் உள்ள கட்சி பெரும்பான்மையை இழக்க நேர்ந்தாலோ, ஆளுனர், அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்யும்படி மத்திய அரசுக்குச் சிபாரிசு செய்யலாம். அதற்கு மேல் எந்த அதிகாரமும் அவருக்குக் கிடையாது. இத்தகைய அவசர நிலைகள் ஏற்படுகிறபோது, ஆளுனரின் பொறுப்பு அதிகமாகும். அத்தியாவசியமானதாகும். மற்ற காலங்களில் அதற்குப் பெரிய முக்கியத்துவம் கிடையாது. அவசர நிலையிலும்கூட, ஆளுனரின் சிபாரிசை ஏற்பதும் மறுப்பதும் மத்திய அரசின் முடிவுதான். எதையும் அவர் வலியுறுத்தவோ வற்புறுத்தவோ முடியாது.

இவ்வாறிருக்க, தமிழகத்து எதிர்கட்சிகள், தங்கள் கோரிக்கையை ஆளுனர் நிறைவேற்றவில்லை என்று குறைப்பட்டுக் கொள்வதோ, அவரை 'ரப்பர் ஸ்டாம்ப்' என்று அழைப்பதோ, அர்த்தமற்றது. காபந்து பொறுப்பு மட்டுமே வகிக்கிற ஒரு நியமனத் தலைவரை, மலிவான கட்சி அரசியலுக்குள் இழுத்து விமர்சித்துப் பந்தாடியிருப்பது அநாகரிகம்.

தாங்கள் அவ்வாறு கோரவே இல்லை என்று தி.மு.க. தரப்பு மறுத்துள்ளது. ஆனால், நேரடியாக கோரிக்கை வைக்காமல், மறைமுகமான அழுத்தங்களை மத்திய அரசுக்கு அக்கட்சி அளித்திருப்பது தெரிகிறது. ஆட்சி அமைக்கும் கட்டத்தில், இன்னின்ன







அமைச்சர் பதவிகள் தரப்பட வேண்டும் என்று நிபந்தனைகள் விதித்ததுபோல், ஆளுனர் விஷயத்திலும் நிபந்தனை விதிக்க, அந்த அழுத்தத்துக்கு மத்திய அரசு வளைந்து கொடுத்திருப்பதாகவே கருத இடம் இருக்கிறது.

எதிர்கட்சிகள் ஆட்சியை விமர்சிக்க வேண்டுமேயொழிய, ஆட்சிக்கு அச்சுறுத்தல் ஏற்படுத்த முயன்றுகொண்டே இருக்கக் கூடாது. அவ்வாறு செய்வது மலிவான அரசியல்.

தமிழக அரசும் இந்த விஷயத்தில் அவசர அதிரடியாக உச்சநீதிமன்றம் சென்றிருக்க வேண்டாம். இந்த ஆளுனரை மாற்றி வேறொரு ஆளுனரை நியமிப்பதன் மூலம் தமிழகத்துக்கோ அதன் ஆட்சிக்கோ எந்த பாதகமும் ஏற்பட்டுவிட முடியாது என்கிற நம்பிக்கை ஒரு மெஜாரிட்டி அரசுக்கு இருக்க வேண்டும். எதிர்கட்சிகள் அச்சுறுத்தினால் அச்சம் கொண்டு, அவசரமாக உச்சநீதிமன்றம் செல்ல வேண்டிய அவசியமென்ன? உள்துறை அமைச்சருடனான உரையாடலை நீதிமன்றத்தில் சாட்சியமாகச் சமர்ப்பிக்க முயன்றதும் அதனால் அவ்வுரையாடல் செய்தியாகி முரசறையப்பட்டதும் தவிர்த்திருக்க வேண்டிய காரியங்கள். இப்போது எதிர்கட்சிகள் இச்செயலை மேலும் அரசியலாக்கி கூக்குரல் எழுப்பவே வகை செய்துள்ளது.

ராஜினாமா செய்துள்ள ஆளுனரும் பத்திரிகைகளுக்கு அறிக்கை தருகிறேன் பேர்வழி என்று தன்னிலை விளக்கம் அளித்திருக்க வேண்டாம். அதில் 'சட்டம் ஒழுங்கு' குறித்து அபிப்ராய பேதம் இருக்கக் கூடும் என்று அவர் குறிப்பிட்டிருப்பது அவர் பேரில் எதிர்கட்சிகள் சுமத்தும் குற்றச்சாட்டை நியாயப்படுத்துவதுபோல் அமைகிறது.

மொத்தத்தில் தமிழ்நாட்டில் நிலவும் சட்டம் - ஒழுங்குப் பிரச்னையைக் காட்டிலும் தமிழக அரசியலில் நிலவுகிற 'சட்டம்' - 'ஒழுங்கு' பிரச்னைதான் அதிகமாக இருக்கிறது! ●

# திடீர் பரிசுப் போட்டி - 5

பெரிய இடத்து செல்ல மாப்பிள்ளையாகி விட்டார் தனுஷ்!

ரஜினிகாந்தின் மகள் ஐஸ்வர்யாவை மணக்கிறார். மணமக்களை தம்முடைய ஸ்டைலில் ரஜினி என்ன பஞ்ச் டயலாக் சொல்லி வாழ்த்துவார்? கற்பனை செய்து அஞ்சலட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்கள். சுவாரசியமான வசனத்துக்கு ரூ.200/- பரிசு.

**கடைசித் தேதி : 16.11.04**

ஆசிரியர் என்ன தீர்ப்பு சொல்றாரோ, அதுதான் இறுதி.

'திடீர்ப் போட்டி - 5' என்று குறிப்பிட்டு 'கல்கி'க்கு எழுதவும்.

படம் : **ஸ்ரீஹரி**

# பிரெஸ்டீஜின் பரந்த குடும்பம்.

(உங்கள் உறவினர் எண்ணிக்கை அளவு இந்த குடும்பம் இல்லாவிட்டாலும், நிச்சயமாக உங்களுக்கு இன்னும் உதவிடும்)


ராயல் – 4 பர்னர்


ராயல் – 3 பர்னர்


ராயல் – 2 பர்னர்


பர்ஃபெக்ட்

பிரெஸ்டீஜ் பிரஷர் குக்கரைப் பற்றி உங்களுக்கு நன்றாகவே தெரியும். இப்பொழுது இந்த குடும்பத்திலிருந்து இன்னும் பல அங்கத்தினர்களை சந்தியுங்கள். மிக ஸ்மார்ட்டான சமையலறை சாதனங்களின் பல வகைகள், பல மாடல்களில் ஒவ்வொன்றும் பார்க்க அழகான ஸ்டைலுடன் இருப்பது மட்டுமல்ல, சிறந்த திறமைசாலியும் கூட! உங்களுக்கு அதிக செலவும் வைக்காத அங்கத்தினர்கள் இவர்கள். சரி, இனி இந்த பிரெஸ்டீஜ் குடும்பத்தை உங்கள் இல்லத்துக்கு சந்தோஷத்துடன் வரவேற்கலாமே!


பிரெஸ்டீஜ் பவர் 750 வாட்ஸ்


மாரத்தான் – 3 ஜார்


மாரத்தான் EX - 30


ஹீரோ – 3 ஜார்




நீங்க இன்னும்
ஸ்மார்ட்டான கிச்சனுக்கு தயாரா?

Prestige SMART KITCHEN

**Prestige Smart Kitchen: Chennai:** Mount Road: Ph: 52140254 / 55 / 28523039 Velacherry: Ph: 22440705, Mylapore: Ph: 33867787 / 52031819, Anna Nagar: 223, 2nd Avenue 26209133 / 34, Y-220, II Avenue, Ph: 26267989 / 26266272 Vadapalani : Ph: 26267989 / 26266272. **Coimbatore:** D B Road Ph: 0422 — 2544554. **Tirunelveli:** Junction Bus Stand Ph: 0462 — 2333373. **Erode:** 761, Brough Road, Ph: 0424 — 2259615. **Madurai:** Near Chokkanathar Koil Ph: 0452 — 3092109 / 110. **Tuticorin:** 370/2A V E Road Ph: 0461 — 2323743. **Bangalore:** Malleshwaram: Sampige Road Ph: 51282050 Vijayanagar: II Stage RPC Layout Ph: 23119688 JPNagar II Phase: Near Foodworld Ph: 26492793 Indiranagar: CMH Road Ph: 25287831 Basavanagudi: Bull Temple Road, Ph: 26609012 Koramangala: C/O Fabmall, The Forum Ph: 22067650 KH Road: C/O BPL Gallery Ph: 22229160 Rajajinagar: Modi Hospital Road Ph: 23501069 R.T Nagar: I Block, Ph: 23335866

Mudra South:Prestige:6885:04:TAM

சமீபத்தில் நான் தஞ்சாவூர் ஜில்லாவுக்குப் போயிருந்தபோது, இரண்டு மூன்று தாலுகாக்களில் எல்லாரும் ஒரு விஷயத்தைப் பற்றி இடைவிடாமல் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சீகாழி தாலுகாவைச் சேர்ந்த ஒரு கிராமத்தில், திடீரென்று ஒரு நாள் ஐந்தாறு குடித்தனக்காரர்கள் ஊரை விட்டு ஓடிப்போனார்களாம். அவர்களுடைய வீடுகள் இடிக்கப்பட்டன ; ஒரு வீடு அஸதிவாரம் வரையில் இடிக்கப்பட்டுத் தரைமட்டமாகிவிட்டது. மேற்படி



# கலாட்டா!

வீடுகளிலிருந்த சாமான்கள் எல்லாம் சூறையிடப்பட்டன. அவர்களுடைய நிலங்கள் எல்லாம் அறுவடை செய்யப்பட்டன; நெல் போன இடந் தெரியவில்லை.

முதன் முதலில் ஓடிய் குடித்தனக்காரன், தன் குடும்பத்தை ஊரில் விட்டு விட்டுத் தான் மட்டும் ஓடினான்; அவன் வீட்டு ஸ்திரீ மகா பயங்கரமான கொடுமைகளுக்கு உள்ளானாளென்று வதந்தி.

கொஞ்சநாள் வரையில் இந்த அக்கிரமங்களைக் கேட்பாரே இல்லையென்று இருந்தது. பிறகு, நிலவரி பாக்கி விழுந்ததின்மேல், டிபுடி கலெக்டர் விசாரணை செய்ததில் விஷயம் வெளியாயிற்று. டிபுடி கலெக்டர் ஸ்தலத்திற்குப் போய்ப் பார்த்தார். இடித்துத் தரைமட்டமான வீட்டின் போட்டோ படம் கூட எடுத்துக் கொண்டார். அவர் தீவிரமாக நடவடிக்கை எடுத்து, மேற்படி அக்கிரமங்களுக்குக் காரணமானவனைக் கண்டு பிடித்துத் தண்டிக்க ஏற்பாடு செய்வார் என்று எதிர்பார்க்கப்பட்டது.

அந்த டிபுடி கலெக்டர் வேறிடத்துக்கு மாற்றப்பட்டார்!

இதற்கிடையில், அதே கிராமத்தைச் சேர்ந்த ஒரு பிரபலஸ்தர் சில நாளாக ஆஜரில்லாமலிருக்கிறார். சமீபத்தில்தான் அவர் ஜில்லா போர்டு மெம்பர் ஆனவர். 'பெரிய இட'ங்களுக்கு அவர் வேண்டியவராம். அவரைப் பிடித்துக் கேட்டால் மேற்படி அக்கிரமங்களைப் பற்றிய உண்மை வெளியாகும் என்று சொல்கிறார்கள். ஆனால் 'பெரிய இடங்கள்' இதற்குத் தடையாயிருப்பதாக ஜனங்கள் நம்புகிறார்கள். அவர்மேல் போலீஸ் வாரண்டு இருப்பதாகச் சிலரும், இல்லையென்று சிலரும் சொல்கிறார்கள்.

அக்கிரமங்களுக்கு இது வரையில் எவ்விதப் பரிகாரமும் ஏற்படவில்லை; ஏற்படுமென்பதற்கு அறிகுறிகளும் காணோம். கிணற்றில் கல் போட்டதுபோல் இருக்கிறது.

இந்த சம்பவங்களைப் பற்றி அடிக்கடி எல்லாரும் பேசுகிறார்கள். "ஏது! தடியெடுத்தவன் தண்டல்காரன் என்றாகி விட்டது; அக்கிரமத்துக்குத்தான் காலம் போயிருக்கிறது" என்கிறார்கள். "இப்படியெல்லாம் சொல்கிறீர்களே? ஏன் ஏதாவது நடவடிக்கை எடுக்கக் கூடாது?" என்று இரண்டொருவரைக் கேட்டேன். "நாங்கள் என்ன செய்ய முடியும்? நடக்கிறது நடந்து விட்டுப் போகிறது" என்றும், "டிபுடி கலெக்டராலேயே முடியவில்லையே? நம்மால் முடியுமா?" என்றும் சொல்கிறார்கள். "இன்று அந்தக் கிரா

மத்தாருக்கு வந்தது நாளை உங்களுக்கு வராதா?" என்று கேட்டால், "வந்தால் அநுபவிக்க வேண்டியதுதான்!" என்று நிம்மதியாக பதில் அளிக்கிறார்கள்.

இத்தகைய மனோபாவம் தேசத்தில் குடிகொண்டிருக்கும் வரையில், சுயராஜ்யம் வந்துவிட்டால்தான் நாம் என்ன வாழ்ந்துவிடப் போகிறோம் என்று யோசிக்க வேண்டியிருக்கிறது. இவ்வளவு அசிரத்தை இருந்தால், வருங்காலத்தில் பொதுக் காரியங்களை எப்படி நடத்தப்போகிறோம்?

அந்தப் பிரதேசத்தில் படித்தவர்கள், வக்கீல்கள், பெரிய பெரிய மிராசுதார்கள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். அவர்களில் பத்துப் பேர் மனது வைத்து முனைந்தால் இதற்கு நியாயம் பிறப்பிக்கலாம். அதற்கு எத்தனையோ வழிகளுண்டு. பொறுப்பான நபர்கள் சிலர் சேர்ந்து, உண்மையான விவரங்களை விசாரித்துப் பத்திரிகைகளில் பகிரங்கப்படுத்தலாம்; அந்த ஜில்லாவின் சட்ட சபை மெம்பர்களை வருவித்து, விஷயங்களை எடுத்துச் சொல்லிச் சட்ட சபையில் கேள்விகள் போடச் சொல்லலாம்; அரசாங்கத்துக்குப் பொதுஜன விண்ணப்பம் கூட அனுப்பலாம். ஊக்கமுள்ள மனிதர்களுக்கு எத்தனையோ வழிகள் தோன்றும்.

இத்தகைய முயற்சிகளினால், அந்தப் பிரதேசத்திலுள்ள உத்தியோகஸ்தர்கள் கூட சந்தோஷமேயடைவார்கள். இம்மாதிரி சந்தர்ப்பங்களில், பொதுஜன அபிப்பிராயம் தங்களுக்குப் பக்க பலமாயிருக்கிறதென்று தெரிந்தால்தான், அவர்களும் தீவிரமாக எடுத்துக் கொள்ளுதல் சாத்தியமாயிருக்கும்.

கஷ்டங்களையும் அநீதிகளையும் பார்க்க சகியாமல் ஓடிப்போகிறவர்கள்; அவற்றை வேடிக்கையென்று பார்த்து அநுபவித்து சந்தோஷப்படுகிறவர்கள்; - இவர்களே நமது தேசத்தில் அதிகமாயிருக்குவரையில், தேசிய முயற்சி எதுவுமே உருப்படாது. மூன்றாவது ஒரு வகுப்பினரும் சிலர் இருக்கிறார்கள் என்பதுதான் நமக்கு ஒருவாறு நம்பிக்கை தருகிறது. இவர்களும் கஷ்டங்களையும் அநீதிகளையும் பார்க்கச் சகியாதவர்கள் தான்; ஆனால் அவர்கள் ஓடிப்போவ



தில்லை; கண்ணை மூடிக் கொள்வதுமில்லை. அந்தக் கஷ்டங்களையும் அநீதிகளையும் நிவர்த்திக்க இடைவிடாமல் வழிதேடுவார்கள். இவர்கள் தேசத்தில் மேலும் மேலும் அதிகமாகாதவரையில் நமக்கு சுயராஜ்யம் வந்தாலும் பிரயோஜனமில்லை; அப்படி அது அவசரப்பட்டுக் கொண்டு வந்துவிடவும் செய்யாது.

- 'கல்கி களஞ்சியம்'
தொகுப்பிலிருந்து,
வானதி பதிப்பகம்
படம் : ஸ்ரீஅரசு



அமரர் கல்கி

அன்னாபிஷேக அலங்காரத்தில் பெத்தனாட்சி விநாயகர்



# எங்க ஊர் பிள்ளையார்

**விநாயகருடன் வாசகர்கள் பங்கேற்கும் புதிய பகுதி**

பிள்ளையாரே வாரும்
பிழை வராமல் காரும்
மழை வரக் கண் பாரும்
மகாதேவன் மகனே!

விககனரே வாரும்
சர்க்கரைக் கற்கண்டு
முக்கனியும் தேனும்
முன்னுடன் பலாக்காய்
முடிச்சுடன் கரும்பு

# தோப்புக்கரணம் போடுவது ஏன்?

அதிரசம் வகைகள்
அவல் கடலை தேங்காய்
அப்பனே உனக்கு...
ஒப்புடன் படைப்பேன்
எண்ணுந்துணை செய்வாய்
ஈச்வரன் மகனே!
(பழந்தமிழ்ப் பாடல்)

## தோப்புக்கரணம் போடுவது ஏன்?

கணபதியார் இருக்காரே, அவர் ரொம்ப ரொம்ப சிம்பிள் சாமி! அவரைக் கும்பிடுவதற்கு சிரமப்பட வேண்டியதில்லை. அலகு குத்திக் கொள்வதோ, காவடி சுமப்பதோ, தீ மிதிப்பதோ விநாயகப் பெருமானுக்குத் தேவையேயில்லை. தோப்புக்கரணம் போட்டு, இலேசாகக் குட்டிக் கொண்டாலே போதும்; கன குஷியாகிவிடுவார்.

இந்தத் தோப்புக் கரணத்தை ஆதியில் உண்டாக்கியவர் மஹா விஷ்ணுதான்! ஒரு சமயம், திருமால், தம்முடைய சகோதரி பார்வதியைப் பார்ப்பதற்கு கைலாஸத்துக்கு வந்திருந்தார். மஹா விஷ்ணுவுக்கு, மருமகன் கணேசன் என்றால் கொள்ளைப் பிரியம். பால கணேசனைத் தூக்கி வைத்துக் கொண்டு, கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்த மகா விஷ்ணு, தம்முடைய சக்கரத்தைச் சுற்றி குழந்தைக்கு வேடிக்கை காட்டினார். உடனே குழந்தை, தும்பிக் கையை நீட்டிச் சக்கரத்தைப் பிடுங்கிக் கொண்டு, 'லபக்'என்று வாய்க்குள் போட்டு, நன்றாக அடக்கிக் கொண்டு விட்டது.

மஹாவிஷ்ணுவுக்கு 'திக்'என்று ஆகிவிட்டது. அன்பாக அதட்டி, நயமாகக் கெஞ்சி என்னதான் செய்தாலும், பாலகணேசன், சக்கரத்தை வெளியே போடுவதாயில்லை. அழகாய் அடம் பிடித்து விளையாடியது குழந்தை.



அப்போதுதான் மஹாவிஷ்ணுவுக்கு அந்த யோசனை உதித்தது. காதைப் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போட்டார். இரண்டு கைகளால், மாறு காதுகளைப் பிடித்துக் கொண்டு, மனுஷர்கள் தோப்புக் கரணம் போட்டாலே கொஞ்சம் வேடிக்கையாகத் தான் இருக்கும். அதிலும் மஹாவிஷ்ணு நான்கு கைகளால் காதுகளைப் பிடித்துக்



## ஆரம்பித்தது அருந்ததி!

விநாயகருக்கு முதன் முதலில் கொழுக்கட்டை நிவேதனம் செய்தவர் அருந்ததி.

கணபதி வழிபட்டில் முதலிடம் பெறும் மாநிலம் மகாராஷ்டிரம்.

விநாயகர் அருள் பெற்றுத் திருமுறைகளை நமக்குத் தொகுத்துத் தந்த அருளாளர் நம்பியாண்டார் நம்பி.

- கூந்தலூர் ஜெயராமன்

கொண்டு கோணங்கி காட்டியதும், தொந்திக் குழந்தை விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தது. வாய்விட்டுச் சிரித்ததும், வாயில் அடக்கிக் கொண்ட சக்கரமும் வெளியே வந்து விழுந்தது. மஹாவிஷ்ணு மாமா, 'சடக்' என்று சக்கரத்தை எடுத்து வைத்துக் கொண்டு விட்டார்.

'தோர்பி' என்றால், கைகளால், 'கர்ணம்' என்றால் காது... கைகளால் காதைப் பிடித்துக் கொள்ளும் 'தோர்பி (ஸ்) கர்ண'மே தோப்புக் கர்ணம் என்றாகி விட்டது.

தலையில் குட்டிக் கொள்ளும் வழக்கம் வந்ததற்குப் பல கதைகள் சொல்லப் படுகின்றன. கணபதி காக்கை உருவ மெடுத்து வந்து, அகத்திய முனிவரின் கமண்டலத்திலுள்ள காவிரி நீரைக் கவிழ்த்து, பிறகு குறும்புமிக்க வேதியச் சிறுவனாக அவர் முன் தோன்றி நின்று சிரித்தாராம். குறுமுனி, அவர் தலையில் குட்டுவதற்காக கையை ஓங்கியபடியே விரட்டிக் கொண்டு ஓடினாராம். பிறகு, குறும்புச் சிறுவன், விநாயகப் பெருமான் தான் என்பது தெரிந்ததும், தம் தலையிலேயே குட்டிக் கொண்டாராம்.

தோப்புக் கரணத்துக்கும், தலையில் குட்டிக் கொள்வதற்கும் அக்யூ பிரஷர் ரீதியாக சில மருத்துவ குணங்கள் உண்டு என்றும் சொல்கிறார்கள்!

யோக தத்துவ ஆராய்ச்சியாளர்கள் இதற்குத் தரும் விளக்கம் மேலும் சிறப்பானது. மனித உடலில் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞேயம், ஸஹஸ்ரம், என்னும் ஏழு சக்கரங்கள் இருக்கின்றன. அவற்றில் சுவாச நடப்பு இருக்கும். சிரசிலிருக்கும் ஸஹஸ்ரார கமலத்தில், ஆனந்தத்தின் அமுத நிலை அமைந்திருக்கும். அந்த ஆனந்த அமுது, ததும்பி, நாடி நரம்புகளில் சுவாசத்தோடு பாய்வதற்காக, சிரசில் குட்டிக் கொள்கிறோம் என்கிறார்கள்.

சுவாஸத்தின் கதியின் மாறுதல்களால் நம் உள்ளம் உயரும். தெய்வீகமான மாறுதல்கள் உண்டாகும்.

## தேனியில் இனிப்பவர்




சூப்பர் ஆடியோ நிறுவனத்தினர் வழங்கும் 'ஓம் கணபதி ஓம்' ஆன்மிகம் மணக்கும் ஆடியோ சிடி பரிசு.

எந்த நல்ல காரியமானாலும் தேனி நகர மக்கள் பெத்தணாட்சி விநாயகரை வழிபட்டுத்தான் ஆரம்பிப்பர். மார்கழி மாதம் சபரிமலைக்கு மாலை அணியும் ஐயப்ப பக்தர்கள் கூட்டம் அலை மோதும். கார்த்திகை மாதத்தில் நூற்றியெட்டு சங்கு அபிஷேகம் நடைபெறும். மார்கழி, ஆடி மாதங்களில் காய்கறி அலங்காரம், அன்னாபிஷேகம், சொர்ண புஷ்ப அலங்காரம், கலர்ப்பூக்கள் அலங்காரம், தேங்காய் அலங்காரம், அஷ்டலட்சுமி அலங்காரம், பைரவ அலங்காரம், நடைபெறும்.

கோவிலின் உள்ளே உள்ள வில்வ மரத்தின் கீழ், நாகராஜனுக்கு மாதமிரு முறை பிரதோஷ பூஜைகள் நடைபெறும். இக்கோவிலின் அர்ச்சகர் ராமசந்திரன், விநாயகரை அலங்காரம் செய்து அழகு படுத்துவதில் வல்லவர். அந்த அலங்காரம் பக்தகோடிகளுக்கு கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். இரயில்வே நிலையத்துக்கு அருகில் இருப்பதால் பயணிகள் ஸ்பெஷலாகி விட்டது. எங்கு சென்றாலும் இவரை வழிபட்டுத்தான் செல்வார்கள். வழித்துணையாகி, விநாயகரும் காக்கிறார்.

- தேனி ராஜதாசன்

படம் : கற்பகம் ரவி நாகராஜ்

வடலூர்
சுத்த சன்மார்க்க நிலையம்
மறுபதிப்புச் செய்துள்ள
உரைவேந்தர்
ஔவை துரைசாமிப்பிள்ளை
அவர்களின் விரிவுரையுடன்




திருஅருட்பிரகாச வள்ளலார்
அருளிய

# திருவருட்பா

*7500 பக்கங்களுக்குமேல்*
*10 தொகுதிகள் விலை ரூ. 3000.*

அருட்செல்வர்
டாக்டர் நா. மகாலிங்கம்
அவர்கள் அருளிய உதவியால்
**சலுகை விலையில்**
**ரூ.1250 மட்டுமே!**

ஆறு திருமுறைகளில் 399 பதிகங்களையும்- 5818 பாடல்களையும் கொண்ட இத்திருவருட்பா முழுமைக்கும், பண்டைக்கால உரையாசிரியர்களான இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உரைக்கு இணையாக உரை வகுத்துள்ளார் உரைவேந்தர் என்னும் பெரும் புகழ் பெற்ற பேராசிரியர், சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்!



வள்ளல் பெருமானின் அருள் திறத்தை, ஆன்மநேய ஒருமைப்பாட்டின் உயர்வை அறிந்து தெளிந்து திருவருட்பாக்களை நாளும் ஓதி நல்வாழ்வு பெறவும்; **'ஞானமுண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே'** என்னும் உயர்ந்த எண்ணத்தோடும் **அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம்** அவர்கள் அருளிய பொருளுதவியோடு **இந்நூலானது** சலுகை விலையில் ரூ.**1250**க்கே தரப்படுகிறது.

இந்நூலினை ஏ.பி.டி/டி.வி.எஸ் பார்சல் மூலம் பெற சலுகை விலை ரூ.1250 + அனுப்ப ஆகும் செலவு ரூ. 125 சேர்த்து ரூ. 1375 மட்டும் **VARTHAMANAN PATHIPPAGAM** என்னும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க வரைவோலை அல்லது மணியார்டர் மூலமாக வர்த்தமானன் பதிப்பக முகவரிக்கு அனுப்புக. (காசோலையினை தவிர்க்க)

**வர்த்தமானன் பதிப்பகம்** 40, சரோஜினி தெரு, தியாகராய நகர், சென்னை - 17. ✆ : 24364174

<u>தவணை முறையில் விலை ரூ.1500.</u>

தவணை முறை வருமாறு :

| | |
|---|---|
| முதல் தவணை (22.11.2004க்குள்) | ரூ. 500 |
| இரண்டாம் தவணை (22.12.2004க்குள்) | ரூ. 500 |
| மூன்றாம் தவணை (22.1.2005க்குள்) | ரூ. 500 |

பார்சல் மூலம் பெற விரும்புவோர் மூன்றாம் தவணையுடன் ரூ. 125 சேர்த்து அனுப்புக.

★ மூன்று தவணைகளையும் குறிப்பிட்ட காலத்திற்குள் அனுப்புவோருக்குப் பிப்ரவரி முதல் வாரத்தில் பணம் வந்த வரிசைப்படி 10 தொகுதிகளும் அனுப்பி வைக்கப்படும்.

★ தவணைமுறையில் செலுத்துவோர் தொகையினை ரொக்கமாக நேரிலோ, மணியார்டர் மூலமாகவோ, வங்கி வரைவோலை மூலமாகவோ <u>சென்னை வர்த்தமானன் பதிப்பக முகவரிக்கு</u> மட்டுமே அனுப்ப வேண்டும்.

**இச்சலுகை ஸ்டாக் உள்ளவரை மட்டுமே!**

சலுகை விலை ரூ. 1250 யினை ரொக்கமாகச் செலுத்தி நூலின் 10 தொகுதிகளையும் கீழ்க்கண்ட இடங்களில் உடனே நேரில் பெற்றுக் கொள்ளலாம்.

- சென்னை வர்த்தமானன் (✆ : 24364174)
- கோவை விஜயா (✆ : 2382614 / 2394614)
- சேலம் சந்திரா (✆ : 2265635)
- திருச்சி திருச்சி புக் ஹவுஸ் (✆ : 2764198/2482365)
- மதுரை செல்வி (✆ : 2343510 / 2345169)
- நெல்லை அருள் நந்தி சிவம் (✆ : 2339692 / 3100710)
- ஈரோடு 'இந்து' புக் பார்க் (✆ : 2267227)

சென்னையில் உள்ளோர் **24364174** என்னும் தொலைபேசி எண்ணில் தொடர்பு கொள்க! உங்கள் இல்லத்திற்கே நேரில் 10 தொகுதிகளையும் கொண்டு வந்து தருகிறோம். சலுகை விலை ரூ.1250, நேரில் தரக் கட்டணம் ரூ.50 சேர்த்து ரூ.1300 மட்டும் ரொக்கமாகச் செலுத்தி நூலினைப் பெறலாம்.



# மைக்ரோவேவ் மாமி

ஹலோ!

நான்தான் மைக்ரோவேவ் மாமி!

இது என்னடா புதுப்பேரா இருக்கேன்னு திகைக்க வேணாம். நான் ரொம்ப மாடர்ன். அதே சமயம் நம்ம பாரம்பரியம், கலாசாரம் பற்றி நல்லாவே தெரிஞ்சவ. என் பையன், என்னை "பழமை பாதி, புதுமை பாதி'ன்னு ஆளவந்தான் கமல் ஸ்டைல்ல கிண்டலடிப்பான்.



சன் டி.வி.யில சீரியலும் பார்ப்பேன். பி.பி.சி.யில் கரன் தாபர் போடற கிடுக்கிப்பிடி கேள்விகளையும் ரசிப்பேன். ஞாயித்துக் கிழமைன்னா, அக்கடான்னு சிம்பிளா ஒரு மிளகு ரசமும் வைப்பேன். ஒரு சேஞ்சுக்கு பிட்ஸாவும் ஆர்டர் பண்ணுவேன்.

போன மாசம் கரன் தாபர் சென்னைக்கு வந்து, நம்ம சி.எம்.மை இன்டர்வியூ பண்ணாரில்லையா? அப்போ, அவர் ரொம்ப நாளைக்கு அப்புறம் ஏ.ஒன் டிகிரி காப்பி குடிச்சு ரசிச்சாராம். மெட்ராஸ் மாதிரி நல்ல காப்பி, டெல்லியில கிடைக்க மாட்டேங்கறதுன்னார். தஞ்சாவூர் பக்கம் போனதில்லையோன்னோ, அதான் மெட்ராஸ் காப்பியைப் புகழறார்.

நான் காப்பி போடறதில் எக்ஸ்பர்ட். அதுவும் நான் டிகிரி காப்பி போட்டா, அதுக்கு டாக்டரேட்டே தரலாம்னு என் மாமியாரே சர்டிபிகேட் குடுத்திருக்கா.

நாக்குக்கு ருசியா காப்பி போடறது ஒண்ணும் ஒலிம்பிக்ஸ்ல தங்க மெடல் வாங்கற விஷயமில்லை. ஜி.ஆர்.டி.யில தங்க செயின் வாங்கற மாதிரி ஈஸிதான். அதுக்கு நான் சொல்லற டிப்ஸை ஃபாலோ பண்ணுங்க.

நல்ல காப்பிக்கு பீபரியும், ஏ வகை காப்பிக் கொட்டையும் சம அளவில் கலந்து அரைத்த பொடி தான் ரொம்பவும் உசிதம். ஃபில்டரில் ஒரு நபருக்கு ஒரு டேபிள் ஸ்பூன் என்ற கணக்கில் காப்பிப் பொடியைப் போடணும்.

தண்ணீரை தளதளவென்று கொதிக்க வைத்து ஃபில்டரில் ஊற்றணும்.

பால் நீர்க்க இருந்தால், முதல் டிகாஷனை மட்டும் பயன்படுத்துங்க. இரண்டாம் டிகாஷனை விட்டால் டேஸ்ட் போயே போச்!



பாலைக்காய்ச்சி, நுரைக்க ஆற்றி, சர்க்கரை சேர்த்தபின் டிகாஷனை விடணும். மீண்டும், மீண்டும் பாலைக்காய்ச்சக் கூடாது. டிகாஷனை பாலில் ஊற்றின பின், மறுபடி அடுப்பில் வைத்து சூடு பண்ணக் கூடாது.

சர்க்கரை கொஞ்சம் குறைச்சலாகவே போடுங்கள். காப்பி இலேசாகக் கசந்தால் தான் ருசி!

இப்படிக் காப்பிப்போட்டு, விருந்தாளிக்குக் கொடுத்தால், நீங்கள் அவர்கள் மனசில் இடம் பிடித்தீர்களோ இல்லையோ, நீங்கள் போட்ட காப்பி, பர்மனெண்டாய் இடம் பிடிச்சிடும்.

சரி, அடுத்தவாரம் சந்திப்போமா?

தமிழக முதல்வரின் செல்ஃபோன் ரிங் - டோன் 'கண்கள் எங்கே? நெஞ்சமும் அங்கே!' என ஒலிக்கிறதாம்! பிரபலங்களுக்கு நாம் சிபாரிசு செய்வது:

**அப்துல் கலாம்:** மாணவன் நினைத்தால்... நடத்திக் காட்டுவான்!

**வாஜ்பாய்:** நடக்குமென்பார் நடக்காது... நடக்காதென்பார் நடந்துவிடும்!

**அத்வானி:** கனவு காணும் வாழ்க்கை யாவும் கலைந்து போகும் கோலங்கள்!

**உமாபாரதி:** தாயின் மணிக்கொடி, தாயின் மணிக்கொடி, சொல்லுது ஜெய்ஹிந்த்!

**லாலு பிரசாத்:** சிக்குபுக்கு சிக்குபுக்கு ரயிலே...



# [சி]ரிங் - டோன்

கலக்குது பாரு ஸ்டைலே!

**கருணாநிதி:** நாளை நமதே... நாளை நமதே!

**வைகோ:** நடையா.. இது நடையா? ஒரு நாடகமன்றோ நடக்குது!

**ராமதாஸ்:** யார் தருவார் இந்த அரியாசனம்?

**ஜி.கே.வாசன்:** அடிக்கிற 'கை'தான் அணைக்கும்... அணைக்கிற 'கை'தான் அடிக்கும்!

**விஜயகாந்த்:** நான் நாட்டைத் திருத்தப் போறேன் கோட்டையைப் பிடிக்கப் போறேன்!

**விஜயராஜேந்தர்:** நான் ஒரு ராசியில்லா ராஜா...

**ஜெயலக்ஷ்மி:** காக்கிச்சட்டை... போட்ட மச்சான்...

**ரஜினிகாந்த்:** ராமன் ஆண்டாலும் ராவணன் ஆண்டாலும், எனக்கொரு கவலையில்லை!

**கமலஹாசன்:** முத்தமோ... மோகமோ...

**பாரதிராஜா:** பட்டிக்காடா? பட்டணமா? ரெண்டுங்கெட்டான் லட்சணமா!

**தனுஷ்:** மாமா உன் பொண்ணக் கொடு...

**குட்டி சாமியார்:** அப்பனுக்குப் பாடம் சொன்ன சுப்பையா...

**தமிழக அமைச்சர்கள்:** அம்மா என்றழைக்காத உயிரில்லையே!

அம்மாவை வணங்காமல் உயர்வில்லையே!

கற்பனை : **வசந்தி வள்ளுவன்**

# சுகக் கடல் எக்ஸ்பிரஸ்!



**ப**த்து இளைஞர்கள் நகரப் பேருந்திலிருந்து கொத்தாக இறங்கிக் கொள்கிறார்கள். அந்தப் பகுதியில் பொது மக்கள் நெருக்கமாகக் கூடுவதற்கு வாய்ப்புள்ள இடத்தைத் தேர்வு செய்கிறார்கள். வட்டமாய் நின்றபடி பிரார்த்தனை செய்ய ஆரம்பிக்க, மக்களின் கவனம் ஈர்க்கப்படுகிறது.

“இன்று நாம் அனைவரும் வாழ்க்கையில் சுகத்தை அடைவதற்காக ஓடிக் கொண்டு இருக்கிறோம். சுகம் என்றால் என்ன? ஒருவர் தாகத்துடன் இருக்கிறார் என்றால், அவருக்குத் தண்ணீர் சுகம் அளிக்கும். அதே நேரம் ஒருவர் தண்ணீரில் மூழ்கிவிட்டால், அவர் சுகத்தில் மூழ்கி விட்டார் என்று கூற முடியுமா? இல்லை. அப்படியானால் சுகம் எதிலே உள்ளது? தெளிவு படுத்துவதே எங்கள் வீதி நாடகத்தின் முக்கிய நோக்கம்” என முன்னுரை தருகின்றார்கள், ‘ஸ்வாத்யாயா’ யுவ கேந்திரா இளைஞர்கள்.

‘பக்தி வழியே விழிப்புணர்ச்சி நாடகமா!’ என்ற ஆவலுடன் மக்கள் குழுமி விடுகிறார்கள்.

**சு**கக் கடல் எக்ஸ்பிரஸ் ஒன்று வந்து பிளாட்ஃபார்மில் நிற்கின்றது. ‘சுகத்தை தேடிச் செல்ல விரும்பும் பயணிகள், தயவு செய்து இந்த வண்டியில் ஏறி அமர்ந்து கொள்ளுங்கள்’ என்று தமிழ் - ஆங்கிலம் - இந்தி மொழிகளில் அறிவிப்பு செய்யப்படுகிறது. அதில் இடம் பிடிக்க வேண்டும் என்கிற ஆவலில், அனைவரும் முண்டியடித்து ஏற முயல்கின்றனர். மிகுந்த நெருக்கடிகளுடன் பயணம் துவங்குகிறது.

வித்யா நகர் ஸ்டேஷன் வந்து விடுகிறது. கீழிறங்கிச் செல்லும் பயணிகளின் சுமைகளைத் தூக்கிக் கொள்ள, அங்கிருக்கும் போர்ட்டர்களிடையே கடும் போட்டி நிலவுகிறது. “நாங்கள் அனைவரும் கூலிகள்’ என அவர்கள் ஆங்கிலத்தில் கூவுகிறார்கள். “பாருங்கள் சகோதரரே... வித்யா நகரத்தில் கூலிகளும் ஆங்கிலம் பேச ஆரம்பித்து விட்டனர்!” என்றொரு குரல் கேட்கிறது. “இந்தச் சுமையைத் தூக்க எவ்வளவு கூலி?” என்று கேள்வி எழுகிறது.

“நான் நூறு ரூபாய் வாங்குவேன்.”

“என்னுடையது ஃபிக்ஸட் ரேட்!”

“நான் ஐம்பது ரூபாய் வாங்குவேன்!”

“நான் இருபது ரூபாய் வாங்கிக் கொள்வேன்!”

“அட... ஒரே வேலைக்குத் தனித் தனிக் கூலியா?”

“அந்த நூறு ரூபாய்க் கூலிக்காரன் எம்.ஏ. படித்திருக்கிறான். ஐம்பது ரூபாய்க் கூலிக்காரன், பி.ஏ. படித்திருக்கிறான். இருபது ரூபாய்க் கூலிக்காரன் ப்ளஸ் டூ மட்டுமே!”

**கா**ட்சிகள் நகர்ந்து கொண்டே இருக்கின்றன. எல்லா ஸ்டேஷன்களிலும் நின்று செல்கிறது சுகக் கடல் எக்ஸ்பிரஸ். ஒவ்வொரு நிலையத்திலும் விதவிதமான அனுபவங்கள், படிப்பினைகள். அதற்குள் சுக நகர் வந்து சேர்ந்து விடுகிறது. தன்னம்பிக்கையையும், அன்பையும் போதிக்கும் அறிவுரைகளுடன் நாடகம் முடிகிறது.

கட்டுரை, படம் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# ஆலமரத்து தீபாவளி

"தம்பி... தீபாவளிக்குன்னு கிடைச்ச இந்த ஸ்வீட் பாக்கெட்டையும் பட்டாசுப் பொட்டலத்தையும் நான் எடுத்துக்கிட்டுப் போகட்டுமா?"

'தம்பி' என விளிக்கப்பட்ட நாற்பதைந்து வயது பரசுராம், ராஜம் மாமியின் கேள்விக்கு பதில் சொல்லவும் இல்லை... தனது முக இறுக்கத்தை மாற்றிக் கொள்ளவும் இல்லை.

"அத்தை... இந்தக் கடுவன் பூனைகிட்ட போய் இதையெல்லாம் கேட்பானேன்."

சொன்னது கிசுகிசுப்பாய்த்தான் என்றாலும், வினோதினி பகிரங்கமாகவே முகம் களித்து நின்றாள். இப்படி ராஜம் மாமியை அழைத்துப் போகும் சந்தர்ப்பங்களில் எல்லாம் எதிர்ப்படும் பரசுவின் முறைப்பும், விறைப்பும் வினோதினிக்குப் பழகிப் போனது.

"அத்தை. இதுக்கு நூறு பங்கு பட்சணமும் பட்டாசுமா, உங்களோட தீபாவளி கொண்டாட அங்க எல்லோரும் காத்திட்டிருக்காங்க."

வினோதினி சொன்னது நிஜமேதான். காம்பவுண்டுக்குள் காலை வைக்கும் முன்னரே... "ஹை ஹை ராஜம்மா... ஹை ஹை ராஜம் இராண்மா... ஹைய்யா ராஜம் மாமி" என்றெல்லாம் பிள்ளைகள் ஆர்ப்பரித்து வர, மூத்தமருமகள் சந்தியா கைப்பற்றி வரவேற்க, ராஜம் கண் கலங்கித்தான் போனாள்.

"அடடா, இது சௌந்தர்யா குட்டியா... நீ எப்ப தில்லியிலேர்ந்து வந்தே... என்னமா வளர்ந்துட்டே, ஆமா அம்மா எங்கே?" - பேத்தியைப் பார்த்த பரவசம் அடங்கும் முன்னரே, இளைய மகளைத் தேடி கண்கள் நாலாபுறமும் தாவின.

"நல்லிக்குப் போயிருக்கா."

வேதனையைக் கண்ணில் கூட காட்டாமல் சமாளித்த ராஜம், எல்லா பேரக் குழந்தைகளையும் ஒட்டுமொத்தமாக அணைத்தவாறே உள்ளே சென்றாள். குழந்தைகளுக்கென கொண்டு வந்திருந்த சின்னச் சின்ன பரிசுகளை ஓரோர் பிஞ்சுக் கைகளிலும் வைக்க, பிள்ளைகள் அபரிமித சந்தோஷம் காட்டியே வாங்கிக் கொண்டனர்.

"சரி, சரி, பிள்ளைகளா, போய் டீவி



பாருங்க, இல்லை மொட்டை மாடிலே போய் விளையாடுங்க. பாட்டி கொஞ்சமாவது ரெஸ்ட் எடுத்தா தானே, உங்களுக்காக தீபாவளி பட்சணங்கள் பண்ண முடியும்?"

"ரெஸ்ட்டா?... தீபாவளிக்கு இரண்டு நாள் தானே இருக்கு. நீங்க மெனுவைச் சொல்லுங்க, நான் மளமளன்னு காரியத்திலே இறங்குறேன்... அது சரி, நான் எங்க

தங்கட்டும்...?"

''இதென்ன கேள்வி? மூத்த மகன் வீட்டிலேதான் தங்கணும்...''

''அப்படிச் சட்டம் ஒண்ணுமில்லேக்கா...''

''சந்த்யா ஆன்டி, வினோ ஆன்டி, ஊஹூம் நான் விடமாட்டேன். தில்லியிலே இருந்து வந்திருக்கிற என் கூடத்தான் பாட்டி இருக்கணும். ஆமா என் அறையிலேதான் தங்கணும்...''

"பேத்தி சொல்றப்போ மறுப்பேனா?

''அத்தை, காலையிலே மொதல் வேலையா முறுக்கு சுத்திடுவோம்.''

"என் பிள்ளை மகேஷுக்கு கை சுத்தல் முறுக்குன்னா, உயிராச்சே. ஆமா உன் புருஷன் தீபாவளிக்கு கூட ஒரு நடை வரமாட்டானா.... அங்க மஸ்கட்ல என்ன தீபாவளியோ...''

''அத்தை, அது மட்டும் சொல்லாதீங்க. இங்க மெட்ராஸ் தீபாவளியை விட,



அங்கே நல்லாவே இருக்கும். ஏதோ நாமெல்லாம் ஒரே பில்டிங்கிலே குடியிருக்கறதால, கொஞ்சத்துக்கு கொஞ்சம் சொந்த பந்தமா சேர்ந்து கொண்டாடறோம். இல்லாம இந்த சிட்டியிலே யாரு தீபாவளி பொங்கல்னு ஒத்துமையா கூடிக் கொண்டாடறாங்க.''

''அது வாஸ்தவம்தான் அத்தை. பிள்ளைகள் படிப்புக்குன்னு வினோதினி மஸ்கட்ல இருந்து திரும்பின பிறகுதான்,

ஆனா ஒரு கண்டிஷன். நான் தங்கற வரைக்கும் எல்லா பேரன் பேத்தி குஞ்சு குளுவான்களும், எங்க ரூம்லே படுத்து விடிய விடிய கதை பேசணும்.''

"டன் பாட்டி, டன்."

''மாடிக்கு வரச்சே, இந்த சின்ன மருமகள் வீட்டுக்கும் வாங்க. இந்த தீபாவளிக்கு அல்வா செக்ஷன் எனக்காக்கும். உங்க தலையைப் பார்த்த பிறகுதான் கோதுமையை ஊறவைக்க நினைச்சிருந்தேன்.''

தீபாவளிக்கே ஒரு அர்த்தம் வந்தது. அங்க மாதிரி, வீட்டுக்கொரு ஸ்வீட், காரம்னு பிளான் பண்ணி பட்சணம் செய்யறதும்... தீபாவளி அன்னிக்கு மொத்தமா எல்லா வீட்டுக்குமா ஒரே சமையலா பொங்கி விருந்து சாப்பிடறதும், அலாதி சுகம்தான்... தேங்க்ஸ் வினு."

எல்லாமே வாய்ப்பந்தல்தான். அன்றிரவு துவங்கி மறுநாள் முழுக்க, ராஜம் ஒரோர் ப்ளாட் கிச்சனுக்காய் ஓடி ஓடி, கிரைண்டரில் முறுக்கு மாவு பக்குவம் பார்த்து... குலோப்ஜாமூனுக்கு கோவா பிரித்து... அல்வாவுக்கு கோதுமைப்பால் பிழிந்து... அதிரசத்துக்கு பாகு காய்ச்சி... சீடை தட்டைக்கு மாவு வறுத்து... என பம்பரமாய் சுழல்கையில், எந்த மருமகளும் மகளும் கற்றுக் கொள்ள வரவுமில்லை... உதவியாய் கை கொடுக்கவும் இல்லை... அட முழுசாய் கூடமாட நிற்கக் கூட இல்லையே!

ஒற்றை ஆளாய் முறுக்கு சுற்றிச் சுற்றி விரல்களில் வலி தீயாய்க் காந்தியது. அதிரசம் தட்டித் தட்டி உள்ளங்கை புண்ணானது. 'தம்' பிடித்து சட்டுவம் சுழற்றி அல்வா கிளறியதில், மணிக்கட்டைத் தாண்டி தோள் பட்டை வரை உளைச்சல் உலுக்கித் தகித்தது. ஒருவழியாய் இரவு எட்டுமணியளவில் பம்பரச்சுற்று அடங்கி, நெய் தெளிந்த அல்வாவை தட்டுகளில் விளம்பி, வாழை இலையால் தட்டி தட்டி சமன் செய்கையில், போன் வந்தது சாரதாவிடமிருந்து.

"ம். ராஜம், என்ன வேலை ஒழிஞ்சுதா?... அல்வாவும் கிளறினியா... ஒன் உடம்பு தாங்குமாடி..."

"ஒரு நாளைக்கு கஷ்டப்பட்டாத்தான் என்ன? நம்ம பிள்ளைகளுக்காகத்தானே! அங்க எப்படி?"

"நீ இல்லாம தீபாவளி கொண்டாடறதுல எல்லாருக்குமே வருத்தம்தான். அதுவும் பரசு தம்பி இன்னமும் முகத்தை தூக்கி வச்சுக் கிட்டுத்தான் இருக்கு."

"பரசுவுக்கு இன்னமும் கோபம் அடங்கலியா?"

"ஹூம்... நீ திரும்பினப்புறம்தான் அடங்கும்."

"அங்கே அந்த நாற்பத்தைந்து வயது குழந்தையின் பிணக்கம் நினைத்து, பெருமிதம் மீறி கலக்கமே பிறந்தது. "இங்கே ஒருவேளை மொத்தமாக எல்லோரும் சேர்ந்து வற்புறுத்தி, இந்த வரவை நிரந்தர வாசமாக்கிவிட்டால்?"

இன்று ஆறு ஃப்ளாட்டுகளோடு நிமிர்ந்து நிற்கும் இந்த அசோக் நகர் பூமி, நாற்பது வருடங்களுக்கு முன் மனைவியும் பிள்ளைகளுமாக ராகவன் தூத்துக்குடியை விட்டு வருகையில், வெறும் முள்காடாகவே கிடந்தது. பங்காளி பஞ்சாயத்து முடிவில் கிடைத்த பணத்தில் துணிந்து அந்த முள் காட்டை வாங்கினார். தாமாகவே செங்கல் அடுக்கி பேருக்கு ஒரு சுவர் எழுப்பி, ஓரிழை கூரையும் வேய்ந்து வீடாக்கிய கையோடு, சாப்பாட்டுக் கடை துவக்கினார். ராஜத்தின் கைப்பக்குவம்... ராகவனின் நிர்வாகச் சிக்கனம் என, ஐந்தே வருடத்தில் அமோக மாக பச்சைப்பிடிக்க வழி பிறந்து, வசதி பெருகியது.

கூட்டு ஒப்பந்தமாய் ஒரு காண்ட்ராக்டரிடம் அந்த இரண்டரை கிரவுண்ட் நிலத்தை ஒப்படைக்க, ஒரே வருடத்தில் ஆறு ஃபிளாட்கள் கொண்ட குடியிருப்பு உருவாகியது. ஆளுக்கொன்றாய் நான்கு பிள்ளைக்கானது போக, மேல் தள கடைசி வீட்டில் காண்ட்ராக்டரும், கீழ்த்தள வலப் பக்க வீட்டில் ராகவனும் குடியேறினார்கள். கிரஹப்ரவேசங்கள்... கல்யாணங்கள்... பிள்ளைப்பேறுகள்... என ராகவன் இருக்கும் வரைக்கும் எல்லாம் நல்லபடியே தான் நடந்தேறின. நான்கு வருடங்களுக்கு முன்னர், ஓரிரவு தூக்கத்திலேயே அவர் பிரிந்த பிறகுதான் ராஜத்தின் நிலைமை அதிவேகமாக சீர்கெடத் துவங்கியது.

"நீ ஏன் ஃப்ளாட்டிலே தனியா இருக்கே? அதை வாடகைக்கு விட்டுட்டு என் கூட வந்திரும்மா."

மூத்த மகள் திவ்யா முதல் தளத்துக்கு அழைத்துச் சென்றாள். ஆனால் சீக்கிரமே திவ்யா கணவரோடு அமெரிக்கா புறப் படுகையில், தன் ஃப்ளாட்டை விற்று டாலராக்கியதை கடைசிக் கடைசியே நிமிடத்தில் சொல்லவே ராஜம் திணறிப் போனாள். மறுபடி தன் வீட்டுக்குப் போக வழியின்றி, அது ஏற்கெனவே வாடகைக்கு விடப்பட்டிருந்ததால் அழையா விருந்தாளி

> "தீபாவளிக்கு நான் தான் பலகார மெல்லாம் செய்தேன்னு டாக்டர் கண்டுபிடிச்சிட்டார் சரசு."
> "எப்படி?"
> "எண்ணெய் கொட்டி கை வீங்கினதைப் பார்த்துட்டு, 'லட்டு - பாதுஷா' மாதிரி வீங்கியிருக்கே...?'ன்னு கேக்கறாரே!"
> – சீர்காழி வி. ரேவதி



யாக மூத்த மருமகள் சந்தியாவிடம் கீழ்த்தளத்துக்குப் போனாள். வாடகைப் பணம் கொடுத்தும் நிறைய தலைவலி களையே சந்தித்தாள். அடிக்கடி "என் தம்பி வருகிறான், சித்தப்பா வருகிறார்" என்று அடுத்த மகன் வீட்டுக்கு அனுப்பி வைக்கப் பட்டாள். மகேஷுக்கு மஸ்கட் மருத்துவ மனையில் வேலை கிடைத்து முதலில் அவன் மட்டும் போனதும், வினோதினி தன் அப்பா அம்மாவை அழைக்க, ராஜம் மெள்ள மகள் கமலியோடு போய் மூன்றாம் மாடியில் இருக்க வேண்டியதாயிற்று. ஆறே மாதத்தில் கமலிக்கு டில்லி யூனிவர்சிடியில் வேலை கிடைக்கவே, வீட்டை ஒரு கம்பெனிக்கு கெஸ்ட் ஹவுஸாக்கிக் கொடுத்துவிட்டு, அம்மாவை மறுபடி மூத்த அண்ணனிடமே ஒப்படைத்துப் போனாள்.

இனியும் இந்தப் பந்தாட்டம் தானாது என்று தன் வீட்டை காலி பண்ண ராஜம் நிர்பந்திக்கையில் குடியிருந்த டாக்டர் அந்த வீட்டை விலைக்கு வாங்க ஆர்வம் காட்டியது துரதிருஷ்டமே!

"அம்மா, என்னைக்கேட்டா, இது நல்ல சான்ஸ்... அதுமட்டுமில்ல, நம்ம குடி விருப்பிலேயே ஒரு டாக்டர் இருக்கறது நமக்கு உதவிதானே. பேசாம அவருக்கே வித்துட்டு, பேங்கிலே பணத்தைப் போட்டுட்டு நிம்மதியா மூத்த பிள்ளை என் கூடவே இருந்துடு..."

ஆனால் பணம் கைக்கு வந்ததும்... "கடனாத்தான் வாங்கிப்பேன்" என்று ஒரு கணிசமான தொகையைக் கேட்டுப் பெற்று, மருந்துக்கடையில் முடக்க... விஷயம் அறிந்த மற்றவர்களும் ஏதோ இன்னொரு பாகப் பிரிவினையாக்கும் என்கிற ரீதியில் வந்து நிற்க, கடைசியில் ராஜத்திடம் மிஞ்சியது மிக மிக சொற்பத் தொகையே! அந்தத் தொகைக்கு கிடைத்த மாதாந்திர வட்டியையும் மகனுக்கே கொடுத்து வந்தாள். ஆனால் ஒரு தரம் சந்தியாவின் தம்பி ஏதோ பயிற்சிக்காக நாலு மாதம் சென்னையில் தங்கவேணும் என்றான போது, அந்தத் தெருவிலேயே வாடகைக்கு ஓர் ஒற்றை அறை வீடு தேடியது. 'தம்பிக்கு அல்ல மாமியாருக்குத்தான்' என்றறிந்ததும் ராஜம் நொறுங்கிப்போனாள். அந்த வாரமே யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டு, 'கருணா முதியோர் இல்லம்' போய்ச் சேர்ந்துவிட்டாள். தேடினார் கள்தான், கண்டுபிடிக்கவும் செய்தார்கள் தான், ஆனால் மாற்றி மாற்றி மற்றவரைக் குறை கூறினார்களே ஒழிய, ராஜத்தை தம்மோடு அழைத்துச் செல்ல யாருமே முன்வரவில்லை.

ஆறுமாதமாய் யார் வந்தாலும் முகத்தைக் காட்டாமல் முக்காடு போட்டு கட்டிலின் மூலையில் உட்கார்ந்திருந்தாள். வந்தவர்களும் சீக்கிரமே புறப்பட்டுப் போக, அந்தக் கோபம் வசதியாகப் போனது. இல்லத்து நிர்வாகி பரசுராம் பேசிப் பேசித்தான், ராஜத்தின் மனதை இளக வைத்தார்.

"மாமி, எல்லாம் நல்லதுக்குன்னுதான் நினைச்சுக்குங்கோ... ஒட்டிகிட்டே இருந்து சீழ் பிடிச்சு உறவுகள் நாறிப்போவதை விட, இது எவ்வளவோ மேல்... இப்ப உங்களுக்குன்னு ஒரு தனி கவுரவம் இருக்கு. குற்ற உணர்வோடத்தான் அவங்க வந்து பார்க்க றாங்க. எதுக்கு நீங்க பாராமுகம் காட்டணும்? எல்லாம் மறந்து சிரிச்சுப் பேசினாத்தான் 'இங்கே நான் நிம்மதியா சந்தோஷமாத்தான் இருக்கேன்'னு முகத்திலே அறைஞ்ச சொல்றாப்பிலே இருக்கும்."

அப்படி சமாதானமான உடனேயே, ராஜம்மாமி இப்படி தீபாவளி சமையல் காரியாக, பேரனின் மஞ்சள்காமாலை நர்சாக... கோடை விடுமுறை காவலாளியாக, அடிக்கடி உருமாறியதைத்தான் பரசுராமால் ஜீரணிக்க இயலவில்லை. 'பேசக் கூட மாட்டேன்' என அடம்பிடித்த மாமி மருமகளோ, மகனோ வந்து அழைக்கையில் நாடோடி போல் போய் வருவதை அவரால் தடுக்கவே முடியவில்லை. அந்த ஆதங்கம் தான் கோபமாகவே உருவெடுக்கிறது.

**வி**டியற்காலை மூன்று மணிக்கே எழுந்து மூன்று கோலங்களோடு ஆரம்பித்தது ராஜத்தின் தீபாவளி! சந்தியா வீட்டில் நாலுவகை வடையோடு காலைச் சிற்றுண்டியைத் தயாரித்த கையோடு, கீழ்த் தளம் வந்து

வினோதினி வீட்டில் மதிய விருந்து வேலையைத் துவக்கினாள். எந்தக் கட்டத்திலும் சுயகழிவிரக்கம் தன்னைத் தாக்க அனுமதிக்காமல், சமையல் கூடங்களில் தன்னை ஒரு ராணியாகவே கற்பனை செய்து உழைத்தாள். ஆளாளுக்கு துணிமணி வழங்கிய போதும், மூச்சுக்கு முந்நூறு தரம் கைபுண்ணியம் பாராட்டியபோதும், அடிவயிற்றில் கலவரம் மூளவே செய்தது. மறுபடி அங்கேயே தங்கிவிடும்படி பாசத்தினால் கட்டிப் போட்டால்?

ராஜத்தை 'கருணா' வாசலில் இறக்கிவிடுகையில் இரவு மணி பத்து. கார்ச் சத்தம் கேட்டதுமே... பரகராம் பாய்ந்து வந்தார். பின்னேயே நிழலுருவங்களாக சாரதா டீச்சர்... ஓமனா... மெஹ்ரூபா... மணியம் சார். மூன்று வண்டிகளும் 'டாட்டா' காட்டி போகிறவரை அமைதியாக இருந்தவர்கள், வண்டிகள் மறைந்ததுமே "ஹேப ராஜம் ஹேப்பி தீபாவளி" எனக் கட்டிப்பிடித்தனர்.

"ராஜம்... பரக தம்பி இன்னமும் சாப்பிடலை. எப்படியும் நீ ராத்திரியே வந்துருவேன்னு சொல்லிகிட்டே இருந்தது."



"ராஜம் கண் கலங்கி பார்த்தாள்... "என்னைவிட என் இரத்தங்களை நீதான் நன்கு புரிந்து வைத்திருக்கிறாயோ?"

"எனக்குத் தெரியாதா, அவங்க எதுக்குக் கூட்டிப் போனாங்கன்னு? வேலைக்கு வேலை, குற்ற உணர்ச்சிக்குக் களிம்பு தடவல். இது புரியாம மாமி உருகி உருகி ஓடிடறீங்க... ஏமாந்து வர்றீங்க!"

"கண்ணா பரக, நீ தப்பா புரிஞ்சுக்கிட்டே... நான் எனக்காக போறேன்னா நினைக்கிறே... இல்லப்பா. இது அடுத்த தலைமுறைக்கான பயணம்! சொத்து தகராறிலே என் புருஷன் எல்லாம் இழந்து பட்டணம் வந்தப்போ, ஜெயிச்ச பிள்ளைகளை ஆளாக்கிறதிலேயே குறியா இருந்துட்டோம். இரத்த பந்த அருமைகளை சொல்லிக் கொடுக்காமப் போயிட்டோம். அதனோட பலனைத்தான் இப்போ அனுபவிக்கிறேன். இந்த தலைமுறையே இப்படின்னா, அடுத்த தலைமுறை இன்னும் மோசமாயிடுமே... அப்படி ஆயிடக் கூடாதுன்னுதான் இப்படி வருஷத்துக்கு ஒரு தரமானாலும் வெக்கமில்லாம போறேன். மாய்ஞ்சு மாய்ஞ்சு உழைக்கிறேன். விடிய விடிய அந்தப் பிஞ்சுகளை மடியிலே போட்டு பாசத்தை முத்தங்களாய்க் கொட்டுறேன். நீ வேணும்னா பாரு, இதெல்லாம் யாராவது ஒருத்தர் இதயத்துல ஈரத்தைத் தக்க வைச்சா, அடுத்த தலை முறையிலே இது மொத்தமும் நஞ்சை நிலமா மாறிடும்... இப்பவே பாரேன், அந்த கார்கள்ல மூணு குழந்தைகளாவது 'பாட்டி பாட்டி'ன்னு அழுதுகிட்டுத்தான் போகும். அதுல ஒண்ணாவது வளர்ந்து நாளைக்கு என்னைத்தேடி வராதா? அப்படி வந்து, நான் அப்போ உயிரோடு இல்லாமப் போனாலும் அது இந்தப் பரகராம் மாதிரி ஓர் ஆலமரமாத் தான் மனம் விரிஞ்சு திரும்பிப் போகும். அப்படி எதிர்காலத்திலே சில ஆலமரங்களை உருவாக்கத்தான்... நான் இப்படி ஏமாளிப்பட்டம் கட்டிக்கிறேன்... அதுல எனக்கு எந்த வருத்தமும் இல்லை. பரக, வாப்பா, பசிக்குது. உண்மையான தீபாவளி விருந்து இனிமேத்தான் எனக்கு."

பங்குச் சந்தை டிப்ஸ்



# பணம் பண்ணலாமா?

சேமிப்புக்களுக்கான வங்கி வட்டி விகிதம் குறைந்து வரும் நிலையில், எதில் முதலீடு செய்தால் அதிக பட்ச வருமானம் வரும் என்று எல்லோரும் நினைப்பது இயல்பு.

நிதி நிறுவனங்களின் மூடு விழாவினால் உஷாரான மற்றும் பலர், தங்கள் சேமிப்பை வங்கிகளில் கால நிர்ணய முதலீட்டில் செலுத்தத் தொடங்கினார்கள்.

ஆனால் மத்திய அரசும் ரிசர்வ் வங்கியும் எடுத்த சில முடிவுகளினால், வங்கிகளின் வட்டி விகிதம் மிகவும் குறைக்கப்பட்டது. சாதாரணமாக ஒரு வருஷ முதலீட்டுக்கே பத்து சதவிகிதம் வட்டி கொடுத்த வங்கிகள், தற்போது ஆறு சதவிகிதம் அல்லது அதற்குக் குறைவாகவே கொடுக்கின்றன.

பண வீக்கம் தற்போது எட்டு சதவிகிதம் என்ற அளவில் இருக்கும் போது, ஆறு சதவிகிதம் வட்டியினால் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை வாங்குவது சிரமமாகி, முதலீட்டிலேயே கையை வைக்கும்படியான நிலைமை ஏற்படுகிறது. (இதைக் கருத்தில் கொண்டு மத்திய அரசு வயதானவர்களுக்கு மட்டும் (Senior citizens) ஒன்பது சதவிகிதம் வரை வட்டி தரும் ஒரு திட்டத்தை அமல்படுத்தியிருக்கிறது. இந்தத் திட்டம் சில வரையறைகளுக்கு உட்பட்டது.) இந்நிலைமையில் பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்தால் நல்ல லாபம் வரலாம் என்ற நினைப்பு, பலருக்கு எழுகிறது. ஆனால் இந்திய பங்கு மார்க்கெட்டில் ஒரு நாள் பங்குகளின் விலை ஏறுகிறது. மறுநாள் விலை குறைகிறது. முக்கியமாக sensex என்று சொல்லப்படும் மும்பாய் பங்கு மார்க்கெட்டின் முப்பது கம்பெனிகளின் பங்கு விலை குறியீட்டு எண், தற்போது 5681 என்ற அளவில் இருக்கிறது. இது சில நாட்களுக்கு முன் 5800-ஐ தாண்டியது. ஒரு கால கட்டத்தில் குறியீட்டு எண் 5000க்கும் கீழே கூட இறங்கியது.

இந்த மாதிரியான மாற்றங்கள் ஏன் ஏற்படுகின்றன என்று பார்ப்போம்.

இந்திய பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்பவர்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. இந்திய முதலீட்டு நிறுவனங்கள் (Indian Institutional Investors) UTI, LIC, GIC மற்றும் பல Mutual funds இதில் அடங்கும்.

2. வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள் (Foreign Institutional Investors) வெளிநாட்டில் இருக்கும் பல Pension funds, Mutual funds இதில் அடங்கும்.

3. தனிப்பட்ட முதலீட்டாளர்கள் (Individual Investors)

இந்திய முதலீட்டு நிறுவனங்கள் தங்களிடம் இருக்கும் வைப்பு நிதியின் ஒரு பகுதியை, பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்து, அதிலிருந்து வரும் லாபத்தை கணக்கில் எடுத்துக் கொள்கிறார்கள். இந்த லாபக் கணக்கு இரண்டு வகைப்பட்டது. முதலீடுகளில் கிடைக்கும் டிவிடெண்ட் (Dividend) ஒரு வகை. பங்குகளின் மதிப்பு கூடுவதால் (Capital appreciation) மற்றொரு வகை. இதே மாதிரிதான் வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்களும். இந்த வெளி நாட்டு முதலீட்டு நிறுவனங்கள் இந்திய பங்கு மார்க்கெட்டில் ஏன் முதலீடு செய்கின்றன?

(அடுத்த வாரம் பார்ப்போம்)

**- வி. கோபாலன்**

சின்னஞ் சிறுகதை

# வேலை

நாமக்கல் பாலு



இண்டர்வியூ அறை.

அந்த தனியார் நிறுவனத்தின் மேலாளர் கிருபாசங்கர் தம் முன் அமர்ந்திருந்த இளைஞனைப் பார்த்துச் சொன்னார்.

"ஒரே ஒரு கேள்விதான் தம்பி... சேது சமுத்திர திட்டத்துக்கு யாரு காரணம்? சரியா சொன்னா வேலை!"

ஏற்கெனவே தலைவர்கள் நான், நீ என போட்டி போட்டுக் கொண்டிருப்பதால், இளைஞனுக்கு யாரைச் சொல்வதென்று குழப்பம் உண்டானது.

"என்ன தம்பி, இவ்ளோ யோசிக்கிறே... நீ போகலாம்"

நொந்து போய் வெளியே வந்தவனை சூழ்ந்து கொண்டனர் காத்திருந்தவர்கள்.

"என்ன கேட்டாங்க... என்ன கேட்டாங்க?"

விஷயத்தைச் சொன்னான்.

உஷாரானவர்கள் உடனேயே பதிலைத் தயார் செய்து கொண்டு உள்ளே போனார்கள்.

ஆனாலும் கைவிரித்தபடி வெளியே வந்தனர்.

"கலைஞர்னு சொன்னேன்..."

"வைகோதானே... ஒப்புக்க மாட்டேங்கறார்"

"மாறுதலா சிதம்பரம்னு போட்டேன்... ம்ஹூம்..."

அங்கலாய்ப்பு தொடர, கடைசி ஆளாக உள்ளே சென்று வந்தவன், சந்தோஷமாய், "எனக்கு வேலை கிடைச்சிடுச்சி" என்று கூவினான்.

"சேது சமுத்திர திட்டத்துக்கு யாரு காரணம்னு கேட்டிருப்பாரே... என்ன பதில் சொன்னே?"

எல்லோரும் பரபரபரத்தார்கள்.

அவன் கூலாய் கூறினான்...

"1947 ஆகஸ்ட் 15ன்னு சொன்னேன்."

# ஓர் அந்தநாள் ஞாபகம் 1

என் பெற்றோருக்கு நான் மூன்றாவது மகன். மூத்த மகன் முருகன். இரண்டாவது மகன் குமரன். மூன்றாவது நான், சரவணன். எனக்கு அடுத்து தம்பி பாலசுப்பிரமணியன். எங்களின் ஒரே சகோதரி மீனா வீரப்பன். எங்கள்



அப்பச்சி தீவிர முருக பக்தர். ஆகவே எல்லா மகன்களுக்கும் முருகன் பெயரையே வைத்தார்.

நாங்கள் எல்லாம் சென்னை, 'துவாரகா காலனி'யில் வசித்து வந்தோம். என் வாழ்க்கையில் மறக்க முடியாத பெயர், துவாரகா காலனி. என் வாழ்க்கை அனுபவங்களை அசைபோடும் போதெல்லாம், துவாரகா காலனிதான் துள்ளி வந்து முதலில் நிற்கும். மயிலைப் பகுதியில் இப்போதுள்ள ஏவி.எம். அவென்யூவுக்குப் பின்புறம், இருபத்தைந்து வீடுகள் கொண்ட குடியிருப்பு வளாகம் அது. பாரத விலாஸ் மாதிரி இருக்கும். வங்காளிகள், ஆந்திரர்கள் என பலரும் மொழி, இனம் என்ற பாகுபாடுகளையெல்லாம் கடந்து, ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் போல சேர்ந்து வாழ்ந்த இடம். அந்த வளாகம் முழுவதும் டாக்டர் ஈ.வி. கல்யாணியின் குடும்பத்துக்குச் சொந்தம். (நாங்கள் தயாரித்த 'ஒரு பெண்ணின் கதை' தொலைக்காட்சித் தொடருக்கு டாக்டர் ஈ.வி. கல்யாணியின் வாழ்க்கை பெரிய இன்ஸ்பிரேஷனாக இருந்தது.)

எங்கள் வீட்டு எண் 13. எதிர் வீட்டு எண் 3. அதில் ராஜா என்றொரு நண்பன். சின்னக் குழந்தையிலிருந்து ஒன்றாக பழகிய பழக்கம், நட்பாகப் பரிமணித்து இன்று வரையிலும் மிக நெருங்கிய நண்பன். உண்மையான பெயர் வெங்கட்ராமன். ராஜா என்று கூப்பிடுவோம்.

எங்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் - பன்னிரண்டாம் எண் வீட்டில் தான் துர்காபாய் இருந்தார். பின்னாளில் தேஷ்முக்கை மணந்து துர்காபாய் தேஷ்முக் என்று புகழ் பெற்றார். அந்த பன்னிரண்டாம் எண் வீட்டில்தான் நான்கு பெண்கள், நான்கு தையல் மெஷின்களுடன், ஆந்திர மகிள சபாவை துர்காபாய் துவக்கினார்.

எங்கள் பக்கத்து வீட்டில் அன்று அவர் ஊன்றிய விதை, இன்று மாபெரும் விருட்சமாய் அகன்று பரந்து வளர்ந்து, அரிய சேவைகளைச் செய்து கொண்டிருக்கிறது.

துவாரகா காலனிக்கோ, அதிலிருந்த வீடுகளுக்கோ காம்பவுண்ட் சுவர் கிடையாது. திருட்டுப் பயம் என்பது அறவே





• ஏவி.எம்.சரவணன் 1958ல்...

அங்கிருந்ததில்லை.

ரொம்பவும் ராசியான காலனி அது. அங்கு வசித்தவர்கள் அநேகமாக யாரும் சோடை போனதில்லை.

பிற்காலத்தில் விக்ரம் ஸ்டுடியோவை அமைத்த பி.எஸ். ரங்கா, வங்காளப் பட இயக்குனராக வளர்ந்த பி.என். ராவ், பித்துக்குளி முருகதாஸ் குடும்பம், பிரபல திரைப்பட ஸ்டில் ஃபோட்டோ கிராஃபர் சாரி, மெட்ராஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக் னாலஜியின் இயக்குனராக இருந்த சி.ஆர். ராமசாமி (அவரது தந்தை சி.ராஜம் அவர் களிடமிருந்து தான் ஜெமினி ஹவுஸை எஸ்.எஸ். வாசன் வாங்கினார்) என்று பல் வேறு துறை களில் பின் னாளில் புகழ் பெற்று விளங்கிய வர்கள் எல்லாம், அங்கு சக குடித்தனக் காரர்களாக வசித்து வந்தார்கள்.



நாங்கள் சின்னப் பையன்கள். பசியெடுத்தால் யார் வீட்டுக் குள்ளும் போய் வேண்டியதைச் சாப்பிடுவோம். பல நாட்கள் நான் என் வீட்டில் பகலுணவு சாப்பிட் டதில்லை. அந்த நேரத்தில் 'எங்கே எங்கே' என்று என்னைத் தேடிக் கொண்டிருப்பார்கள்.

நான் எதிர் வீட்டில் உள்ள வங்காளக் குடும்பத்துடன், சப்பாத்தியும் தேனும் சாப்பிட்டுக் கொண்டிருப்பேன். அன்பு, பாசம் இரண்டு மட்டுமே அங்கே இருபத்தைந்து குடும்பங்களைக் கட்டிப் போட்டிருந்தது.

ராஜா வீட்டில் நிறைய பொம்மை கள் இருக்கும். "ராஜா வீட்டிலேயே இருக்க வேண்டும். வெளியே போய் விளையாடக் கூடாது" என்பது அவனது அப்பாவின் கண்டிப்பான கட்டளை.

துவாரகா காலனிக்கு ராயப் பேட்டை பிருந்தாவன் தெரு வழியாகவும் வர முடியும். அந்தத் தெருவில் எம்.கே. ராதா, வழுவூர் ராமய்யா பிள்ளை போன்றவர்கள் வசித்து வந்தார்கள்.

எம்.கே.ராதாவின் மகனும் எங்கள் தோஸ்துதான். நாங்களெல்லாம் ராஜா வீட்டில் விளையாடிக் கொண்டிருந்த போது, எம்.கே.ராதாவின் பையன் ஏதாவது பொம்மையைப் போட்டு உடைத்தாலும் ராஜாவின் தந்தை கோபித்துக்கொள்ள மாட்டார்! ராஜா வீட்டிலேயே இருக்கணும் என்பது மட்டும்தான் அவருக்கு முக்கியம்.



## திரையுலக நினைவுகள்

## ஏவி.எம்.சரவணன்

எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் நாகப்ப செட்டியார் வீட்டில், குழந்தை களுக்கான கிரைப்வாட்டரை புட்டி களில் ஊற்றி சீல் வைத்து விற்பனைக்கு அனுப்பும் வேலை அப்போது நடை பெற்று வந்தது. பாட்டிலில் ஊற்றுவ தையும், மூடி போட்டு சீல் வைப்ப தையும் பார்ப்பது எனக்கு ஒரு த்ரில்லாக இருந்தது.

தினமும் மாலை நேரத்தில் 'பெங் களூர் பிராமின் பேக்கரி' என்ற பெயரில் ட்ரை சைக்கிளில் முட்டையில்லாத கேக் கொண்டு வந்து விற்பார்கள். சைக்கிள்

வந்தவுடன் காலனியே வந்து கூடிவிடும். அவ்வளவு சுவை! எங்களுக்கு தினமும் நிச்சயம் கேக் உண்டு. அதேபோல சூடான வேர்க்கடலையும் கிடைக்கும்.

இரவில் நான் அம்மாவுடன்தான் படுத்துக் கொள்வேன். சில நாட்களில் அம்மாவும் அப்பாவும் நைட்ஷோ சினிமாவுக்குப் போகத் திட்டம் போட்டி ருக்கிறார்கள் என்று தெரிந்தால், "அம்மா, என்னை விட்டுவிட்டு நீ சினிமாவுக்குப் போகக் கூடாது" என்று உத்தரவு போடுவேன்.

"சரி... மாட்டேன்" என்பார் அம்மா. ஆனால் எனக்கு நம்பிக்கை ஏற்படாது. படுக்கும்போது அம்மாவின் புடைவை முந்தானையை என் கைகளில் சுற்றிக் கொண்டு படுப்பேன். முன்னெச்சரிக்கை நடவடிக்கை!

ஆனால் அம்மா கில்லாடி. நான் தூங்கியதும் கட்டியிருக்கும் புடைவையை அவிழ்த்துவிட்டு, வேறு புடைவையைக் கட்டிக்கொண்டு ஓசையில்லாமல் சினிமாவுக்குப் போய் வருவார்.

மறுநாள் காலை எழுந்தவுடன் விஷயம் தெரிந்துவிடும். உடனே அம்மாவுடன் சண்டை போடுவதுதான் முதல் வேலை.

**நா**ங்கள் காரைக்குடியில் இருந்த போது நடைபெற்ற ஒரு சம்பவம் இன்னும் என் நெஞ்சில் பசுமையாக இருக்கிறது. அங்கே எங்களது சொந்த ஸ்டுடியோவில் 'வேதாள உலகம்' படத்தின் ஷூட்டிங் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

1948ம் ஆண்டு மார்ச் மாதம் 23ம் தேதி. அன்று நள்ளிரவு திடீரென்று அங்கே தீப்பிடித்தது. அப்போது எடிட்டிங் அறையில் கே.சங்கர் (பின்னாளில் டைரக்டர் ஆனவர்) ஓ.கே. செய்யப்பட்ட காட்சிகளைத் தனியே பிரித்து மேசை மீது வைத்துவிட்டு, எடிட்டிங் செய்யப்பட வேண்டிய படச் சுருள்களுடன், தலைமை எடிட்டர் எம்.வி.ராமனின் வருகைக்காகக் காத்திருந்தார். தீப்பிடித்து பரவத் தொடங்கியதைக் கண்டதும், ஏவி.எம். ஜெனரல் மேனேஜர் ஜி.ஆர்., தம்மிடமிருந்த 'கட்டிங் பிளையரால் ஒயர்களைத் துண்டித்து மின் சப்ளையை நிறுத்தி, தீ மேலும் பரவாமல் தடுத்தார். ஜி.ஆரிடம் ஸ்குரு டிரைவர், கட்டிங் பிளையர் போன்ற உபகரணங்கள் கர்ணனின் கவச குண்டலம் போல எப்போதும் கூடவே இருக்கும். இதை மற்றவர்கள் கிண்டல் செய்வதுண்டு. அதைப் பற்றியெல்லாம் ஜி.ஆர். கவலைப்பட்டதேயில்லை. விபத்து ஏற்பட்ட அன்று, அவரிடம் அந்த உபகரணங்கள் இருந்தது நல்லதாகப் போயிற்று. தீயைக் கண்டதும் நிலைமையின் விபரீதத்தைச் சட்டென உணர்ந்து கொண்ட கே.சங்கர், கொஞ்சமும் தாமதிக்காமல் எடிட்டிங் அறையின் ஜன்னலை உடைத்து, ஓ.கே. செய்யப்பட்டிருந்த படச் சுருள்களை ஜன்னல் வழியாக வீசி



யெறிந்து, தானும் குதித்து, அந்த ஃபிலிம்களை அங்கிருந்த ஒரு பழைய ஆஸ்டின் காரில் திணித்து, அதைத் தள்ளிக்கொண்டே எங்கள் வீட்டுக்கு வந்தார். உடனே மற்றவர்களுடன் சேர்ந்து நானும் அந்தப் படச் சுருள்களை வேக வேகமாக அள்ளி வீட்டுக்குள் கொண்டு சென்று வைத்த காட்சி நினைவிருக்கிறது.

அந்த ஆஸ்டின் காரை அப்போது ரொம்பவும் வேடிக்கையாகப் பயன்படுத்தினார்கள்...

கதவுகள், இருக்கைகள் எல்லாவற்றையும் வேண்டும்போது சட்டெனக் கழற்றவும், பொருத்தவும் முடியும்படி வைத்திருந்தார்கள். பகலில் எங்களைப் பள்ளிக் கூடம் கொண்டு செல்லப் பயன்படும் அதே கார், தேவைப்படும்போது ஷூட்டிங் சமயத்தில் காமிரா வைத்துத் தள்ளிக் கொண்டு போகும் ட்ராலியாகவும் பயன்பட்டது.

**1947**, ஆகஸ்ட் 15ல் நாடு விடுதலை பெற்றதும் நாங்களெல்லாம் காரைக்குடியில் தேசியக் கொடியை 'பேட்ஜ்' போல குத்திக்கொண்டு ஊர் வலம் போனோம். விடுதலை பற்றியெல்லாம் அப்போது ஒன்றும் விவரம் தெரியாது. ஆனால் என்னமோ பெரிய விஷயம் என்ற அளவில், அன்று நாங்கள் உணர்ச்சிபூர்வமாக ஒன்றிப்போயிருந்தோம்.

அதேபோல மகாத்மா காந்தியின் அஸ்தி வந்தபோது, காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனில் அதை பயபக்தியுடன் பார்த்தது, முன்பாக மகாத்மா அவர்கள் சென்னை வந்து தக்கர் பாபா வித்யாலயத்தில் - 1946, பிப்ரவரி முதல் தேதி என்று நினைவு - தங்கியிருந்தபோது, எங்கள் தந்தையுடன் போய் முதல் வரிசையில் உட்கார்ந்து காந்திஜியைப் பார்த்தது, எல்லாம் மறக்க முடியாத எனது இளம் பருவக் காட்சிகள்.

**கா**ரைக்குடியிலிருந்து சென்னைக்கு வந்த பிறகு நாங்கள் ஷூட்டிங் பார்க்க எப்போதாவதுதான் செல்வது வழக்கம்.



• ஏவி.எம். சரவணன், குமரன், பாலசுப்ரமணியன், டிரைவர் துரை (பின்னால்)

அதில் அதிக ஆர்வம் அப்போது இல்லை.

அடையாறு ஆலமரம் அருகே நடைபெற்ற 'ஸ்ரீவள்ளி' படப்பிடிப்புக்கு அப்பச்சி அழைத்துப் போயிருந்தார்.

வள்ளியை யானை துரத்துவது போன்ற காட்சியின் ஷூட்டிங்கை ஆச்சரியத்துடன் பார்த்த நினைவு இருக்கிறது. பழகிய யானை அது, என்றாலும் படப்பிடிப்பின்போது ஒரு பயங்கலந்த த்ரில்லோடுதான் இருந்தேன்.

அப்போதெல்லாம் ஷூட்டிங்கின் போது சில விசித்திரமான பிரச்னைகள் எழும்.

(தொடரும்)




பண்றேன். எனக்கு நல்ல ஹைபிச் குரல். பன்னிரண்டு வயசு லேயே ஐந்து கட்டை ஸ்ருதி யிலே பாட ஆரம்பிச்சுட் டேன். எம்.கே. டி., கே.பி.எஸ். போன்ற இசை ஜாம்பவான்கள் மாதிரியே ஃபுல் த்ரோட்டடா நான் பாடறதைப்

# அப்படியே எல்லாம் கோல்டு!

**'தீ**ன கருணாகரனே...' 'கிருஷ்ணா முகுந்தா' போன்ற பழம் பெரும் பாடல் வரிகள் ஏதாவது டீக் கடையிலிருந்தோ, கல்யாண வீட்டிலிருந்தோ காற்றில் மிதந்து வரக் கேட்டால், ஏற்படும் சுகமே அலாதிதான். பாகவதர் காலத்து சூப்பர் ஹிட் பாடல்களை கிட்டத்தட்ட அதே குரலில், அதே உணர்ச்சியுடன் 'லெஜண்டரி மெலடீஸ்' என்ற சி.டி.யாகத் தந்து அசத்தியிருக்கிறார், இசைக் கலைஞர் ஆர்.சூர்யபிரகாஷ்.

சரஸ்வதி சங்கீதா டிரஸ்டும், பூர்ணிமா ரிகார்ட்ஸும் இணைந்து வழங்கியிருக்கும் இந்த சி.டி.யில், மொத்தம் பதினெட்டுப் பாடல்கள். எம்.கே.டி., கே.பி. சுந்தராம் பாள், எம்.எஸ்., பி.யூ.சின்னப்பா, எஸ்.ஜி. கிட்டப்பா, எம்.எம்.டி., எம்.எல்.வி. போன்ற இசை மேதைகளின் அமரத்துவ மான பாடல்களைத் தேர்ந்தெடுத்துத் தந்திருக்கிறார்.

"எங்கக் குடும்பமே இசைக் குடும்பம் தான். பத்து வருஷமா கிளாசிகல் கச்சேரி

பார்த்து, ரசிகர்கள் தந்த ஊக்கம் தான் இது. ப்யூர் கிளாசிகல் சினிமா மியூசிக்கை, கச்சேரிகள்லே அவ்வப் போது பாடுவேன். அதற்கு பலத்த வர வேற்பு கிடைக்கவே, சி.டி.யாவும் கொண்டு வந்துட்டேன். மறைந்து வரும் அரிய இசையைக் காக்க என்னால் ஆன முயற்சி" என்கிறார்.

இதற்காக மூன்று மாத காலம் அலைந்து, இசைத்தட்டுகளைச் சேகரித் திருக்கிறார் சூர்யபிரகாஷ்.

"திருநின்றவூரில் சந்தான கிருஷ் ணன்னு இசை ரசிகர் இருக்கார். அவர் கிட்டே மூன்று லட்சத்துக்கும் மேற்பட்ட இசைத்தட்டு, கேஸட், சி.டி.கள் உள்ளன. அவரது வீடே மினி மியூசிக் மியூஸியம் மாதிரி இருக்கு. அவரிடம்தான் நான் தேடிய பழைய பாடல்கள் கிடைத்தன" என்றார்.

**க**ள்ளக் குரலில் கிசுகிசுக்கும் நியூவேவ் பாடகர்கள் நடுவே, பாவத் துடன், வெண்கலக் குரலெடுத்துப் பாட ஆசைப்படுவதே புதுமையான விஷ யம்தானே!

**- மினி**




# தடைகளை தகர்த்து சாதிக்கலாம் வாங்க



## TMB மகளிர் லோன்

### கடன் தொகை ரூ. 10 லட்சம் வரை

தொழில் முனையும் மகளிருக்கு தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் வாழ்வில் உயர்ந்திட வழித்துணையாய் நிற்கும். தொழில் மேம்பாட்டிற்கு ஒரு பிரத்தியேக மகளிர் கடன் திட்டத்தை அறிமுகம் செய்கிறது. சுலபமாகவும், குறைந்த வட்டியிலும் விரைவாகவும் கடனை பெற்று தொழிலை முன்னேற்றப் பாதையில் நடத்திச் செல்ல தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் தரும் வரப்பிரசாதம்.

மூத்த குடிமக்களுக்கு சலுகை : வைப்புத் தொகைக்கு 1% கூடுதல் வட்டி •

• நிபந்தனைகளுக்கு உட்பட்டது

**TMBன் இதர குறைந்த வட்டி கடன் திட்டங்கள்**

- TMB Car Loan
- TMB Doctor Loan
- TMB Education Loan
- TMB Home Loan
- TMB Mahalir Loan
- TMB Personal Loan
- TMB Rentals Loan
- TMB Traders Loan
- TMB Two Wheeler Loan

83 years of customer service

ரிலாக்ஸ்! மாலை 4.30 வரை வங்கிச் சேவை

## தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிட்.

பதிவு அலுவலகம் : 57, வி.இ. ரோடு, தூத்துக்குடி 628 002

Contact our nearest Branch or Visit us at www.tnmbonline.com

விரைவான வளர்ச்சிப் பாதையில்





# சைட்டு பேரு மதுர!

**இ**ந்தியாவில் சதுரங்கம், இந்தி விதிகளின்படி சத்ரஞ், சீனர்களுக்கு சியாங்-சி, ஜப்பானில் சோ-கி, பர்மாவில் சிட்டுயின்... இப்படி ஒவ்வொரு நாடுகளின் 'செஸ்' விளையாட்டு பற்றியும், அவற்றிற்கான விதிகள் பற்றியும் விளையாட்டாகச் சொல்கிறது www.tradgames.org.uk. ஒவ்வொரு நாடுகளின் பாரம்பரிய விளையாட்டுகள் இங்கே படங்களுடன் விளக்கப்பட்டிருக்கின்றன. உட்கார்ந்து விளையாடும் விளையாட்டுக்கள் முதல், ஓடி விளையாடுபவை வரை விதவிதமாகக் கிடைக்கின்றன. ஆப்ரிக்காவில மன்கலா, இலங்கையில் ஒலின்டா கலியா... நம்மூர்ல இதுக்குப் பேரு தெரியுமா... பல்லாங்குழி! சுவாரசியமா இருக்குதுல்ல!

ஆரப்பாளையம், மாட்டுத் தாவணி, தமுக்கம் மைதானம், அரசரடி, நாயக்கர் மஹால், வண்டியூர் தெப்பக்குளம்... என்ன மதுரை வாசம் அடிக்குதா! இதே உணர்வு கிடைக்கும் digitalmadurai.com பார்க்கும் போதும்! சங்கத்தமிழ் வளர்த்த மதுரை பற்றிய ஆங்கில (!) வலைத்தளம். மதுரை நகரத்தின் கட்டமைப்பு முழுதாக விரிந்த தாமரை மலர் போன்று, மையத்தில் மீனாட்சி அம்மன் ஆலயத்தையும், அதைச் சுற்றி வட்டங்களாக பிற இடங்களும் அமைந்துள்ளன என்ற சுவையான தகவல்களுடனும், படங்களுடனும் உள்ளது இத்தளம்.

('மதுர' படம் மதுரையில ஓடுதாப்பு?)



**"ஷ்**ஷ்ஷ்...க்குப் பிறகு நான் நடித்த இரண்டு படங்கள் வரவேயில்லை. அதற்கு நான் என்ன செய்ய. இப்போ Popcorn khao! Mast Ho jao! நல்லாப் போகுது! நான் என் அம்மா தனுஜாவோடும், அக்கா கஜோலோடும் சேர்ந்து நடிச்சுக்கிட்டிருக்கிற அனுபவம் சோ க்யூட்! அடுத்து என் அக்கா புருஷன் அஜய் தேவ்கனோடு Tango Charlie-ல் நடிக்கப் போறேன். எல்லாவற்றையும் விட பெரிய விஷயம், ராம் கோபால் வர்மாவின் காட்ஃபாதரில் நடிப்பதுதான்" என மகிழ்ந்துள்ளார் கஜோலின் கட்டழகுத் தங்கை தனிஷா indiafm.com-ல்.

## ஜாலி எஸ்.எம்.எஸ்.

**நா**ன் தொடுகிறேன். நீ உணர்கிறாய்! இது சாதாரணம்! நான் தொடாமலேயே, நீ தொட்டதாய் உணர்கிறாய். இது காதலியின் அறிகுறி! நான் தொட்டும் நீ தொட்டதை உணரவில்லையா... மவனே அது தொழுநோயின் அறிகுறிடா!

- ப்ரெஸர்

வலைபாயுதே

# மழையில் நடை!
























ஜென் கதை நன்றி : ஃபாரஸ்ட் ஃப்ளவர்

அழகம்ம விடிஞ்சும் விடியாம சோம்பிக் கெடந்த காலம்பற நேரத்துல, தண்ணி சேந்த கொடத்தோடக் கெணம் புனா. கொடத்தோட அடிப்புறம் நெளிஞ்சி, டொக்காயி இடுப்பில் வாகாய் குந்தியிருந் தது. மொத நாளு ராத்திரிதான் அழகம்ம யோட அப்பன் பேச்சிமுத்து குடிபோதை யில அதை உருட்டி, தொணைக்கு தானும் உருண்டிருந்தான். இன்னங் கூட அந்த கதவில்லாக் குடிசையின் காலைப் புடிச்சு கிட்டு கடவாயில மிச்ச வாந்தி ஒறஞ்சி போயி, பப்பரக்கான்னு தூங்கிட்டு கெடக் கான்.

கண்ணாலம் கட்டிக்குடுக்கற வயசில் ஒரு பொட்டச்சிய பெத்துப் போட்டி ருக்கமேன்னு ஏதாச்சும் நெகா உண்டா ஒனக்கு? தண்ணியக் கண்டா தெனவெடுத்த எரும கணக்கா நாக்கை வழிச்சிக்கிட்டுப் போய் அதுல முங்கி கிடக்கியே, அட வந்தப் புறமாவது என்ன நிம்மதியாவுட்டியா? 'வெத்துப் பயலுக்கு வீரம் வெங்கலப் பானையில'ங்கறது பேச்சிமுத்து வெசயத்தில ரொம்ப சரியாப் போச்சு. பாத்திரம் இருக் கறது ஒண்ணு அடகு வைக்கிறதுக்கு இல் லன்னா, உருட்டி நகக்கறதுக்குன்னு கெழ வனுக்கு ரெண்டே கங்கணம் தான்.

அழகம்மைக்கு அழகுங்கறது பேர்ல மட்டும்தான். முன் பல்லு நாலும் 'பேச்சி முத்து மவ நா- பேச்சிமுத்து மவ நான்'னு போட்டி போட்டுகிட்டு முன்னக்க துருத்திக்கிட்டு நிக்கும். பன்னித் தோலு கணக்கா அவளுக்கு நெறமும், தடிப்பும். பத்தாததுக்கு அக்கி மாதிரி காதுக்கு கீழால பக்கமோ, இல்லன்னா மூக்குக்கு கெழக்காலயோ சதா சொறி... 'அப்பிடியே பேச்சி முத்துவை உறிச்சிகிட்டு வந்து பொறந் திருக்கா'ன்னு தயிர்காரி பொன்னம்மா எப்பவும் இண்டலா சொல்லும். பொண்ணு கேட்டு வர்ற பொசக்கெட்டப் பயலுவ அத்தனைப் பேரும், அவ நெறத்தையும், பல்லையும் பத்தியுந்தான் கொறப் பாடிட்டு போறாவனுவளே தவுர, ஒத்தனாவுது அவ சமைக் கிற தெறவுசயும், பெரப்பங்கூட பின்னற அழகையும், கொட லேத்தும், களுக்கு சதப் பெறட்டல சரி பண்ற சமத்தையும், பாம்புக் கடி வாயில வெசத்த சொடக்குப் போடற நேரத்துல எடுக்குற அதிசயத்தையும், ஒரு வார்த்தையும் சொல் றதும் இல்ல, காதுல போட்டுக்கறதும் இல்ல. காதுல மூக்குல என்ன கெடக்குதுங்கற கவலையிலயே நோட்டம் பாக்கறானுவ.

பேச்சிமுத்துவுக்கு இவ பேரச் சொல்லி இன்னும் ரெண்டு கிளாஸ் ஊத்திக்கிறதுல தான் புத்தி போகுதே தவுர, மெய்யாலுமே எந்த அக்கறையுமில்ல.

இடுப்பில் ஒளிச்சு வச்சிருந்த தேங்காச் சில்ல எடுத்து முன் பல்லால கரண்டித் தின்னா. நேத்து ஒரு மவராசன் அய்ய னாருக்கு செதிர்காய் ஒடச்சதில பொறுக்கி னது. அப்பனுக்குத் தெரியாம கொடத்



நெய்வேலி பாரதிக்குமார்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

# அய்யனார் உறக்கப் பாட்டு

துக்குள்ள போட்டு வச்சிருந்தா. தண்ணி கொட்டுனதுல இதுவும் செதறி வீழ கெடந்தது. நல்ல வேளையா குடிபோதையில பேச்சி முத்து பாக்கல. இல்லன்னா அதையும் தின்னுட்டு 'ஓவ்க்' குன்னு துப்பிட்டு கெடக்கும். முன்பல்லில் கரண்டி திங்கறச்சே சொகமாத்தானிருந்தது அழகம்மைக்கு.

"யாரது புள்ள, அது அழகம்மயா? காட்டுப் பூனை ரெண்டு நாளா ஆத்தாங்கரப் பக்கமா சுத்திகிட்டு கெடக்கு. நீ பாட்டுக்கு பெராக்கு பாத்துக்கிட்டு தேங்காய கரண்டிகிட்டுப் போற... சாக்கரத... எலியாட்டிருக்குன்னு பாஞ்சி, கடிச்சு கிடிச்சு வச்சிடப் போவுது..." எகத்தாளமும், ஏகடியுமுமா சொல்லிச் சிரிச்சான் கட்டப்புள்ள.

"போயேன் பொத்திகிட்டு—ஒன் அறுந்த மூக்குக்கு என் பல்லு எவ்வளவோ மேலு..."

இது ஒண்ணும் புதிசில்ல அழகம்மைக்கு. விடிஞ்சா எந்திரிச்சா, சாயற வரைக்கும் இது மாதிரி காதுல வுழாத நாளில்ல. ஆள் தான் மாறுவானுங்க எடத்துக்கு ஏத்தா மாதிரி... 'போங்கடா எல்லாரும், என்னோட அய்யனாரு கூலி குடுப்பாரு' அப்பிடின்னு மொனவிகிட்டா. அய்யனார்னு சொல்லும்போதே கால்லேர்ந்து தல வரைக்கும் சிலுத்துப் போச்சு அழகம்மைக்கு. அய்யனாருதான் ஓங்குதாங்கா எம்புட்டு கெம்பீரம்... என்னா ஒரு ஒசரம்... கையும் காலும் ஒரலு கணக்கா என்னா ஒரு கனம்... கவுண்டர் வூட்டு களம் மாதிரி, அதும் நெஞ்சுதான் எம்மாம் பெரிசு... கோயிலுக்குள்ள தெனம் போஷாக்கா கெடக்கற சாமிங்கள்லாம் எண்ண மொதந்து கறுத்துக் கெடக்கயில... வெயில்லயும் மழையிலயும் நனைஞ்சி காஞ்சாலும் அய்யனாருதான் எம்மாஞ் சேப்பு... தலயாரி கொடுவா மாதிரி எம்புட்டு அழகான மீசை. நாளு முச்சூடும் பாத்தாலும் சோறு தண்ணி கேக்குமா இந்த கூறு கெட்ட நாக்கு?



அய்யனாரு மேல அலாதி ஆசை வைக்க அவளுக்கு ரெண்டு அய்யான காரணம் இருந்துச்சு. அதும் முன்னால எம்புட்டு நேரம் நின்னாலும் 'ச்சீ போ மம்பட்டிப் பல்லு' அப்படின்னு முகஞ் சுளிக்காது.

இன்னொண்ணு, அவ மாதிரியே ராத்தூக்கமில்லாம ரோட்ட பாத்துகிட்டே நிக்கும். பல சமயம் அய்யனா

ரைப் பாத்துட்டா, தண்ணி எடுக்கக் கூடத் தோணாம அப்படியே தெகச்சிப் போயி பாத்துக்கிட்டே நிப்பா.

வேலாயிக் கெழவி, மூக்கன் பொண்டாட்டி பஞ்சவர்ணத்தோட, அய்யனாரு செலைகிட்ட வந்துகிட்டு இருந்துச்சு. எதுனாச்சும் குறி கேக்க வந்துருக்கும்.

"அதாரு பேச்சிமுத்து மவளாட்டிருக்குது. ஏண்டி பன்னி மேய்க்க இன்னும் நல்ல நேரம் வாய்க்கலியா. காலம்பற நேரத்துல வாயப் பொளந்துகிட்டு நிக்கற. நயினார் குப்பம் கண்ணுசாமி மவன் கருப்பட்டிக்கு ஒன்னப்பாத்துட்டுப் போனதா சாவித்திரி சொன்னிச்சு... எதுனாச்சும் சேதி வந்துச்சா?" வேலாயிக் கெழவி கரிசனமா கேட்டா.

"சீரு செனத்தியா அத்தக்குடு இத்தக்குடுன்னு கூடக் கேக்கல. அஞ்சு பன்னிக் குட்டிய மட்டும் குடுத்துடுன்னு கேக்கறாங்க. எங்கண்ணாலத்தையே அத வச்சிதான் ஓட்டலாம்னு எங்கப்பன் ரோசணையில இருக்கு. அம்புட்டையும் குடுத்துட்டு என்ன பண்றதுன்னு பதில் சொல்லாம நாளை தள்ளுது."

"அடி போடி போக்கத்தவளே, இருந்து இருந்து ஒன்னையும் பாத்து கட்டிக்கறேன்னு ஒத்தன் சேதி சொல்லியிருக்கான். கடனெ ஒடனெ வாங்கி ஆவுற சோலிய பாப்பீங்களா... அதுக்கும் நொட்ட சொல்லிகிட்டு... இதயும் வுட்டோட்டிங்கன்னா, அப்புறம் ஒனக்கு செம்மத்துலயும் தாலி ஏறாது. ஆமா சொல்லிப்புட்டேன்..."

"ஏறாட்டி போவுது போ... எங்கயில என்ன இருக்கு. ரெண்டாந்தாரமா இருக்கேனு கூட சொனங்கல... எங்கப்பன் என்ன நெனச்சிகிட்டு இருக்கோ, அதான் கடைசியில நடக்கும். அதுக்கும் மேல அய்யனாரப்பன் இருக்காரு. அவரு பாத்துக்குவாரு. அதுவும் இல்லாட்டி, அய்யனாருதான் தொணை, அவரையே கட்டிகிட்டதா நெனச்சி அப்பிடியே கெடக்கேன்."

"அடிச் செருப்பாலே, நீ கெட்ட கேட்டுக்கு அய்யனாரு கேக்குதா? ஆக்கங்கெட்ட மூதி... நீ பேசலடி, நீ தின்ற பன்னி கொளுப்பு பேசுது... போ போ... தண்ணி மொண்டுகிட்டு பன்னி மேய்க்கப் போ... அதா ஒனக்கு கெதி."

"ஆண்டாளு ஆசப்பட்டா நியாயம்... இந்த அழகம்ம ஆசப்பட்டா குத்தமா? போ கெழவி, நீ என்னா அய்யனாருக்கு ஏஜண்டா?... நா கேட்டுக்கறேன் அதுங்கிட்டயே."



"மத்தவங்களைப் போல கடை கடையா ஏறி இறங்கி ஐவுளி செலக்ட் பண்றது எனக்குப் பிடிக்காது..."

"அதுக்காக இப்படி ஒரே கடையில் ஒரு வாரம் உட்கார்ற தும் தப்புமா!"

- பம்மல் நாகராஜன்

நயினார் குப்பத்துலேர்ந்து ஒரு சேதியும் வரல. பேச்சிமுத்துவும் ஏன் என்னான்னு கேட்டுக்கல. அழகம்மைக்கு தண்ணி மொள்றதுக்கும், பன்னி மேய்க்கறதுக்கும், பெரப்பங்கூடை பின்றதுக்கும், ராட்டி தட்றதுக்கும், அய்யனாருக்காக வெசனப்படறதுக்கும் பொழுது தீர்ந்து போய்கிட்டு இருந்துச்சு.

தரவுப் பேகன மாசானம் நேத்து கூட வந்து, "என்ன பேச்சிமுத்து, சீக்கிரம் ஒரு முடிவச் சொல்லப்பா. அவங்கள வேற எடமாவது பாக்கச் சொல்லுவேன்லே" அப்பிடின்னு நச்சரித்தது, பேச்சி முத்துவை ஒரு வழியா அசச்சது.

"இந்தா, மாசானம் செத்த நில்லு. 'ம்'ன்னுங்காட்டியும் விருட்டுன்னு பறக்கறயே. ஆவறது அய்யனாரப்பன் செயலு. அவங்க கேக்கறத செஞ்சிபுடுவோம். மேக்கொண்டு என்ன செய்யணுமோ அதச் செய்."

'அப்பாடா, தேரு ஒரு வழியா நெலைக்கு வந்திச்சு'ன்னு பெருமூச்சு வுட்டா அழகம்ம.

பேச்சிமுத்து சம்மதம் சொல்லி ஆச்சு பத்து நாளு. ஒரு வெசானக்கெளம காலம்பற அழகம்ம காட்டுக்கு கெளம்பிகிட்டுருந்த நேரம். பால்கார மணி "எக்காவ், ஏ

அழகம்மக்காவ்'' அப்பிடின்னு கொடலு நடுங்கறா மாதிரி கூப்பாடு போட்டான்.

''என்னாத்துக்கடா மணி இப்பிடி கூப்பாடு போடற?'' எரிச்சலோடு கேட்டா அழகம்மா.

"ஒங்கப்பன் சாராயக்கடை பாண்டி கிட்ட எக்கச்சக்க பாக்கியாம். ஒரே அடி தடியாப் போயி, ஒங்கப்பன சாத்திட்டானுங்க. எல்லாம் சேத்து அறனூறு ஆகிப் போச்சாம். அதுக்கு ஈடா பன்னிகள கறி கடக்காரன்கிட்ட ஆயிரத்துக்கு வெலப் பேசி வித்துப்புட்டான் பாண்டி. இன்னும் நானூறுக்கு குடிச்சே கணக்குத் தீர்த்துப் புடணும்னு அக்குறும்பா பஞ்சாயத்துப் பேசி முடிச்சுப்புட்டானுங்க. போதயில ஒங்கப் பனும் சரின்னு ஒத்துக்கிச்சாம். கரி ஓடையாண்ட மேச்சலுக்கு வுட்டிருந்தியா? போச்சு போ!"

வயத்த கத்தி நெருப்பெறும்பு கடிச்சா மாதிரி பதறிப்போய், "அய்யய்யோ இருந்த அஞ்சயும் குடிச்சே தோத்துப்புட்டானா? இத கேப்பாரில்லையா?..." வாயிலயும் வயித்திலயும் அடிச்சுகிட்டு ஓடினா அழகம்மா.

அன்னிக்கு கரி ஓட பக்கம் போனவதா. பொறவு வூடு திரும்பாம அய்யனாரு செலைகிட்டயே படுத்துக் கெடந்தா. ஒருவார போத தெளிஞ்சு பேச்சிமுத்து ஆன மட்டும் கெஞ்சிப் பாத்தும், வேலாயி கெழவி கூட என்னன்னமோ சொல்லி, மெரட்டிப் பாத்தும் அசஞ்சி குடுக்கல அழகம்மா.

அப்படியே வெறிக்கப் பாத்தபடி குந்தி யிருந்தா அழகம்மா. அய்யனாருக்குப் படச்ச வங்க வாழப்பழத்தயும், ஒடச்ச தேங்காவயும் அவகிட்ட போட்டுட்டுப் போனாங்க. பசிச்ச நேரத்துல தின்னுட்டு அங்கேயே கெடந்தா. அப்புறம் வூட்டுல மிச்சம் மீதி மிஞ்சனத 'அய்யனாரு கோயில்ல அழகம்ம கெடக்கும் அதுகிட்ட குடுன்னு' குடுத்தனுப்ப ஆரம்பிச்சாங்க. அவளுக்கும் பொழுதும் ஓடி, பொழப்பில ஏதோ ஒண்ணுல பாதியும் ஒடிச்சு. எப்பவாவது ராத்திரியில அழுகுரலோடு அவ பாடறது கேக்கும்.

***பொளுது சாஞ்சா***
***சூரியரு தூங்கறாரு***
***விடிஞ்ச பெறவு***
***சந்திரரு தூங்கறாரு***
***நீ மட்டும் தூங்கலயே***
***என் ராசா அய்யனாரே***
***ஆரு ஒன்ன தூங்க வப்பா***




***பாழுங்கெணறு தூங்குது***
***பாம்பு பல்லியுந்தா தூங்குது***
***ஊரு முச்சூடும் தூங்குது***
***ஒன்ன மட்டும் தூங்க வைக்க***
***என்ன வுட்டா ஆரிருக்கா?***

ஓலமா கேக்கிற அவ பாட்டு, ராத்திரி மய்யிருட்டில கொல்லயில ஒதுங்கற பொட்டப்புள்ளைங்களுக்கு தொணைக் காச்சு.

"விடிஞ்சப்பறம் ஏண்டி ராவெல்லாம் பாடிக்கிட்டு கெடந்தே?'' அப்பிடின்னு யாராச்சும் கேட்டா, ''தூங்கற சாமிய எல்லாம் செவங்கோயில்லயும், பெருமா கோயில்லயும் முழிக்க வைக்கப் பாடறாங் களே, அது மாதிரிதான்... இத்தினி வருசமா தூங்காம இருக்கற அய்யனார, அப்புறம் யார்தான் தூங்க வைக்கறது?'' அப்பிடின்னு ஆக்ரோசமா கேப்பா.

அப்புறம் யாரும் எதுவும் அவளை கேக்கறதேயில்ல. அவ பாட்டும் அழுகையும் கூட ஓயாமப் போச்சு. போறது, வாறது, நண்டு சிண்டு அத்தனையும் அழகம்மைக்கு புத்தி பெசகினதா பேசிக்கிச்சிங்க. ●

**பெ**ண்களைச் சந்திக்கும் பொழுது நிச்சயம் இந்தக் கேள்விகளை கேட்டே தீருவது என்றிருப்போம். ஆனால் பார்த்த மாத்திரத்தில் அத்தனையும் மறந்து விடுவோம்.

எத்திராஜ் கல்லூரி யூனியனில் இடம் பெற்றிருக்கும் இந்த ஃபைவ் அண்ட் லவ்விகளிடம் நம் பாச்சா பலிக்கவில்லை. கேட்டே விட்டோம்.

• நிலீனா, கருணா

'பெண்களுக்கு நகைச்சுவை உணர்வே இல்லை என்பது சரிதானே?'

'நட்பாகப் பழகும் ஆண் திடீரென 'ஐ லவ் யூ' என்று உருக்கமாகச் சொன்னால்?'

'வாயைத் திறந்தாலே அருவியாய்க் கொட்டுவது இங்கிலீஷில்தான். ஏன் தமிழை வெறுக்கிறீர்கள்?'

'ஏன் ஊதாரியாகச் செலவு செய்கிறீர்கள்? டீ.வி சீரியல் பார்க்கிறீர்களே, புத்தகம் படிப்பதுண்டா?'

'பெண்களுக்குள் மட்டும் ஏன் ஈகோ?...'

என்று ஒரே மூச்சில் கேட்டுவிட, புருவம் அரை வட்டமாய் மாறிய ஆச்சர்யத்தில் விளக்கம் சொல்ல தொடங்கினர், சரண்யா, பிரியங்கா, நிலீனா, கருணா, ஷஹ்ருதா ஐவரும்.

**"பெ**ண்கள் நாலுபேர் ஒண்ணா இருந்தா வீரப்பனிலிருந்து, வீரேந்திர ஷேவாக் வரைக்கும் கிண்டலடிச்சு, சத்தமா சிரிச்சுட்டே இருப்போம். ஹா....ஹா....ஹா... விவரம் தெரியாம அடுத்தவங்களைப் புண்படுத்தற ஆண்களோடதுதான் நகைச்சுவைன்னா, ஸாரி,

# பெண்களிடம் கேட்க மறந்த கேள்விகள்!

• சரண்யா



அந்த விளையாட்டுக்கு நாங்க வரலை. பெண்கள் காமெடி ஸ்கிரிப்ட் எழுத ஆரம்பிச்சா, விவேக் சிட்டெல்லாம் கிழிஞ்சுடும் தெரியுமா? ('கல கல' எனச் சிரிக்கிறார்கள்.)

நட்பா பழகுறவன் திடீர்னு ஐ லவ் யூ சொன்னா அவ்ளோ தான். அதுக்கப்புறம் அவன் முகத்துல விழிக்கறதே பாவம். ஏன்னா, ஏதோ அரியர்ஸ் வைச்ச மாதிரி மறுபடியும் லவ் எக்ஸாம் எழுதுவான். தேவையா நமக்கு? மத்தபடி பெண்ணுக்கும் அவனைப் பிடிச்சிருந்தா, அவனோட நடவடிக்கையிலிருந்தே தெரிஞ்சுக்கலாம் இது வெறும் ப்ரெண்ட்ஷிப் மட்டுமில்லைனு.

ஹலோ, என்னது? தமிழை நாங்க வெறுக்கறோமா? ஹூ செட்



* ஃபைவ் அண்ட் லவ்லி!

தாக பீற்றிக் கொள்வார்கள். பலதரப்பட்ட புத்தகங்களும் படிப்பதால்தானே, இன்றைய தேதியில் பெண்கள் நாசா வரை செல்ல முடிகிறது?

பெண்களிடம் ஈகோ? பார்த்தீங்களா. இது மனுஷங்ககிட்ட இருக்கிற பொதுவான ஒரு குணம். படிப்பு விஷயத்துல வேணா பெண்களிடையே போட்டி, பொறாமை இருக்கலாம். மத்தபடி ஒரு நல்ல ஃப்ரெண்ட்ஷிப் இல்லாம எந்தப் பொண்ணாலும் முன்னுக்கு வர முடியாது'' என்றெல்லாம் பவ்யமாக பேசிக் கொண்டிருந்தவர்கள் திடீரென விழித்துக் கொண்டு, ''அதானே, கேர்ள்ஸ் காலேஜுக்குள்ளேயே வந்து, எங்களையே இப்படியெல்லாம் கேள்வி கேக்குறீங்களா, இருங்க, ஹேய், ஹரி அப்... கால் ஆல் கேர்ள்ஸ், ஒருத்தர் விடாம உடனடியா வரச் சொல்லு. இவங்களை ரவுண்டு கட்டுவோம்'' என்று அலர்ட் ஆக, "ஹே உங்களுக்கு இவ்ளோ நகைச்சுவை உணர்வு இருக்கா, க்ரேட்யா'' என்று ஐஸ் வைத்ததில் உருகிப் போய், அழகான புன்னகையோடு போனால் போதுமென்று விட்டனர். அப்பாடா!

திஸ்? ஏதாவதொரு தமிழ்ப் பொண்ணு இங்கிலீஷில் தொடர்ந்து பேசினாலே அவளை பயங்கரமா ஓட்டுவோம். ஒரு பொண்ணு தன்னை க்ராஸ் பண்றான்னு தெரிஞ்ச உடனே, பாய்ஸ் என்னமா செல்போன்ல பீட்டரிங் விடுவாங்க. அவங்ககிட்ட கேட்க வேண்டிய கேள்வி இது.

பெண்கள் செலவு செய்வதால் இன்றைக்கு நாட்டில் எத்தனை தொழில் வளம் பெருகுகிறது தெரியுமா? (ஓ.ஹோ!) அந்நிய நாட்டுக் கம்பெனிகள் எங்களை நம்பி வருவதால் எத்தனை பேருக்கு வேலை வாய்ப்பு?

டீ.வி சீரியல்கள் அதிகம் பார்ப்பது ஆண்களும்தான். ஆனால் ஒரு பந்தாவுக்கு வெளியே காட்டிக் கொள்ளாமல், பி.பி.சி., சி.என்.என். சானல்களில் வீரப்பன் என்கௌண்டரை பார்த்த

- ச.ந. கண்ணன்

படங்கள் : ஸ்ரீஹரி



''தலை தீபாவளிக்கு வந்த மாப்பிள்ளையின் கையில் என்ன பெரிய கட்டு? பட்டாசு வெடிச் சாரா?''

''ஊஹூம், பட்சணம் சுட்டார்!''

- பம்மல் நாகராஜன்

படிக்க, அதன்படி நடக்க,
என்றென்றும்
பாதுகாக்க

# மங்கையர் மலர்

நவம்பர் 2004

# தீபாவளி – ரமலான் இரட்டைச் சிறப்பிதழ்



## ரமலான் நோன்பு

- சிறப்புச் செய்திகள்

## ஈச்வரி ஜெகதீச்வரி

- ஆன்மீகத் தொடர்



# இளம் உழைப்பாளிகளின் தீபாவளி

வாசகிகளுக்கு 'பட்டு மழை!'
பட்டுப் புடைவை
பரிசுப் போட்டி ஆரம்பம்!

வழங்குவோர் : காஞ்சிபுரம் அறிஞர் அண்ணா பட்டு
நெசவாளர் கூட்டுறவு சங்கம்

www.mangayarmalaronline.com

# ஹலோ, இறைவா - 15

சிறுமி உமாவுக்கு லட்டு என்றால் ரொம்பப் பிடிக்கும். ஒரு நாள் உறவினர் வீட்டு நிகழ்ச்சி ஒன்றுக்கு தன்னுடைய அம்மாவுடன் போயிருந்தாள். அங்கே ஒரு பூஜை நடந்து முடிந்தது. பிரசாதமாக எல்லாருக்கும் ஒரு பெரிய லட்டு கொடுத்தார்கள். லட்டு கொடுத்துக் கொண்டு வந்தவர், உமாவிடம் வந்தவுடன், ஒரு விநாடி நின்றார். 'இந்தச் சிறுமியால் இவ்வளவு பெரிய லட்டை சாப்பிட முடியுமா? வீணாக்கிவிட்டால்?' என்று யோசித்தார். ஒரு லட்டை எடுத்து, அதிலிருந்து கொஞ்சம் விண்டு எடுத்து, அதை உமாவிடம் கொடுத்தார்.

உமாவின் முகம் சுருங்கிப்போனது. "எல்லோருக்கும் முழு லட்டு கொடுத்தீங்க! எனக்கு மட்டும், உடைத்து, கொஞ்சம் தர்றீங்களே! எனக்கு லட்டு வேணாம் போங்க!'' என்று கோபித்துக் கொண்டு, அழ ஆரம்பித்தாள். லட்டு கொடுத்தவர் குழம்பிப் போனார். 'போனால் போகுது!' என்று ஒரு முழு லட்டைக் கொடுத்துவிடலாமா? என்று நினைத்த சமயம் பார்த்து, அங்கே வந்த ஒரு பெண்மணி, "உமா உனக்கு முழு லட்டுதானே வேணும்?'' என்று கேட்டுவிட்டு, உடைந்த லட்டுக்களை தம் கையில் வாங்கிக் கொண்டார். பக்கத்து அறைக்குள் போனார். தூளாக இருந்த லட்டை, விரல்களால் நன்றாக அழுத்தி, சிறு சைஸில் ஒரு லட்டு பிடித்து விட்டார். அந்தச் சிறிய லட்டை உமாவிடம் கொண்டு வந்து கொடுத்ததும் அவள், 'ஹை! எனக்கும் முழு லட்டு!'' என்று சொல்லி, அந்த சிறிய லட்டை வாங்கிக்கொண்டாள். (எனக்கு மட்டும் ஏன் சிறிய லட்டு!' என்று கேட்டால், சிறிய பெண், சிறிய வயிறு, சிறிய வாய், சிறிய லட்டு!' என்று விளக்கமும் தயாராக இருந்தது!)

சிறிய லட்டு என்பதை லட்சியம் செய்யாமல், அதை வாயில் போட்டு ருசிக்க ஆரம்பித்தாள் உமா. மாணவர்கள் எல்லாருமே உமாவை ஒரு ரோல் மாடல் போல பின்பற்ற வேண்டும் என்பது என் ஆலோசனை. உமா, தன் லட்டு சிறியது என்பது பற்றிக் கவலைப்படவில்லை. ஆனால், அது முழுசாக, குறைபாடு ஏதுமில்லாமல் இருந்தது பற்றி திருப்தி அடைந்தாள்.

மாணவர்களாகிய நீங்களும், எந்த ஒரு விஷயம் என்றாலும், அரை குறையாக இல்லாமல், முழுமையாகத் தெரிந்து



## பெரிய லட்டு; சின்ன வாய்!

# மாணவர்கள் கட்டாயம் படிக்க வேண்டிய தொடர்!

கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் கொண்டிருக்க வேண்டும்.

பகவான் கிருஷ்ணர், கீதையின் பதினாறாவது அத்தியாயத்தில், மனிதர்கள் பெற்றிருக்க வேண்டிய முக்கியமான குணங்களைப் பட்டியலிடுகிறார். பயமின்மை, தூய்மையான எண்ணங்கள், அறிவுக்கான தேடுதல், சேவை என்று மொத்தம் இருபத்து ஆறு விதமான குணங்கள் அதில் இடம் பெறுகின்றன.

அந்த குணங்கள் என்னென்ன என்று வெறுமனே தெரிந்து வைத்திருந்தால் மட்டும் போதாது. அவற்றை வெற்றிகரமாய் கடைப்பிடிக்கவும் வேண்டும்.

ஆதிசங்கரர் சொன்ன கதை இங்கே எனக்கு நினைவுக்கு வருகிறது. ஓர் அந்தி மாலைப் பொழுதில் ஒருவர் தனியாக பாதை ஒன்றில் நடந்து போய்க் கொண்டிருந்தபோது, வழியில் பாம்பு ஒன்று இருப்பது தென்பட்டது. அவர் பயந்து விட்டார். அதைத்தாண்டி நடந்து செல்ல அவருக்கு தைரியமில்லை.

ஆனால், வழியில் பாம்பு கிடப்பதையே கவனிக்காமல், பலரும் அந்த வழியில் நடந்து போய்க் கொண்டுதான் இருந்தார்கள். அதைப் பார்த்து அவர் மேலும் குழம்பிப் போனார்.

அந்த வழியாய் வந்த அவரது நண்பர் ஒருவர் விசாரித்தபோது, இவர் பாம்பு பற்றிச் சொன்னதும், நண்பர் தம்மிடமிருந்த விளக்கை அதன் அருகில் கொண்டு போய் வெளிச்சமாக்கியதும், 'அது உண்மையில் பாம்பு இல்லை; வெறும் கயிறு' என்று பயந்த மனிதர் தெளிவு பெற்றார்.

ஆதிசங்கரர் கூறும் இந்தக் கதையிலிருந்து நாம் ஒரு உண்மையைப் புரிந்து கொள்ளலாம். வழியில் கிடப்பது பாம்பு இல்லை; வெறும் கயிறு என்பதைப் புரிய வைக்க, விளக்கு வெளிச்சம் தேவைப்படுவது போல, வாழ்க்கையில் பல விஷயங்களில் தெளிவைப் பெறுவதற்கு அறிவு என்கிற வெளிச்சம் அவசியம் தேவை.

இந்த அறிவு என்கிற வெளிச்சம்தான், வாழ்க்கைக்கே ஒரு கலங்கரை விளக்கு. சுவாமி விவேகானந்தர், மத நம்பிக்கை வேறு, ஆன்மிகம் வேறு என்று அடிக்கடி குறிப்பிடுவார்.

ஒவ்வொரு மனிதருக்குள்ளேயும், முழுமையான ஆன்மிகவாதியாக பரிணாம வளர்ச்சி பெருவதற்குரிய குணங்களும், தகுதிகளும் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. ஆனால், உடல், மனம், மன உறுதி, தியானம் ஆகியவை மூலம் முழுமையான மனிதனாக வளர்ச்சி பெற வேண்டும்.

இன்னொரு கதை சொல்லட்டுமா?

ஒரு மனிதனின் கனவில், கடவுள் ஒரு நாள் தோன்றி, உன் வீட்டுக்குப் பக்கத்தில் இருக்கிற பெரிய பாறையை, தினமும் காலையில் எழுந்தவுடன் ஒரு மணி நேரம் உன் முழு பலத்தையும் பயன்படுத்தி தள்ளு' என்று கூறினார்.

மறுநாள் காலையில், கனவில் கடவுள் கூறியபடியே, அந்த மனிதன், அந்தப் பாறையின் முன் நின்று கொண்டான். அதன் மீது தன் இரண்டு கைகளையும் வைத்து, தன்பலம் முழுவதையும் பிரயோகித்துத் தள்ளினான். ஒரு மணி நேரம் ஆனது. வீடு திரும்பி விட்டான்.



**சுவாமி போதமயானந்தா**

மறுநாளும் போனான். மறுநாளும் போனான். ஒரு மணி நேரம் போல பாறையை பலம் கொண்ட மட்டும் தள்ளினான். வீடு திரும்பினான். இதே போல இரண்டு வாரங்கள் ஓடி விட்டன.

அன்று இரவு அவன் கனவில் ஒரு சாத்தான் தோன்றியது. "நீயும் பதினைந்து நாட்களாக, தினமும் அந்தப் பாறையை தள்ளிக் கொண்டு இருக்கிறாய்! உன் சக்தியெல்லாம் வீணானது தான் மிச்சம்' அந்தப் பாறையை ஓர் அங்குலமாவது உன்னால் நகர்த்த முடிந்ததா? இல்லையே! அப்புறம் எதற்காக பாறையை நகர்த்திக் கொண்டு இருக்கிறாய்?" என்று கேட்டது.

மனிதன் யோசித்தான். சாத்தான் சொல்லுவதிலும் ஒரு நியாயம் இருப்பதாகத் தெரிந்தது. "நீ சொல்லுவது சரி தான். ஆனால், கடவுள் என்னை முழுமையான ஈடுபாட்டுடன், பாறையைத் தள்ளும்படி சொல்லி இருக்கிறார். நானும் செய்வதாக வாக்குக் கொடுத்து விட்டேன். எனவே, அவரிடம், உன் கேள்வியைக் கேட்டு, பதில் தெரிந்து கொண்டு, பாறையைத் தள்ளுவதை நிறுத்துவது பற்றி முடிவு செய்கிறேன்" என்று சாத்தானிடம் சொன்னான்.

அன்று இரவு அவன் கனவில், கடவுள் தோன்றினார். சாத்தான் கேட்ட கேள்வியை கடவுளிடம் கேட்டான். கடவுள் புன்னகை புரிந்துவிட்டு, "நீ எழுந்து போய், கண்ணாடி முன்னால் நின்று, உன்னையே ஒரு தரம் முழுமையாகப் பார்த்துக்கொள்!" என்றார்.

அவன் கண்ணாடி முன்னால் நின்று கொண்டு, தன்னைப் பார்த்தான். "உன் கைகளைப் பார்! எவ்வளவு முறுக்கேறி பலம் பெற்றுள்ளன. உன் தோள்களைப் பார்! எவ்வளவு திரண்டு இருக்கின்றன! கால்களில் தான் எவ்வளவு பலம்! வயிற்றுப் பகுதியில் இருந்த சதைகளை எங்கே காணோம்!

"இவையெல்லாம் எப்படி நிகழ்ந்தன? நான் சொன்னேன் என்பதற்காக, பலன் என்ன என்று கணக்குப் பார்க்காமல், சிரத்தையோடு, பாறையை இன்னும் தள்ளியதால் கிடைத்த பலன். நான் உன்னை தினமும் பாறையைத் 'தள்ளு' என்றுதானே சொன்னேன். 'நகர்த்து' என்று சொல்லவில்லையே!" என்றார் கடவுள்.

வாயடைத்துப் போனான் அந்த மனிதன். ஆங்கிலத்தில் PUSH என்றால் வெறுமனே தள்ளு என்று அர்த்தம் பண்ணிக் கொண்டு விடாதீர்கள். Push Until Something Happens' என்பதன் சுருக்கம் தான் அது.

நாயன்மார்களில், பூசலார் நாயனார் கதை கேள்விப்பட்டிருக்கிறீர்களா? மன்னர் கட்டிய பிரம்மாண்டமான கோவிலைப் புறக்கணித்து விட்டு, சாதாரணமான மனிதரான பூசலார் நாயனார் மனதுக்குள்ளே கட்டிய கோவிலை விரும்பி வந்தார் இறைவன்.

எனவே, நாம் கடவுளை மனத்தில் நிறுத்தி 'ஹலோ இறைவா!' என்று அழைத்தால், அவர் மறு விநாடியே உங்களுக்கு 'ஹலோ' சொல்லுவார். காரணம், அவர் எப்போதும் உங்கள் கூடவே தான் இருக்கிறார்.

(நிறைந்தது)

தொகுப்பு : எஸ். சந்திரமௌலி

படம் : யோகா



"அந்த இன்ஸ்பெக்டர் பயங்கரவாதத்தைத் தடுக்கணும்ங்கறதுல ரொம்ப உறுதியா இருக்காரு..."
"நிஜமாவா?"
"ஆமா, அருவா மீசை வச்சிருந்தா கூட அரெஸ்ட் பண்ணிடுவார்னா பாரேன்!"
- ஜோசப் காமராஜ்



# புடவையை மாத்துங்கப்பா!

லண்டன் மெழுகு மியூஸியத்தில் இடம் பெற்றிருக்கும் முதல் இந்திய நடிகை என்ற சிறப்பு கிடைத்தது பற்றி ஐஸ்வர்யாவுக்கு படு சந்தோஷம்தான். "ஐ ஹாவ் நெவர் ஹாட் எ ட்வின். பட் இட் ஈஸ் வண்டர்ஃபுல். தாங்க்யூ" என்று பரவசப்பட்டுப் பாராட்டினாலும், நிஜ ஐஸ்வர்யா அளவுக்கு மெழுகு பொம்மையின் காஸ்ட்யூம் அசத்தலாக இல்லை என்ற குற்றச்சாட்டு எழுந்துள்ளது.

குறிப்பாக... அந்த சிவப்பு நிறப் புடைவை. "ஐஸ்வர்யாவின் சர்வதேச ஸ்டைலுக்கு ஏற்ற ரகமாக இல்லை. புடைவை உடுத்தப்பட்ட விதம் இன்னும் மோசம். கொசுவம் சீராக இல்லை. முன்பக்க ஃபிரில் தழைந்து தொங்குகிறது. எம்ப்ராய்ட்ரியும் கொச கொச என்று ஆளை அடிக்கிறது" என்று விசிறிகளிடமிருந்து விமர்சனங்கள் எழவே...

விக்கையும், புடைவையையும் விரைவில் மாற்றவிருக்கிறார்களாம்.

- ஆர்.எல்.



# சின்னான் செய்திகள்

காலங்கார்த்தால பேப்பரை எடுத்து விரிச்சோம்னா நாலு சொட்டு இரத்தம் தெறிக்குது நம்ம மேல! அந்த அளவுக்கு 'வன்முறை' செய்திகளே 'நடைமுறை'யா மாறிடுச்சு! அதான் இந்த சின்னான் கிளம்பிட்டேன், பேனாவுல நைட்ரஸ் ஆசிட்டை (அதாங்க 'சிரிப்பூட்டும் வாயு...' வேதியியல் சமாசாரம்) ஊத்திக்கிட்டு செய்திகள் எழுத வந்திருக்கேன். இஞ்சியைக் கடிச்ச மாதிரி மூஞ்சியை வைக்காம, ரீமாசென்னைப் பார்க்கிற ஃபீலிங்கில நியூஸைப் படிங்கப்பு!

ஜப்பான்ல நில நடுக்கம் தொடருது. ஆறு, ஏழுன்னு அது பாட்டுக்கு ரிக்டர்ல பதிவாகுது. பலத்த சேதம். அதேசமயத்துல தமிழகத்துல 'மன நடுக்கம்' தொடர்ந்துக்கிட்டு இருக்கு. அதாங்க, வீராணம், அரசு ஊழியர் பேச்சுவார்த்தை, போக்குவரத்து ஊழியர் போனஸ், மீனவர் டீசல் சலுகைன்னு நடுக்கங்கள் தொடருது. எல்லாம் தேர்தல் அதிகபட்ச வோட்டுப் பதிவு நடக்கத்தான். அதேமாதிரி கலைஞர் 'மண்ணின் மைந்தன்' 'கண்ணம்மா' படங்கள்ல, தேர்தல்ல 'அம்மா'வை கவுக்கிற மாதிரி வசனங்களை வகையா கொண்டு வருவார்னு உடன்பிறப்புகள் நம்பலாம்.

**7/G** போனேன். அதாங்க 'மதன்ஸ் பார்வையில்' தன்னோட ஒரிஜினல் கதை 90 சதவிகிதம்னு செல்வராகவன் ஒத்துக் கிட்ட ரெயின்போ காலனி, அப்படின்னா கஸ்தூரிராஜா, சின்ன வயசிலேர்ந்து செல்வராகவனைப் போட்டு வெளுவெளுன்னு வெளுத்திருக்காரு. இப்ப உண்மையிலேயே செல்.ரா வாழ்க்கையில் சோனியா அகர்வால் இருக்கிறாப்ல, இதுக்கு முன்னாடி இருந்த 'அனிதா' யாரு? படத்தோட கிளைமாக்ஸ் ஸீன்ல நடிச்சது ஹீரோ ரவி கிருஷ்ணாவா? இல்ல, செல்வராகவனேவா? (அவ்ளோ உருவ ஒற்றுமை!) பேசாம செல்வராகவனே நடிச்சிருக்கலாம். ஏன்னா, இப்ப அதானே ட்ரெண்டு!

"மாயாவி என்றீர், மர்ம மனிதன் என்றீர். "சாதிச்சுப்புட்டோம்ல" என்ற ரேஞ்சில் நாமக்கல்லில் தமிழக காவல் துறை சார்பில் பேனர்கள் பளபளக்க, வீர(ா)ப்பா விஜயகுமாரும் 'நடைப்பயண' லிஸ்டில் சேர்ந்துள்ளார். இப்ப காவல் துறையின் ஹீரோ விஜயகுமார். ஆனா ஹீரோயின், அதாங்க ஜெயலட்சுமி... எதை யாவது ஏடாகூடாம கிளப்பி விட்டுடப் போறாங்க! பார்த்து 'திருஷ்டி' சுத்திப் போடுங்க, திருமதி.விஜயகுமார்.

சென்னை மணலியில இரும்பு வியாபாரியை மிரட்டி லஞ்சம் வாங்கப் பார்த்த ஒரு இன்ஸ்பெக்டரை, 'கையும் லஞ்சமுமா' பிடிச்சிருக்காங்க லஞ்ச ஒழிப்பு போலீஸார். இரும்பு வியாபாரிகிட்ட கரும்பு மாதிரி பணம் வாங்கப் பாத்தாரு. இப்ப 'இரும்புக் கம்பிகளை எண்ணிக்கிட்டு இருக்காராம் இன்ஸ்பெக்டர்.

அடுத்து வேறென்ன, 'டாட்டா'தான்!





# பாலிடிக்ஸ் பஜார்



அம்மாவின் கூட்டணிக்கு ஆதரவளித்தபோது வீரமணி - ஜெ சந்திப்பு அடிக்கடி நடப்பதும், கூட்டணிக் கூட்டத்தில் ராஜகுருவாகப் பங்கேற்று மேலான ஆலோசனைகளை வாரி வழங்குவதும் வழக்கமாக நடந்ததல்லவா? ஆனால் தற்போதைய கூட்டணியிலோ நிலைமை தலைகீழ். அரசியல் நடவடிக்கை தொடர்பாக, கலைஞரும் வீரமணியும் எவ்வித ஆலோசனைகளையும் பரஸ்பரம் பரிமாறிக் கொள்ளாதது, இரு கழகக் கண்மணிகளுக்குமே வருத்தமாக இருக்கிறதாம். இதனைக் களையும் வகையில், இனி நடக்க உள்ள கூட்டங்களில் ராஜகுருவின் ஆலோசனைகளும் அலசப்படுமாம். ஆனால் முடிவு வழக்கம் போலத்தானோ?

விஜயகாந்த் பெயரில் வெளிவரும் அரசியல் வார இதழ்களில், ஒரே மாதிரியான தகவல்களே மாறி மாறி வருவது, அவரது ரசிகர்களை ரொம்பவும் சலிப்படையச் செய்துவிட்டதாம். ரசிகர்களின் இப் புலம்பல் தலைமையின் கவனத்துக்குப் போகவே, தற்போது விஜயகாந்த் பற்றிய புதிய தகவல்கள் அதிக அளவில் திரட்டப்பட்டு (!) அதனை அதிக அரசியல் நெடியுடன் தருவதற்காக, ராப்பகலாக முயன்று வருகிறார்களாம். அத்தகைய தகவல்களில் 'புயலின்' புராணம் தான் ஹைலைட்டாக இருக்கும் என்ற பேச்சும் பலமாக அடிபடுகிறது.

வீரப்பன் மூலமாக தங்களுடைய இமேஜை ஓரளவுக்கு உயர்த்திக் கொண்ட துறையினர், இந்த வாய்ப்பை கச்சிதமாகப் பயன்படுத்தி தங்களது நீண்ட... நெடுநாள் கோரிக்கையான 'சங்கத்திற்கு' அனுமதி பெற திட்டமிட்டுள்ளார்களாம். இவ் விஷயத்தில் மேலிடத்துடன் பேச, மேலிடத்தின் ஒரு சில செல்லப் பிள்ளைகளை மட்டும் இடம் பெறச் செய்து, அதன்மூலம் காரியம் சாதித்துக் கொள்ள திட்டமிட்டுள்

ளார்களாம் சம்பந்தப்பட்ட துறையினர். எண்ணம் பலிக்குமா?

**வைகோ** பாணியில் எழுச்சியுடன் பயணிக்கத் திட்டமிட்டுள்ள ஜெகத்ரட்சனின் வரைபடத்தில் வன்னியர்கள் அதிகம் வசிக்கும்



பகுதிகளும், பா.ம.கவின் செல்வாக்கு மிக்க பகுதிகளு



மான வடமாவட்டப் பகுதிகளே முழுக்க முழுக்க இடம் பெற்றுள்ளனவாம். இதுதான் அய்யாவை டென்ஷனாக்கும் திட்டம் என்றால், அப் பயணத்தின்போது மரக்கன்றுகளை நட உள்ளது, சின்னய்யாவையும் டென்ஷனாக்கி விட்டதாம்.

**அ**த்வானி மீண்டும் தலைவராகி விட்டதை அழுத்தம் திருத்தமாக மக்களிடம் கொண்டு செல்ல, பாஜக தரப்பில் விரிவான திட்டமொன்று தயாராகி வருகிறது. அதன் ஒரு பகுதியாக, நாடு முழுமைக்கும் மீண்டும் ரத யாத்திரை நடத்த உள்ளார்களாம். அதை முன்பொரு முறை நான்கு தலைவர்களால் நான்கு திசைகளில் நடத்தப்பட்டது போன்றே நடத்துவாரா" அல்லது அத்வானி தலைமையில் மட்டுமே நடத்துவதா என்பதுதான் தற்போதைய குழப்பமாம்.

**ச**மீபத்தில் வெளியிடப்பட்ட கருத்துக் கணிப்பொன்றில், பெரம்பலூர் அமைச்சருக்கு வழங்கப்பட்ட இடம் மற்றும் அடைமொழி பற்றி மக்களிடம் எடுத்துச் சொல்ல, கொஞ்சம் லேட்டாகவே யோசனை வந்திருக்கிறதாம் மாற்று முகாமுக்கு. அப்படிப் பேசினால் அதற்கு பதிலடி தரும் விதமாக அக் கருத்துக்கணிப்பு பற்றி எதிரணித் தலைவி முன்பு கூறிய கருத்துகளை முன் வைத்து, 'கவுண்டர் மீட்டிங்' போடவும் தயாராக உள்ளதாம் சம்பந்தப்பட்ட தரப்பு. எப்படியோ இரு தரப்பு குட்டுகளும் உடைந்தால் சரி என்கிறார்கள் தொகுதி மக்கள்.

- கலை



# 15. உன்னால் முடியாது மன்னா!

வீரனான இந்தளதேவனையும், அவன் மகன் ராஜசிம்மனையும் தந்திரத்தால் வீழ்த்தி, தனது திட்டத்தின் முதல் வெற்றியைப் பெற்றுவிட்ட ராகுலன் சற்று நேரம் அங்கேயே நின்றான். தன்னுடன் வந்த ராஷ்டிரகூட வீரரில் பாதிக்கும்மேல், தரையில் பாண்டிய வீரர்களுடன் கிடப்பதைக் கண்டவனுக்கு, இனி தனது திட்டங்களை நிறைவேற்ற இன்னும் அதிக வீரர்கள் தேவையென்பது புரிந்தது. குரூரப் புன்முறுவலுடன் எஞ்சிய தனது வீரர்களுடன், மகாராணியின் உத்தரவின்படி கொங்கு நாட்டு கெந்த தேவராயனைச் சந்திப்பது என்று தீர்மானித்து கானகத்தினூடே தெற்கு நோக்கி விரைந்தான்.

யவனமங்கையருக்கு ஆறுதல் கூறிய பாண்டிய வீரர்கள், கோட்டையிலிருந்து வரும் பாதையில் புழுதிப்படலம் எழுவதைக் கவனித்தனர். வருவது பாண்டிய மன்னனின் படைப் பிரிவென்பது சற்று நேரத்தில் புலப்பட்டது. முன்னணியில் தன் பெரும் சாம்பல் நிறப் புரவியில் பாண்டிய மன்னனே வருவதைக் கண்ட வீரர்கள் தலைவணங்கி வரவேற்று, கோட்டைத் தலைவன் இன்னும் திரும்பவில்லையென்பதையும் தெரிவித்தனர். யவனமங்கையரை கோட்டைக்கு அழைத்துச் செல்ல உத்தரவிட்ட மன்னன், வீரர்களுடன் கானகத்துப் பாதையில் விரைந்தான்.

சமவெளியை அடைந்த மன்னனும், பாண்டிய வீரர்களும் விக்கித்து நின்றனர். பாண்டிய வீரர்களும், ராஷ்டிரகூடரும் நிலத்தில் உருண்டு கிடந்த காட்சி, அங்கு எத்தகைய போர் நடந்தது என்பதைப் புலப்படுத்தியது. அம்புகளும், ஈட்டியும் பாய்ந்து குருதி வெள்ளத்தில் கிடந்த இந்தள தேவனைச் சுற்றி கிடந்த ராஷ்டிரகூடரின் உடல்கள், அவனது இறுதிப் போர் எத்தனை உக்கிரமாக நடைபெற்றது என்பதைத் தெரிவித்தன. இறுதியாக ராஷ்டிர கூடனின் உடலில் பாய்ந்திருந்த தன் வாளின் பிடியை, உயிர் பிரிந்தபின்னும் விடாதிருந்த இந்தள தேவனைக் கண்ட மன்னனின் மனம் கனத்தது.

அடுத்து சுற்றிலும் ஓடிய மன்னனின் விழிகள், ராஜசிம்மனைக் கண்டதும் ஸ்தம்பித்தன. "இந்தச் சிறுவனைப் போய் எதற்காக இந்தளதேவன் அழைத்து வர வேண்டும்?" என்று கடிந்து கொள்ளவும் செய்தான் மன்னன். நிலைகுத்தி நின்ற மன்னன் விழிகளில், ஈட்டியைப் பிடித்திருந்த ராஜசிம்மனின் கரத்தில் ஏற்பட்ட அசைவு, பதற்றத்தை ஏற்படுத்த புரவியிலிருந்து தாவிக் குதித்தவன், பாய்ந்து சென்று ராஜசிம்மனின் கரத்தைப் பற்றி சோதித்தான்.

அடுத்து அப்படியே ராஜசிம்மனை இருகரங்களாலும் அசையாமல் அள்ளிக் கொண்ட மன்னன், இந்தள தேவனுடன் மற்ற வீரர்களையும் சோதித்து, கோட்டைக்குக் கொண்டு வர உத்தரவிட்டுத் தன் புரவியில் ஆரோகணித்தான்.

அந்த சாம்பல் நிறப் புரவிக்கு மன்னனின் மனநிலை புரிந்திருக்க வேண்டும். ஒரே சீரான வேகத்தில் கோட்டையை நோக்கி விரைந்தது அது. கோட்டை வாயிலில் உபதலைவர்களும், பிரதானிகளும் நிற்க, உடன் காவி உடையில் நெடுநெடுவென்று உயரத்துடன், விஷ்ணு சித்தரும் தம் ராட்சத உதவியாளனுடன் நிற்பதைக் கண்ட மன்னன் முகத்தில் பெரும் சாந்தி படரத் தொடங்கியது.

அவரை நெருங்கி புரவியிலிருந்த

# மகுட வைரம்

படியே, அந்த இளம் வீரனை சிறு குழந்தையைப் போல் நீட்டிய மன்னன், "விஷ்ணு சித்தரே, சரியான சமயத்தில் வந்திருக்கிறீர். நீர் என்ன செய்வீர் என்பது தெரியாது. இந்த இளம்வீரன் உயிர் பிழைக்க வேண்டும்" என்றான் பாதி உத்தரவும், பாதிக் கெஞ்சலும் தொனித்த குரலில்.

பதிலேதும் கூறாமல் ராஜசிம்மனைத் தாங்கிக் கொண்ட விஷ்ணுசித்தர், திரும்பி மாளிகையை நோக்கி நடந்தார். உள்ளே நுழைந்து மேன்மாடத்து அறையொன்றில் மஞ்சத்தில் அவனைக் கிடத்தியவர், மெல்ல அசைத்து அசைத்து, ஈட்டியை எடுத்தார். மெல்லிய நூலிழை போல மூச்சு வந்து கொண்டிருப்பதையும், நாடிகளையும் சோதித்தவர் திரும்பி மன்னனை நோக்கி "மன்னா, இன்னும் இரு முகூர்த்த காலம் உயிர் இவன் உடலில் இருக்கும். அதற்குள் பராந்தகனை இங்கு அழைத்து வர இயலுமானால், இவனைப் பிழைக்க வைக்கலாம்" என்றார்.



உயிர் ஊசலாடக் கிடக்கும் ராஜசிம்மனுக்கும், பராந்தகனுக்கும் என்ன தொடர்பு என்று மன்னன் கேட்கவில்லை. "விஷ்ணு சித்தரே, நம் படைத்தலைவருடன் பராந்தகன் இங்கு தான் வந்து கொண்டிருக்கிறான்" என்றபடியே, அறையின் மூலையில் சோகம் தோய்ந்த முகத்துடன் நின்ற முகுந்தனை நோக்கினான் மன்னன்.

மன்னன் வார்த்தைகளை முடிக்கும் முன்பாகக் கதவை நோக்கிப் பாய்ந்த முகுந்தன், தடதடவெனப் படிகளிறங்கி ஓடினான். அடுத்த சில கணங்களில் மன்னனின் போர் ரதம், கோட்டையை விட்டுக் கிளம்பி அசுர வேகத்தில் பறந்தது.

சற்று நேரம் ராஜசிம்

மனைச் சோதித்த விஷ்ணுசித்தர், தமது உதவியாளனுடன் கோட்டையின் மேற்கில் விரிந்திருந்த கானகத்தை நோக்கிச் சென்றார். அவர் திரும்பியபோது இருவர் கரங்களிலும் பல மூலிகைகளும், வேர்களும், மரப்பட்டைகளும் இருந்தன. மாளிகைக்குத் திரும்பியவர் சுடுநீரும், தேனும், அகல் விளக்கொன்றும் கொண்டு வரப் பணித்தார். அவை வந்தபின் அறைக்குள் நின்ற மன்னனையோ, மற்றவர்களையோ அவர் நிமிர்ந்தும் பார்க்கவில்லை. மன்னன் இடையே கேட்ட இரண்டொரு கேள்விகளுக்கும், சரிவர பதிலேதும் கூறவில்லை.

மூலிகைகளை அகலில் வாட்டியும், சுடுநீரில் வேக வைத்தும், மரப்பட்டைகளை இடித்துப் பொடியாக்கியும், தேனுடன் கலந்தும், மூலிகைச் சாறுகளைப் பிழிந்து கலந்தும், வெகு மும்முரமாகப் பணியில் ஈடுபட்டார். சற்றுப் பெரிய அளவிலான அகல் விளக்கைக் கொண்டு வரச் செய்து, அதன் சுடரில் கிண்ணத்திலிட்ட மூலிகைச் சாற்றை, மிதமான சூட்டில் வைத்திருக்க உத்தரவிட்டார். அந்தப் பணியைச் செய்பவன் மன்னன்தான் என்றும் கவனிக்காதவர், "சற்று இறக்கிப்பிடி, அதிகம் உயர்த்தாதே" என்று கடிந்து கொள்ளவும் செய்தார்.

சற்று நேரத்தில் கோட்டை வாயிலிருந்து ஊதப்பட்ட கொம்புகள், படைத் தலைவரின் வருகையை அறிவித்து மன்னன் முகத்தை மலர வைத்தன. அரை நாழிகையில் படைத்தலைவர்களுடன், பராந்தகனும் உள்ளே நுழைந்தான்.

அறைக்குள் நுழைந்து மன்னனை வணங்கி நிமிர்ந்த பராந்தகனின் விழிகள், ராஜசிம்மனின் மீது பதிந்ததும் பிரமித்தன. அந்தப் பால் மணம் மாறாத முகத்தையும், அவன் காயங்களையும் கண்டவன், "இந்தச் சிறுவனையும் கொல்ல ஒருவனுக்கு மனம் துணிந்ததா? அந்த ராகுலன் என்ன மனிதன் தானா? இல்லை அரக்கனா?" என்றான் வேகத்துடன்.

விஷ்ணுசித்தர் பதிலேதும் கூறாமல் "பராந்தகா, சோழ உக்ரோதயத்தைக் கொடு" என்று கரத்தை நீட்டினார். உடனடியாக தன் கச்சை முடிப்பிலிருந்த உக்ரோதயத்தை அவரிடம் அளித்தவன், அவர் கூறியப்படி அகலில் எண்ணெய்க்கு பதிலாக மூலிகைச் சாற்றை மெல்லச் சரித்து விட்டான். தீபத்தின் ஒளி மெல்ல சிவந்து ஜொலித்தது. குறுகிய வாயுடைய ஜாடியொன்றின்மீது, உக்ரோதயத்தை, தீபத்திலிருந்து நான்கு விரற்கடை தூரத்தில் பொருத்திய விஷ்ணு சித்தர், மன்னனுடன் பராந்தகனையும், தன் உதவியாளனையும் தவிர மற்றவர்களை வெளியேறப் பணித்து, கதவுகளை மூடினார்.

காயத்தின்மீது நுரை ததும்பிய மூலிகைச் சாற்றைத் தடவி, மரப்பட்டைகளைக் கரைத்த தேனை ராஜசிம்மனுக்குப் புகட்ட உத்தரவிட்டார். உக்ரோதயம் மெல்ல உயிர் பெறத் தொடங்கியது. அதன் சிவந்த ஒளி உயர்ந்து அறையை



நிறைத்து, காயத்தின் மீதிருந்த மூலிகைச் சாற்றை இன்னும் நுரைக்க வைத்தது. அறையின் வெப்பம் உயர்ந்து, உயர்ந்து, அறைக்குள்ளிருந்தவர்களை வியர்வையில் குளிக்க வைத்தது.

நாழிகை சென்றதா, ஜாமம் சென்றதா தெரியவில்லை. வெகு நேரம் கழித்து ராஜசிம்மனின் உடல் சிறிது அசைந்தது. அவன் விழிகள் மெல்லத் திறந்தன.

அதுவரை அடித்து வைத்த சிலையாய் அமர்ந்திருந்த விஷ்ணுசித்தர் நிமிர்ந்தார். "மன்னவா, இனி இவன் பிழைத்து விடுவான்" என்றார் நிதானமாக.

மன்னன் அவரை நெருங்கி மூலிகைச் சாறு படிந்த அவர் கரங்களைப் பிடித்துக் கொண்டான். "விஷ்ணு சித்தரே, தக்க சமயத்தில் வந்து ராஜசிம்மனைப் பிழைக்க வைத்துவிட்டீர். நீங்கள் எதைக் கேட்டாலும் தரச் சித்தமாக இருக்கிறேன். என்ன வேண்டும், கேளுங்கள்" என்றான் உணர்ச்சி மிகுந்த குரலில்.

விஷ்ணுசித்தர் மெல்ல நகைத்தார்.

"ஏன் நகைக்கிறீர் சித்தரே?"

"நான் வேண்டுவதைத் தர உன்னால் முடியாது, மன்னா" எனறார் நகைத்தபடி.

"நீங்கள் வேண்டுவது என்ன, கூறுங்கள்."

"வைகுந்தன் திருவடியைத் தவிர நான் வேண்டுவது வேறென்ன இருக்க முடியும். தர முடியுமா உன்னால்?" என்றவர் "அவன் சம்மதமின்றி இந்த இளைய வீரனின் உயிரைப் பறிக்க காலனுக்கும் உரிமை கிடையாது மன்னா. இதில் என் பங்கும், உக்ரோதயத்தின் பங்கும் மிகச் சிறியதுதான். வித்தை, அறிவு, பொருள், பதவி எல்லாம் மற்றவர்க்குப் பயன்படவில்லையெனில், அவை வெறும் குப்பை. எனக்குத் தெரிந்ததைச் செய்தேன். அவ்வளவே. அதற்காக நீ எதையும் தர வேண்டாம்" என்றவர் தம் உதவியாளனை மட்டும் நிறுத்திவிட்டு, மன்னனையும் பராந்தகனையும் வெளியே செல்லலாமென்று கூறினார்.

**ஸ்**நானாதிபாதிகளையும் உணவையும் முடித்து மன்னன் அரண்மனைக் கூடத்தில் நுழைந்தபோது, இரு படைத் தலைவர்களும், பராந்தகனும் பகதத்தனுடன் முகுந்தனும் காத்திருந்தனர். விஷ்ணுசித்தர் இருக்கையொன்றில் அமைதியாக மற்றவர்களை கவனித்தபடி அமர்ந்திருந்தார்.

அநிருத்தரின் முகத்தில் உஷ்ணம் பரவிக் கிடந்தது. மன்னன் அமரும் வரையே பொறுத்தவர், "மன்னவா, நம் படைகளை இப்போதே அனுப்பி ராகுலனையும் அவன் வீரர்களையும் அழித்து விடலாம். அவன் கொங்கு நாட்டுக்குச் சென்றிருப்பதாக நம் ஒற்றர்கள் தெரிவித்திருக்கின்றனர். கொங்கு நாட்டுக்கெந்த தேவராயனையும் சேர்த்து அழித்து விடலாம்" என்றார் வேகத்துடன்.

அடுத்து நின்ற சோழர் படைத்தலைவனின் முகத்தில் சிந்தனை தெரிந்தது. அவன் விழிகள் பராந்தகன்மீது பதிந்து மீண்டதைக் கவனித்த மன்னன், "விக்கிரமவரையா, நீ ஏதோ கூற விரும்புவதாகத் தெரிகிறது" என்றான்.

"ஆம், மன்னா, பராந்தகன் பல்லவச்



சக்கரவர்த்தியைச் சந்தித்து வந்திருக்கிறான். அவன் கூறியபடி, நாம் உள் நாட்டுக் குழப்பங்களில் கவனம் செலுத்தும் போது எல்லையில் ராஷ்டிர கூடரால் அபாயம் நேரிடலாம்."

"பராந்தகன் கூறியவை உண்மைதான். மகாராணி ரேவாதேவியின் திட்டமும் ஏறக்குறைய அப்படித்தான். இதைப் பாருங்கள்'' என்றார் விஷ்ணுசித்தர். அவரது நீட்டிய கரங்களில் ஓலைக் குழலொன்றும் இருந்தது.

குழலின்மீது ராஷ்டிரகூட அரச முத்திரை தெரிந்தது. ஓலையின் எழுத்துகள் தெளிவின்றிக் கிடந்தன. பல இடங்களில் அடித்தும் எழுதப்பட்டிருந்தன. மன்னனிடம் ஓலையை அளித்த படைத் தலைவர், "மன்னவா, ஓலையை எழுதியவருக்கு தமிழில் அத்தனை தெளிவாக எழுத அறிந்திருக்கவில்லை என்பதும், இது வேறொரு ஓலையின் நகல் என்பதும் புலப்படுகின்றன'' என்றார்.

ஆமென்று தலையசைத்த விஷ்ணுசித்தர், "மன்னா, இவை மகாராணியால் கொங்கு மன்னனுக்கும். ராஷ்டிரகூட மன்னனுக்கும் எழுதப்பட்ட ஓலைகளின் நகல்கள். மகாராணியின் மெய்க்காவல் யவன மங்கையால் நகலெடுக்கப்பட்டு என்னிடம் கிடைத்தவை. இதன்படி ராகுலனின் திட்டம் அடுத்து உத்தமபாளையத்தில் முயற்சி செய்யப்படும். அதே சமயம் எல்லையில் படைகளைக் குவிக்கவும் ராஷ்டிரகூட மன்னரைக் கேட்டுக் கொண்டிருக்கிறான் மகாராணி.

அநிருத்தர் இடைமறித்தார் "மன்னவா, உத்தமபாளையத்தில் நம் ஆயுதசாலைகளை அழிக்கத் திட்டமிட்டிருக்க வேண்டும் ராகுலன். ரணதீரப் பாண்டியன்தான் அங்கு கோட்டைத் தலைவன். அவனுக்கு உதவியாக நம் வீரர்களை அனுப்பி வைக்கலாம்"

விக்கிரம வரையன் தெளிவாகக் கூறினான். "தேவையில்லை அநிருத்தரே. எல்லையில் ஏற்படப் போகும் நிலைமையைச் சமாளிக்க நம் வீரர்களைத் தயார் செய்வது போதுமானது"

"அப்படியானால் ராகுலன், அவன் வீரர்கள்..?"

விஷ்ணுசித்தர் முடிவாகக் கூறினார். ''மன்னா, ராகுலனை கவனிக்கும் பொறுப்பை பராந்தகனிடம் விட்டுவிடு. ராகுலனை இனி ராஷ்டிர கூடம் திரும்ப விடுவதில்லையென்று நந்திவர்மனிடம் கூறிவிட்டு வந்திருக்கிறான். படைத் தலைவர் எல்லைகளில் நம் வீரர்களை சித்தப்படுத்தட்டும்''

விஷ்ணுசித்தர் கூறியபடி பராந்தகனிடம் தனது முத்திரை மோதிரத்தையும், ரணதீரப் பாண்டியனுக்கு ஓலையும் அளித்த மன்னன், அன்றே அவனுக்கு விடையளித்தான். வழியில் சந்திக்க வேண்டியவர்களைப் பற்றியும் கூறினான்.

தெற்கே நீண்டு கிடந்த மலைகளையும், கானகத்தையும் நோக்கி, ராகுலன் சென்ற திசையில், பகதத்தனுடன் தன் பயணத்தைத் தொடங்கினான் பராந்தகன்.

(தொடரும்)

# பூமி சிரிக்கிறது!

**கவிகன்**

ஒவ்வொரு பூ
பறிக்கப்படும் போதும்
பூமியின் சிரிப்பொன்று
தொலைந்து போகிறது

தொலைந்து போகிற
நஷ்டத்தால் -
பூமியொன்றும்
பூக்களை ஒளித்து
வைப்பதில்லை...
தினசரி பூக்கள்
பறிக்கப்பட்டாலும் -
எங்கேனும் பூமி
தொடர்ந்து சிரித்துக்
கொண்டேதான்
இருக்கிறது...



அஞ்சலி

# கண்ணியத்துக்கு ஒரு கோமகள்

தாய்மைக் கனிவு நிறைந்த வட்ட முகம். அன்புமயமான பேச்சு. பேசுபவரிடம் தம்மை சகோதரி எனச் சுலபமாக நினைக்க வைத்துவிடும் கனிவு.

50 நாவல்கள், 50 குறுநாவல்கள், சுமார் 1000 சிறுகதைகள் என எழுதிக் குவித்தவர்.

'லட்சுமி பாணி' எழுத்தாளர். குடும்பமே அவர் நிலைக்களன்.

நா.பா.அவர் எழுத்தை மதித்து, பல நூல்களுக்கு அணிந்துரை கொடுத்த துண்டு. டாக்டர் மு. வரதராசன் கோமகளின் கணவரிடம் நேரிலும், தாம் எழுதிய இலக்கிய வரலாற்றி லும் அவரைக் குறிப்பிட்டிருக் கிறார். மு.வவின் பாராட்டைக் கணவர் மூலம் கேட்டு கோமகள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. 'கானல் நீர்' என்ற நூலை அவருக்குத்தான் சமர்ப்பணம் செய்திருக்கிறார்.

கல்கி வெள்ளிவிழாச் சிறு கதைப் போட்டிப் பரிசு, கல்கியும் பெர்க்லி தமிழ்ச் சங்கமும் இணைந்து நடத்திய சிறுகதைப் போட்டியில் பரிசு என நிறையப் பரிசு களைப் பெற்றவர். 'அன்னை பூமி'நாவல் தமிழ் வளர்ச்சித் துறைப் பரிசு பெற்றது.

எப்படி ஆயிற்று, ஏன் ஆயிற்று போன்ற கேள்விக்கெல்லாம் யார்தான் பதில் சொல்ல முடியும்? கடந்த 14 வருடங்கள் - ஒரு வனவாச காலம் - கோமகள் செயலற்றிருந்தார். முதலில் கடிகாரத்தில் நேரம் பார்ப்பது மறந்து போயிற்று. அவரது கெட்ட நேரம். பிறகு சாப்பிடுவது எப்படி என மறந்து போயிற்று. இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாக மூளையின் செல்கள் நினைவிழக்கலாயின. புதுச்சேரி போனபோது 'பாரதியார் ஊர்' எனப் பெரு மிதத்தோடு சொன்னார் அவரது மைத்துனர் பேராசிரியர் வி. குருமூர்த்தி "பாரதியா? யார் அவர்?" எனக் கோமகள் கேட்டபோது குடும் பம் திகைத்தது. கோமகளுக்கு பாரதி பாடல் அத்தனையும் மனப்பாடம். மகாகவியையே மறந்தாரென்றால்...!

'18 வயதில் எங்கள் வீட்டுக்கு வந்த மகாலட்சுமி. இத்தனை நூல்களை எழுதிய சரஸ்வதியும் கூட!'- அவரது கணவர் உள்ளிட்ட குடும்பம் முழுதுமே நெகிழ்கிறது. கோமகள் செய்த அதிர்ஷ் டங்கள் அன்புக் கணவரும், இனிய கூட்டுக் குடும்பமும், பாசத்தைக் கொட்டிய பிறந்த வீடும். அந்த சரஸ்வதியை குழந்தை போல் எல்லோரும் பார்த்துக் கொண்டார்கள். நான்கு மைத்துனர்களும் அவரைத் தாயாகவே நடத்தி னார்கள். நெஞ்சம் நெகிழ நெகிழ, மைத்துனர் கள் தாயன்போடு அண்ணியைப் பற்றிப் பேசு வதைக் கேட்டால், இதயம் கனக்கிறது. காலப் போக்கில் மூளையமைப்பில் குழந்தையாகவே ஆனார் கோமகள். கடந்த துர்காஷ்டமி அன்று எழுபத்தொரு வயதில் குடும்பத்தினரை விட்டு நிரந்தரமாய்ப் பிரிந்தார்.

இவரைப் போன்ற தூய பிறவிகளுக்கு மரணம் உண்டா என்ன? மனத்தை மேம் படுத்துவதே எழுத்தின் நோக்கம் என நம்பி, வாசிக்கும் ஆயிரக்கணக்கானோர் நெஞ்சில் என்றும் தம் பவித்ரமான எழுத்தாய் வாழ்ந்து கொண்டே தான் இருப்பார்.

- திருப்பூர் கிருஷ்ணன்

# சைபர் க்ரைம்!

எலக்ட்ரானிக் யுகத்தில் நாளுக்கு நாள், நொடிக்கு நொடி பலவித மாற்றங்கள், கண்டுபிடிப்புகள். ஆனால் அது குறித்து உலகம் சந்தோஷப்படும் முன்பே, பெருகி வரும் குற்றங்கள் மக்களை பீதிய டைய வைக்கின்றன.

கம்ப்யூட்டர், இன்டர்நெட், செல்போன் போன்றவற்றைத் தொடர்பு படுத்தி செய்யப்படும் குற்றங்கள் 'சைபர் க்ரைம்' என்று அடையாளம் காணப்பட்டு, அரசாங்கமும் புதிதாக 'சைபர் செல்' என்று புதிய பிரிவை இதற்கென உருவாக்கியிருக்கிறது.

''இப்பொழுதெல்லாம் ஒருவரைப் பழிவாங்கவோ, அவதூறு கூறவோ, குறுக்கு வழியில் பணம் சம்பாதிப்பதற்கோ, சைபர் குற்றங்கள் வழியாகத் தான் காரியம் சாதிக்கின்றனர்'' என்கிறார் சைபர் க்ரைம் செல்லின் ஏ.சி. பாலு.

சைபர் க்ரைம் குற்றவாளிகளை எப்படிக் கண்டுபிடிக்கிறார்கள்?

"ஒவ்வொரு கம்ப்யூட்டருக்கும் ஐ.பி. எண் இருக்கும். அதை வைத்துக் கண்டு பிடிக்கலாம். ப்ரௌசிங் சென்டராக இருந்தால் பயன்படுத்திய நேரத்தை அறிந்து குற்றவாளிக்கு வலை வீசலாம்'' என்கிறார் பாலு.

செல்போனில் ப்ரீபெய்டு கார்டு உபயோகப்படுத்தி, ஆபாசப் படங்களை அனுப்பும் குற்றவாளியின் முகவரியைக் கண்டுபிடிப்பதில் சிரமம் ஏற்பட்டாலும், செல்போன் கம்பெனியைத் தொடர்பு கொண்டு, அந்த எண்ணிற்கு தொடர்பு கொண்டவர்களைக் கண்டுபிடித்து அவர்கள் மூலம் முகவரி, அடையாளங்களைக் கண்டுபிடித்து விடுகின்றனர்.

"கடந்த சில மாதங்களாக செல்போனில், பெண்களின் எண்களை அறிந்து கொண்டு, ஆபாசப் படங்கள் அனுப்பி அதிலொரு இன்பம் கண்டு வருகிறது ஒரு கும்பல். மெயில்களிலாவது ஓரளவு தடுப்புச்சுவர்கள் இருக்கின்றன. ஆனால் செல்போன்களில் உங்களுக்கு வரும் மெஸேஜ்களைத் தடுப்பது இயலாத காரியம்'' என்கிறார் நா. விஜய் சங்கர். இவர் சைபர் க்ரைம் சம்பந்தமாக பல புத்தகங்களை எழுதி, தற்பொழுது தமிழக காவல்துறையின் சைபர் செல்லுக்கு ஆலோசகராகச் செயல்பட்டு வருகிறார்.



• ஏ.சி. பாலு

ஆபாசத்தைத் தழுவியே குற்றங்கள் இருப்பதால், பாதிக்கப்படுவர்கள் பெரும்பாலும் காவல்துறையிடம் எழுத்துபூர்வமாக புகார் தெரிவிப்பதேயில்லையாம். இதனால் காவல்துறையால் மிக ஆழமாக இந்த கேஸ்களில் செல்ல முடிவதில்லை என்கிறார்கள்.

"அசுர வேகத்தில் பெருகும் டெக்னாலஜியின் ஓட்டத்தோடு, கூட சேர்ந்து குற்றங்களும் பெருகுவதைத் தவிர்க்க வேண்டுமானால், மக்களுக்கு விழிப்புணர்ச்சி அவசியம்" என்கிறார் ஏ.ஸி. பாலு.

- செந்தில்

படங்கள்: ராஜன்



# தூரத்திலிருந்து

**சிவசங்கரி**



நம்முடைய புராணங்களில் விஷ்ணு தசாவதாரம் எடுத்தது போன்று, ரா என்னும் சூரியக் கடவுளும் பல ரூபங்களில் தம்மை வெளிப்படுத்திக் கொண்டுள்ளார். விடியும் முன் கழுகு முகம் கொண்ட ஹோரஸ் (Horus) ஆகவும், கெப்ரி (Khepri) வண்டாக உதயகாலத்திலும், மத்தியானத்தில் அடென் (Aten) என்றும், அஸ்தமிக்கும் போது அடும் (Atum) ஆகவும் அவரே காட்சி தருகிறார் என்று எகிப்தியர்கள் நம்பினார்கள்.

ஹீலியோபொலிடன் பிரபஞ்சவியலின்படி, பிரளயத்தை ஒட்டி வெளிவந்த சூரியனின் எச்சிலிலிருந்து ஷூ (Shu) என்ற காற்றும், டெஃப்நட் (Tefnut) என்ற ஈரப்பதமும் இரட்டைத் தெய்வங்களாகத் தோன்றினவாம். இவை, கெப் (Gep) என்ற பூமியையும் நுட் (Nut) என்ற ஆகாயத்தையும் தோற்றுவிக்க, இவையெல்லாம் ஒன்று கலந்து அஸிஸ், ஒஸைரிஸ், ஸெத், நெஃப்தைஸ் (Isis, Osiris, Seth, Nephthys) என்ற கடவுள்களை உண்டு பண்ண, இந்த ஒன்பதும்தான் 'நவ தெய்வங்கள்' என்று அந்நாட்களில் வழிபடப்பட்டு வந்தனவாம். வெவ்வேறு அரசபரம்பரையின் ஆட்சிக் காலத்தில், ஒவ்வொரு பிரதேசத்தின் வழிபாட்டு தெய்வமாக ஒவ்வொன்று ஏற்கப்பட்டுள்ளது. அரச பரம்பரை மாறும் போது தெய்வங்களும் மாறியதோடு, ஒரு கடவுளுடன் இன்னொன்றை இணைத்து, புதியதாக ஒன்றைத் தோற்றுவிப்பதும் பண்டைய எகிப்திய வரலாற்றில் சகஜமாய் நடந்திருக்கின்றன.

ஒஸைரிஸ் வழிபாடு என்பது சூரிய, இதர வழிபாடுகளிலிருந்து மாறுபட்டது.

தனக்கும் பூமிக்கும் பிறந்த இரண்டு புதல்வர்களான ஒஸைரிஸுக்கும் ஸெத்துக்கும் உலகை இரண்டாகப் பிரித்து சூரியன் தந்தாலும், தனக்குப் பாலை வனப் பகுதிகள் மிகுதியாய்க் கிட்டிவிட்ட கோபத்தில், ஸெத் சகோதரனைக் கொலை செய்து துண்டங்களாக வெட்டி, நைல் நதியில் போட்டுவிட்டாராம். ஒஸைரிஸின் சகோதரியும் மனைவியுமான ஐஸிஸ் (ஐயோ, இதென்ன கொடுமை! சகோதரி, மனைவி என்று ஒரே மூச்சில் குறிப்பிடுகிறீர்களே என்று யாரும் அவசரப்பட்டு கொதிக்க வேண்டாம். ஆதி எகிப்தியக் கலாசாரத்தில் முறையற்ற உறவு - வழக்கத்தில் இருந்திருக்கிறது. தாய்-மகன், அப்பா-மகள், அண்ணன்-தங்கை தம்பதியராய் வாழ்ந்தது சகட்டுமேனிக்கு நிகழ்ந்திருக்கிறது!) தன் கணவரை உயிரோடு மீட்டுக் கொண்டு வர, அவளுக்கு கழுகு முகம் கொண்ட ஹோரஸ் என்ற குழந்தையைத் தந்துவிட்டு, ஒஸைரிஸ் ஆவியுலகிற்கு அரசராகச் சென்றுவிட்டாராம். நைல் நதியின் டெல்டா பகுதியில் பபைரஸ் புதர்களின் நடுவே, தாயோடு ஒளிந்து வாழ்ந்த ஹோரஸ், பெரியவரானதும் சித்தப்பாவை வென்று ராஜ்ஜியத்தைக் கைப்பற்றினாராம். ஒரு சமயம் சூரியனின் ஒரு கண் பார்வையிழந்துவிட, தன் கண்ணை ஹோரஸ் அவருக்குக் கொடுத்துவிட்டு, நல்ல பாம்பின் கண் ஒன்றைத்தான் பொருத்திக் கொண்டு பார்க்க முற்பட்டாராம். மீண்டும் அவரது கண்ணுக்குப் பார்வை கிட்டியதும், நன்றி செலுத்தும் விதமாய் நல்ல பாம்பைத் தமது மூன்றாவது கண்ணாக நெற்றியில் சுட்டி மாதிரி தொங்கவிட்டுக் கொண்டாராம். 'ஹோரஸ் கண்' என்பது பிற்காலத்தில் மிகவும் பிரபலமாகிவிட்டதில், பல ஓவியங்களில்

# ...வந்த அழகு!



இன்றைக்கும் அதைச் சித்திரமாய் பார்க்க முடிகிறது.

ஆகாயத்தின் உடம்பு, மரங்களின் ஆவி, தங்கம், இசை, இத்தியாதிகளின் அதிபதி என்று அறியப்படும் பசு வடிவ ஹாதோர் (Hathor) வழிபாடும் சில பிர தேசங்களில் பிரபலமாய் இருந்திருக்கிறது. ஹோரஸுக்குப் பால் கொடுத்து வளர்த்த தும் அல்லாமல், அவருக்கு மனைவி யாகவும் திகழ்ந்திருக்கிறார் ஹாதோர்.

இடைக்காலப் பரம்பரையில் அமுன் (Amun) வழிபாடு முக்கியமானதாக இருந்திருக்கிறது. பிற்காலத்தில் வந்த அரசர்களால் இவர் சூரியக்கடவுளுடன் இணைக்கப்பட்டதும், அமுன்-ரா (Amun-Ra) என்ற பெயரில் வழிபாடு தொடர்ந்தது. இவரது மனைவியான மட் (Mut) செல் வத்துக்குச் சொந்தக்காரி. இவரைக் கழுகுச் சிறகுகள் கொண்ட சிகையலங் காரம் மற்றும் இணைந்த எகிப்துக்கான கிரீடத்தோடு ஓவியங்களில் சித்தரித்திருக் கிறார்கள். இவர்களது மகன் கோன்ஸு (Khonsu) வை, அவரது பருந்து முகம், பக்க வாட்டில் தொங்கும் ஒற்றை முடிக்கற் றையை வைத்து இனம்காண முடிகிறது.

மேற்கூறிய அனைத்து வழிபாடு களையும்விட, அதிக அளவில் கடைப் பிடிக்கப்பட்டு வந்தது ஐஸிஸ் வழிபாடு தான்! ஒஸைரிஸ் மனைவியும் ஹோரஸின் தாயுமான இவர், திருமண, குடும்ப நிகழ்வுகளுக்கு தெய்வமாய் போற்றப்பட்டிருக்கிறார். தவிர, புதிய அரசபரம்பரையால் மிக உயர்ந்த ஸ்தா னத்துக்குக் கொண்டு செல்லப்பட்டு, 'அனைத்து தெய்வங்களின் தாய்'; 'பத்தாயிரம் பெயர்களைக் கொண்ட பெண் தெய்வம்'; 'பெண்கள், கற்பு, காமத்தின் மூலம்' என்றும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டவர். பின்னர் ஆண்ட ரோமானியர் காலத்திலும் இந்த வழிபாடு தொடர்ந்துள்ளது.

தோத் (Thoth) என்ற கடவுள் எழுத் தைக் கண்டுபிடித்தவர், எழுத்துலகுக் குச் சொந்தக்காரர், காலத்தின் எஜ மானர் என்று சொல்லப்படுபவர். பறவையின் முகமும் கையில் பிரித் துள்ள தாள், எழுத்தாணியுடன் இருக் கும் இவரது ஓவியங்களைப் பல இடங்களில் காண முடிகிறது.

மேற்சொன்னவர்களைத் தவிர, நைல் நதியின் தெய்வமான ஹாபி (Hapy) அரசபரம்பரைக்கு முந்தைய காலத்தில் வழிபாட்டில் இருந்த பிடா (Ptah), இருட்டுக்கு அதிபதியான ஸோகர் (Sokar) முதலை முகம் கொண்ட ஸோபெக் (Sobek) என்று இந்தியாவில் கூறப்படும் முப்பத்து முக்கோடி தேவர்கள் கணக்கில், அந்நாளைய எகிப்திய தெய்வங்கள் எக்கச்சக்கத்துக்கு உள்ளன. இப் போதைக்கு நாம் தெரிந்துகொண்ட வரையில் (அல்லது உங்கள் தலை சுற்றிய வரை) நிறுத்திக் கொள்கிறேன்.

இனி, நம் சுற்றுலாவைத் தொடரலாம். அஸ்வானை அடைந்ததுமே நீலு, "அபு ஸிம்பல் நம்முடைய அட்டவணையில் இல்லை. அதைப்பார்க்காவிட்டால் எப் படி?" என்ற கேள்வியை எழுப்ப, அதை பிரியாவும் நானும் ஆமோதித்தோம். வழக்கம்போல நாங்கள் நால்வரும் உபரிப் பணம் கட்டி, மறுநாள் பாப் உடன்வர, விடியற்காலை விமானத்தில் அபு ஸிம்பல் செல்லத் தீர்மானித்தோம்.

அஸ்வானுக்குத் தெற்கில், சூடான் எல்லையிலிருந்து 70 கி.மீ. தொலைவில், நாஸர் ஏரியின் கரையில், நூபியன்



பாலைவனத்தில் அபு ஸிம்பல் இருக்கிறது. நூபியா என்றால் தங்கம் என்று ஹீரோக்ளைஃபிக் படமொழியில் பொருளாம். பண்டைக்கால எகிப்தின் அரச பரம்பரையினர், தங்கள் உபயோகத்துக்குத் தேவையான தங்கத்தை இங்கிருந்துதான் தோண்டியெடுத்தார்களாம்!

இங்குள்ள அபு ஸிம்பல் என்ற இடத்தில், பிரும்மாண்டமாய் சூரியக் கோவிலைத் தமது ஆட்சிக் காலத்தில் (கி.மு. 1290 - 1223) கட்டிய பெருமை, எகிப்தின் மிக முக்கியமான மன்னராகக் கருதப்படும் இரண்டாவது ராம்ஸெஸைச் சேரும். இருபத்தி நான்கு வயதில் அரியணை ஏறி தொண்ணூறு வயதுவரை, அறுபத்தியாறு ஆண்டுகள் கோலோச்சிய இவரது சாதனைகள் ஏராளம். புரட்சிகரமான சிந்தனைகளை அறிமுகப்படுத்தியதோடு, சிற்ப, ஓவியங்களிலும் புதுமை செய்தவர் இவர். அதுவரை சுவர்களில் அல்லது பாறைகளில் உளியால் பள்ளம் செய்து படங்கள் வரைவதை விடுத்து, மேற்பரப்பில் ஒரு வகையான கலவையை அங்குல தடிமனுக்குப் பூசி, அது காய்ந்ததும் தேவையான கோடுகள், பள்ளங்கள் மூலம் உருவாக்கப்பட்ட சித்திரங்கள் நான்காயிரம் ஆண்டுகள் கழித்தும் அப்படியே இருப்பது ஆச்சர்யமான காட்சி!



ராம்ஸெஸ்ஸின் ராணியான நெஃபர்டாரி (Nefertari), நூபியர் இனத்தைச் சார்ந்தவர். நெஃபர்டாரி என்றால் 'தூரத்திலிருந்து வந்த அழகு' என்று அர்த்தமாம்! அரசரின் பல மனைவியரில் இவருக்கு வெகுவாக முக்கியத்துவம் தரப்பட்டதில், அரசருக்கு இணையாக அரசாங்கப் பணிகளில் அவரும் பங்கெடுத்துள்ளதையும் 'ஹாதோர்' பெண் தெய்வத்திற்கு இணையாகக் கருதப்பட்டதையும் அபு ஸிம்பலில் காணப்படும் சித்திரங்கள் தெரிவிக்கின்றன.

அபு ஸிம்பலில் உள்ள சூரியக் கோவிலுக்கு நான்காயிரம் வருஷத்திய சரித்திரம் மட்டுமல்ல, அண்மைக்கால மகத்தான சாதனைப் பெருமையும் சேர்ந்துள்ளது. அஸ்வான் அணையின் காரணமாய் நாஸர் ஏரி 500 கி.மீ. நீளத்தில் உருவானபோது, அந்த பிரும்மாண்டமான நீர்ப்பரப்பில் மூழ்கிக் காணாமல் போகவிருந்த பிரதேசத்தில்தான் சூரியக் கோவில் தெரிந்தது. தொன்மையான கலாசாரம், வரலாற்றின் சாட்சியாகக் காலத்தை வென்று கம்பீரமாய் காட்சி தந்த சூரியக் கோவிலை, 'அம்போ' வென்று விட்டுவிடுவது சரிதானா என்கிற பதற்றம் அன்றைய அரசுக்கு எழாமல் இல்லை. சூரியக் கோவிலைச் சுற்றி ஒரு பெரிய தடுப்புச்சுவரை எழுப்பி, தண்ணீரை அண்டவிடாமல் செய்துவிடலாமா என்று யோசித்தபோது, 'இல்லை, அது சரிப்பட்டு வராது' என்று நிபுணர் குழு மறுத்துவிட்டது. அப்புறம்? 'அதன் தலைவிதி அவ்வளவுதான் என்று விட்டுவிட வேண்டியதுதானா' என்று எகிப்திய மக்கள் பரிதவித்தபோது, 'யாமிருக்க பயமேன்!' என்று யுனெஸ்கோ அமைப்பு அபயக்கரம் நீட்டியதில், இன்று சூரியக் கடவுள் கோவில் முழுசாய், தம்மாத்துண்டு கட்டடம்கூடக் காணாமல் போகாமல், டூரிஸ்டுகளை அபு ஸிம்பலுக்குக் கவர்ந்திழுக்கும் இடமாக விளங்குகிறது. அப்படி யுனெஸ்கோ செய்த சாதனைதான் என்ன? அடுத்த அத்தியாயத்தில் விளக்குகிறேனே...

(தொடரும்)



# வழுக்கி வழுக்கிப் போனா வாழைத்தண்டு டோய்!

“முகத்தையும், தலைமுடியையும் மட்டும் விதவிதமாக கவனிச்சு, சிறப்பா பராமரிச்சுட்டு, கை, கால் அழகை மட்டும் கண்டுக்காமல் விடறது அ.பி.கோ. (அடடே, பியூட்டி கோட்) படி அநியாயக் குற்றமாகும்'' என்கிறார் சென்னை ஹெல்த் & பியூட்டி கிளினிக் டாக்டர் எஸ். கண்ணன். இவர் சென்னை, ஸ்ரீ சாய்ராம் சித்த மருத்துவக் கல்லூரியின் விரிவுரையாளர்.

"கைகளைப் பாதுகாக்க நீங்க செய்ய வேண்டியதெல்லாம் ரொம்ப சிம்பிள். அதிக சூடான பொருள்களையோ, அதிக குளிர்ச்சியான பொருள்களையோ நேரடியாகத் தொடக் கூடாது. சில பெண்கள் சாம்பிராணிப் புகை போடும்போது, அனல் கட்டிகளை கையாலேயே எடுத்துப் போவார்கள். ஐஸ் கட்டிகளை கையாலேயே அள்ளுவார்கள். இதெல்லாம் ரொம்பத் தப்பு. தகுந்த கரண்டிகளைப் பயன்படுத்துவதே பாதுகாப்பானது.

காஸ்டிக் சோடா போன்ற ரசாயனம் அதிகம் கலந்த சோப்புத் தூள்களைப் பயன்படுத்தி, துணி துவைக்கும்போது, தரமான கையுறைகள் அணியவும். 'மடக் மடக்' என்று கைவிரல்களில் சொடக்கு எடுக்கும் கெட்ட பழக்கம் இருந்தால் 'சடக்' என்று நிறுத்திக் கொள்ளுங்கள். சொடக்கு எடுக்க தனி டெக்னிக் உள்ளது. விரல்களை, தனித்தனியாக, சுழற்றி இலேசாகப் பக்கவாட்டில் சாய்த்து சொடக்கு எடுக்கணும். மடக்கி சொடக்கினால் சுருக்கம் விழும். சொர சொரப்பான பொருள்களை கையாளும் போது கவனம் தேவை. மீன் கழுவுவது, தேங்காய் நார் உரிப்பது போன்ற வேலைகளைச் செய்யும்போது, கைகளில் சூரிய காந்தி எண்ணெயோ, தேங்காய் எண்ணெயோ தடவிக் கொண்டு, கிளவுஸ் அணிந்து செயல்படுங்கள். பாதிப்பு ஓரளவு குறையும்

**கை**களையாவது ஓரளவு பராமரிக்கிறோம். ஆனால் கால்களை... அதுவும் பாதங்கள்...? கண்டு கொள்வதேயில்லையே!

டீ.வியில் மெகா சீரியல்களில் மூழ்கியிருக்கும் காலங்களையும் நீங்கள் கால்களுக்காகப் பயன்படுத்தலாம்.

அகலமான பிளாஸ்டிக் 'டப்'பில் வெதுவெதுப்பான நீர் ஊற்றி, ஒரு துளி ஷாம்பூ, இரண்டு ஸ்பூன் எலுமிச்சை சாறு, கைப்பிடி அளவு கல் உப்பு, ஐந்து சொட்டு விளக்கெண்ணெய் சேர்த்துக் கலக்கவும். இந்தக் கலவையில் கால்களை நனைத்து வைத்து, பியூமிஸ் கல் கொண்டு இலேசாக மஸாஜ் செய்தாலே போதும். புறா இறகுப் பாதங்கள் உங்களுக்கே!

இரவு தூங்கப் போகும் முன், தரமான மாய்சரைஸர் தடவி, பருத்தி சாக்ஸ் அணிவதும், கால்களின் இளமையைக் காக்கும்.

கை, கால்களில் மினுமினுப்பும், மலர்ச்சியும் இருந்தால், உங்கள் ஒட்டு மொத்த அழகே, ஓஹோன்னு இருக்கும். அதுக்கும் இருக்கு அழகான யோசனை.

தேங்காய் எண்ணெய், சூரியகாந்தி எண்ணெய் போன்ற சமையல் எண்ணெயில் சில சொட்டுகள் எடுத்து, இரண்டு டீஸ்பூன் சர்க்கரையைச் சேர்த்து இலேசாகக் குழைக்கவும். சூடும் பிசுபிசுப்பும் இருக்கும்போதே, கைகால்களில் தடவிக் கொள்ளுங்கள். இருபது நிமிஷங்கள் ஊறியதும், வெதுவெதுப்பான நீரினால் கழுவி விடுங்கள். உங்கள் சருமத்தில் உள்ள இறந்த செல்கள் எல்லாம் உதிர்ந்து, சருமம் பளபளப்பாகியிருக்கும். இப்ப, கிடைச்சுருச்சா இளமையான தோற்றம்?

சிலருக்கு சருமம் இயற்கையாகவே உலர்ந்து காணப்படும். ஊட்டச்சத்துகுறைவு, பாரம்பரியக் காரணம், தைராய்டு, சருமக் கோளாறுகளினாலும், சருமம் வறண்டு, ஜீவனற்று இருக்கும். அத்தகைய பெண்கள், ஈவ்னிங் ப்ரிம் ரோஸ் கேப்ஸ்யூல், இவியான், செலின், சக்ஸீ போன்ற வைட்டமின் ஈ, வைட்டமின் சி மாத்திரைகளை சாப்பிட்டால் நல்ல பலன் தெரியும். பால், முட்டை, கீரை காய்கறியில் உள்ள நேச்சுரல் கால்ஷியம், சருமத்துக்கு இயற்கையான பொலிவு தரும்.

பிண்டத் தைலத்துடன் சிறிது மஞ்சள் தூள் கலந்து தடவி வந்தால், சரும வியாதிகள் குணமாகும். குறிப்பாக பித்த வெடிப்புக்கு மிகச் சிறந்த நிவாரணம் தரும். மருதாணி வைத்துக் கொள்வது வெறும் அழகுக்காக மட்டுமல்ல; உடல் குளிர்ச்சிக்காகவும் தான். கடைகளில் விற்கப்படும் ஹென்னா கோன்களை விட, மருதாணி தழையைப் பறித்து, அரைத்து பூசிக் கொள்வதே சிறந்தது.

மலச்சிக்கல் இல்லாமல் இருந்தாலே, சரும அழகு பொலிவாக இருக்கும். திரிபலாசூரணம், நிலவாரைச் சூரணம், ரோஜா குல்கந்து போன்றவற்றைத் தொடர்ந்து சாப்பிட்டால் மலச்சிக்கல், இருக்காது. இளமை, அழகு, புத்துணர்ச்சி தரும் விசேஷ மூலிகை கேப்ஸூல்களை பயன்படுத்தியும் இயற்கையான அழகு பெறலாம்.



• டாக்டர் எஸ். கண்ணன்

ஒவ்வொரு வருக்கும் தீபாவளி ஒவ்வொரு விதமான அனுபவத்தைத் தருகின்றது. புதிய ஆடை, மத்தாப்பு, இனிப்பு வகை, புத்தம் புதிய சினிமா என்று தீபாவளியை வரவேற்க எல்லோரும் தயாராகிக் கொண்டிருக்க, இதோ சில சாமானியர்கள்.



• சகுந்தலா

# எங்க

**சகுந்தலா:** முப்பது வருஷமா இந்தக் கோயில்லதான் இருக்கேன். நல்லாங்குப்பத்துல வீடு. தினமும் இங்க வந்து பூ கட்டுவேன். கற்பூரம், வெத்தலை பாக்கு விப்பேன். கோயிலைப் பெருக்குகிற வேலை செய்வேன்.

தீபாவளிக்கு நான் என்னத்தை புதுசா செய்யறது? வயசு ஆயிடுச்சு. முன்னே மாதிரி எதுவும் செய்ய முடியறது இல்லை. பண்டிகைன்னா கோயில்லே கூட்டம் அதிகமாயிடும். வேலையும் எனக்கு நிறைய இருக்கும். எல்லாத்தையும் நான் தான் கவனிக்க வேண்டியிருக்கும். முத நாள் ராத்திரி விருந்தே வேலை தொடங்கிடும். அன்னிக்கு நிறைய பூஜையெல்லாம் செய்வாங்க. நானும் பாத்திட்டிருப்பேன். எல்லாரும் பூஜை சாமானை என் கிட்டே தான் வாங்குவாங்க. அதுல எனக்கு ஒரு சந்தோஷம்.

இங்க வருஷா வருஷம் புதுப் புடைவை எடுத்துத் தருவாங்க. இந்த தீபாவளிக்கும் தருவாங்க. அதைக் கட்டிக்குவேன். மத்தபடி சொல்ற மாதிரி ஒண்ணும் புதுசா தெரியலீங்க.

**தேவி:** எங்களுக்கு தீபாவளி, பொங்கல் விசேஷம் எல்லாம் கிடையாதுங்க. அதெல்லாம் காசு பணம் இருக்கிறவங்களுக்கு தான். அவங்க வேணுமின்னா நல்லா செய்யலாம். நாங்க என்னத்த செய்யறது? எதை வாங்கறது? இந்தக் கடையில் வர்ற வருமானம் தினச் சாப்பாட்டுக்கே சரியாயிருக்கு. மிச்சம் சேத்து வைக்கற அளவுக்கு இருக்கிற தில்லை. இதுல துணி மணி, பட்டாசு எல்லாம் வாங்க முடியுங்களா? வாங்கணும்னாலும் வாங்கற விலையிலையா விக்கிறாங்க?

காலையிலிருந்து இருட்டுற வரைக்



• துரை பாபு

# தீபாவளி!

• தேவி

சொந்த ஊரே சென்னை தான். சிந்தாதிரிப்பேட்டைல தான் இருந்தோம். எல்லாரையும் மாதிரி தான் நானும் கம்பெனியில வேலை செஞ்சுட்டிருந்தேன். இரண்டு பொண்ணுங்க இருக்காங்க. எப்பவும் தீபாவளியை ரொம்ப விசேஷமா கொண்டாடுவோம். புது டிரஸ், பட்டாசுன்னு சந்தோஷமா இருக்கும். விடிய விடிய கூத்து எல்லாம் நடக்கும். நிறைய பார்த்திருக்கேன். ரசிச்சிருக்கேன்.

திடீர்னு எனக்கு ஆன்மிகத்துல அதிக ஈடுபாடு வந்துடுச்சு. வாழ்க்கையோட தத்துவத்தைத் தேடணும்னு எண்ணம் வந்துச்சு. எல்லாம் அந்தக் கடவுளோட ஆசீர்வாதம் தான். இல்லேன்னா என்னை எதுக்காக அவர் அழைக்கணும்?

சந்நியாசி ஆயிட்டேன். என்னுடைய தேவைகள் எல்லாம் குறைய ஆரம்பிச்சது. என்னோட பொண்ணுங்களுக்கு எந்த சிரமமும் நான் கொடுக்கறதில்லை. ஏதாவது வராந்தாவில் படுத்துத் தூங்கிக்கிறேன். சாப்பாடும் யாராவது போட்டுடுவாங்க. தீபாவளின்னா கொஞ்சம் இனிப்பு வகை சாப்பிடுவேன். எந்தக் குறையும் எனக்கு இல்லை.

இப்பல்லாம் தீபாவளின்னா எல்லாரும் டீ.வி முன்னாடி உக்காந்திடறாங்க. சின்னப் பசங்க தான் வெளியே வந்து பட்டாசு வெடிக்கறாங்க. அவங்களுக்கு தான் முக்கியமா இந்த தீபாவளி. அவங்க சந்தோஷத்துக்காகத்தான் எல்லா பண்டிகைகளையும் இறைவன் கொடுத்திருக்கான்."

கும் பொழப்பைப் பாக்கறதுக்கே நேரம் சரியாயிருக்கு. இருந்தாலும் இந்தப் பசங்களுக்கு இதெல்லாம் எங்க விளங்குது? ஊருல பட்டாசு கொளுத்தறதப் பார்த்தா, எனக்கும் வாங்கியான்னு கத்த ஆரம்பிச்சுடுங்க. சத்தம் போட்டாலும் அடங்காதுங்க. ஆளுக்கு இரண்டு மத்தாப்பாவது வாங்கினாத் தான் விடுவாங்க. பார்ப்போம். கடவுள் விட்ட வழி!

**துரை பாபு:** எனக்கு

பேட்டி, படங்கள்: **மருதன்**

மேற்கு மாம்பலத்தில் அடுக்கு மாடிக் குடியிருப்பு ஒன்றில்தான் தாமரைக்கு வீடு கிடைத்தது. அலுவலகம் பாண்டி பஜாரில் என்பதால் போக வர ஆட்டோ பேசிக் கொண்டாள். பணிக்குச் செல்லும் பெண்களை மனத்தில் கொண்டு, அந்த குழந்தைகள் காப்பகம் ஓரளவு வசதிகளுடன் அந்தப் பகுதியில் அமைந்திருந்தும் ஒரு காரணம். வேலைக்கு உத்திரவு வந்தவுடன் அம்மா விடம் மதுராவை விட்டு விட்டு சென்னைக்குச் சென்றாள். பணியில் சேரும் நாளை தனது தெரிவில் விட்டு விட்டு

# வலம்புரி முத்து

## 27



குடியிருப்பு மனைகளும், குழந்தைகள் காப்பகமும் தேடினாள். அவளுடைய அலுவலக வளாகத்திலேயே ஒரு குழந்தைகள் காப்பகம் இருந்தது. ஆனால் ஐந்து மணி வரைதான் திறந்திருக்கும் என்றார்கள். அவளுடைய வேலையின் கால அளவு இரவு ஏழு, எட்டு மணி வரை கூட தாண்டும் போலிருந்தது. எனவே இரவு அவள் வரும் வரை கூட பார்த்துக் கொள்ளக் கூடிய காப்பகம் வேண்டி இருந்தது. அப்படி ஒரு காப்பகம் மேற்கு மாம்பலத்தில் இருப்பதைக் கேட்டுப் போய் நின்றாள்.

காம்பவுண்டுடன் கூடிய வீடு ஒன்றே காப்பகமாக இயங்கி வந்தது. வாசலில் இரண்டு அசோக மரங்கள். உள்ளே ஒரு தூங்குமூஞ்சி மரம். பூச்செடிகள். விளையாட மைதானம் என பார்ப்பதற்கு பசுமையாக இருந்தது.

"மூணு ஆயா இருக்காம்மா. நீங்களே சாப்பாடு கொண்டு வந்து கொடுத்துடுங்க. சாயங்காலம் ரொட்டி, பிஸ்கட், பால் இதெல்லாம் கொடுப்போம். அதுக்கு எக்ஸ்ட்ரா இருநூறு ரூபாய் சார்ஜ்

பண்ணுவோம். விளையாட்டு வசதிகள் உண்டு. என்னுடைய நேரடிப் பார்வை யில்தான் குழந்தைங்க இருக்கும். ரைம்ஸ் சொல்லித் தருவோம். நல்ல ஸ்லோகங்கள் சொல்லித் தருவோம். இதோ இந்தப் பொண்ணு பொறந்ததிலருந்து இங்கதான் இருக்கா. இப்ப எட்டாவது படிக்கறா. அப்பா, அம்மா ரெண்டு பேரும் பாங்க்ல வேலை பார்க்கறா. பெண் குழந்தை களைத் தனியா விட்டுட்டுப் போக பயப்பட்டுண்டு இங்கதான் கொண்டு விடறா. பயப்படாம விட்டுட்டுப் போங்கோ'' என நிர்வாகி நீனமாகப் பேசிய பின்புதான் தாமரைக்கும் சமாதானமானது.

உடன் வேலை பார்க்கும் நிர்மலாதான் இவளுக்கு மேற்கு மாம்பலத்தில், அவளது குடியிருப்புப் பகுதியிலேயே அவள் வீட்டுக்கு மிக அருகில் ஃப்ளாட் பார்த்துக் கொடுத்தாள்.

"எப்ப வேணாலும் உன் பெண்ணை எங்க வீட்டில் பார்த்துக்க விடலாம்'' என்றாள்.

"முழுவதும் சார்ந்திருக்கக்கூடிய தயவு வேணாம்னு பார்க்கிறேன்."

''இவ்வளவு

## சத்தியப்ரியன்



கட்அண்ட் டிரையா பேசறியே!" என்றாள் நிர்மலா.

"எனக்குத் தேவையில்லாத விஷயங்களில் நான் புகுந்து மாட்டிக்காம இருக்க அது உதவியா இருக்கு."

"நேர்மையானவள்."

"அடுத்தவங்க நற்சான்றிதழ் எனக்கு வேண்டாம்."

நிர்மலாவின் கணவன் தனியாக ஒரு பில்டிங் கன்ஸல்டன்சி வைத்திருக்கும் சிவில் என்ஜினியர். இரண்டு பிள்ளைகள். மாமனார், மாமியார் என சம்பிரதாயமான மேல் நடுத்தர வர்க்க வீடு.

"என் வீட்டுக்கு வாயேன்" என நட்பு வட்டத்தைப் பெரிதுபடுத்தியவள் அலுவலகத்தில் நிர்மலா மட்டும்தான்.

"ஒரு நிபந்தனை. இளம் விதவை, கையில் இரண்டு வயதுப் பெண் பிள்ளையுடன் அல்லாடுபவள் என ஒரு பிம்பத்தை நிறுவி, அதன் மூலம் ஒரு சுய பச்சாதாபத்தை எனக்கு உன் வீட்டாரிடம் ஏற்படுத்திக் கொடுப்பதென்றால் சொல். நான் வரவே மாட்டேன்."

"ஆனால் உன் நிழலை உன்னால் விட்டு விலக முடியாதே!"

"நிழலை மறந்திருக்கலாம் இல்லையா?"

**த**னி வீடு பார்த்து, பாத்திரம், பண்டங்களுடன் மகளை குடித்தனம் வைக்க மட்டும் விசாலாட்சி வந்தாள். அவளுடைய மூப்பில் சுதந்திரமாக வளைய வந்த காரைக்குடியை விட்டு, திக்கு, திசை தெரியாத பட்டணத்தில் திண்டாட சம்மதமில்லை. "அவுகளுக்கு வேளா வேளைக்கு ஆகாரம், மருந்து, ஊசி இதெல்லாம் குடுக்கோணும். நான் அங்கனயே இருந்துக்குறேன்" என்றாள். மகளும் தாயை வற்புறுத்தவில்லை. செட்டிப் பெண்களிடம் இல்லாத வழக்கமாக வீடு, வாசல் எதுவும் வேண்டாமென்று தனியாக ஒரு ஊரில் வேலைக்கு எனப் போவது தாய்க்குப் பிடிக்கவில்லை.

ஒரு வாரம் மகளுடன் இருந்தாள். காலையில் தாமரை ஆட்டோவில் ஏறி சிற்றுண்டி, பால், பழம், பிஸ்கட், சுத்தமான நீர், விளையாட்டுப் பொருள்கள் எல்லாவற்றையும் ஒரு பையில் போட்டுக் கொண்டு மதுராவை காப்பகத்தில் விட்டு, விட்டு, அலுவலகம் கிளம்பிப் போவாள். ஃப்ளாட் குடியிருப்பு என்ற பெயரே தவிர, முழு வசதியுடன் கூடிய குடியிருப்பு. நால்வருக்கு தாராளமாகப் போதும். இரண்டு படுக்கையறை. பெரிய சமையலறை. ஒரு ஹால். லிட் அவுட் ஒன்று. நல்ல தண்ணீருக்கு தினமும் மினரல் வாட்டர் கேனில் வந்து இறங்குகிறது. எல்லாம் கம்பெனி செலவு என்பதால் தாமரையின் வேலையும்,பதவியும் மிக உயர்ந்ததாக இருக்கும் எனத் தோன்றியது. புகுந்த வீட்டில் இருந்து கொண்டு அறிவும், புத்திசாலித்தனமுமாக இருப்பதைப் பார்த்தால், அது ஒரு நிறைவு. யாருமே வேண்டாம் என எல்லாரையும் உதறி விட்டு, இப்படி சந்நியாசினி மாதிரி இருப்பதைப் பார்க்கச் சகிக்கவில்லை.

"ஒம் மாமனாருக்குத் தெரியுமா, நீ இங்கன இப்படித் தனியா வந்திருப்பது?"

"தெரியாது"

"சொல்ல வேணாமா?"

"அவசியம்னு தோணலை."

"வழில உன்னைப் பார்த்துக் கேட்டாகன்னா?"

"இதையே தான் சொல்வேன்."

"என்னன்னு?"

"பிடிக்கலைன்னு."

"பிடிவாதம் ஜாஸ்தி தாமரை உனக்கு."

"இப்பவாவது வந்ததேன்னு சந்தோஷப்படு!"

"இப்படியே எத்தனை நாள்தான் சட்டாம்பிள்ளையா இருக்கப்போற?"

"சாகற வரைக்கும்."

"யாரு சாகற வரைக்கும்?"

"நீ! இல்லைன்னா நான்!"



ஒரே வாரத்தில், பெண் சமாளித்துக் கொள்வாள் என்பதைக் கண்ணுற்ற தாய் கிளம்பினாள். மகளையும் தூக்கிக் கொண்டு தாமரைதான் சென்ட்ரல் வரை போனாள்.

"எதுக்கு இப்ப வருத்தப்படுற? நான் காரைக்குடியில் இருந்தா அனாவசியப் பேச்சு வருது. நான் அறுத்துக் கட்டலை என்பதால் எனக்கு கடுஞ்சொல் வரத்தான் செய்யும். உங்களைப் பொறுத்துக்கிட்டுப் போகச் சொல்ல நான் யாரு? விலகி இருக்கலாம்னு முடிவு பண்ணித்தான் வேலையில சேர்ந்தேன். போக்குவரத்தே இல்லாம இருக்கப் போறதில்லையே. அவங்க வீட்ல கேட்டா மருமகளும், பேத்தியும் நல்லா இருப்பதா தகவல் சொல்லுங்க. முகத்தைப் பார்க்காம இருப்பதுகூட, நமக்கு நடுவில் இருக்கும் காயங்களைச் சரி பண்ணும் இல்லியா? அப்பச்சிய கவனமாப் பார்த்துக்க. மனசை பலமா வெச்சுக்கச் சொல்லு. ஒடம்பு சொன்ன பேச்சு கேட்டுச்சுன்னா, ஒரு நடை என்னை வந்து பார்த்துட்டுப் போகச் சொல்லு."

"நீ வர மாட்டியா தாமரை?"

"என் வேலை அப்படி ஆத்தா. வெளி நாடு கூட போக வேண்டி இருக்கும்."

"அப்ப பிள்ளயை என்ன செய்வ?"

"அது வரப்ப பார்த்துக்கிடுவோம்."

தாமரையின் உறுதி தளரவே இல்லை. அருணாசலம் ஏஜன்ஸி விஷயமாக இரண்டு மூன்று முறை சென்னை வந்தவன், தாமரை அலுவலகம், காப்பகம், வீடு என தட்டாமாலை ஆடுவதைப் பார்த்தான். பிறகு அவள் வீட்டில் தங்காமல் விடுதியில் தங்கி, செல் ஃபோனில் தொடர்பு கொண்டு நலம் மட்டும் விசாரித்தான். அவனும் வரவில்லை. அவளும் அவனை வா என அழைக்கவில்லை. "வண்டி, வீடு என வசதியோடதான் தாமரை இருக்கா. ஆனா அவ மண்டைக்கனம் தான் மாறவே இல்லை" என சிதையிடம் சொல்லி இருப்பான். அவனால் சிதைக்கு ரசிக்கும்படியான விஷயங்களைத்தானே அவன் சிதையிடம் கூற முடியும்?

"நல்ல வேளை! என் வேலை மற்ற வேலைகளைப் போல 10-5 என்றில்லாமல் எக்ஸிக்யூட்டிவ் லெவலில், இரவு ஏழு மணி எட்டு மணிவரை இருக்கு." என்றாள் நிர்மலாவிடம் ஒரு நாள்.

"ஏன்?" என்றாள் நிர்மலா.

"பத்திலிருந்து ஐந்து மணி வேலையில் சோம்பித் திரியும் பொழுது அதிகம் இருக்கும். தேவையில்லாத சிந்தனைகள் வரும். அதெல்லாம் இப்ப இல்லவே இல்லை."

"அந்த நேரங்களில் நீ மதுராவுடன் செலவழிக்கலாமே."

"அந்தத் தனிவீட்டில் நானும், மதுராவும் மட்டும்தானே. மேலும் மதுரா காப்பகத்தில் சௌக்யமா இருக்கா. மதுரா அம்மாவைப் புரிஞ்சுப்பா."

"மேலும் மேலும் நீ இறுகிப் போறியோன்னு பயமா இருக்கு."

"தேவையில்லாம இரக்கப்பட்டு மேலும் நான் சிறுமைப்பட விரும்பவில்லை."

"உன்னால் தனியா சமாளிக்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டா, என்ன பண்ணுவ?"

"வரும்னு ஏன் நினைக்கணும்...?"



ஆனால் அப்படி ஒரு சூழல் உருவாகத்தான் செய்தது.

ஒரு நாள் ஆறுமணிக்கே அலுவலகத்திலிருந்து கிளம்பி விட்டாள். ரங்கநாதன் தெருவில் பச்சைப் பசேலென்று காய்கறிகளை வாங்கிக் கொண்டு இரும்புப் பாலம் கடந்து, காப்பகத்திலிருந்து மகளை அழைத்துக் கொண்டாள். பெண்ணிடம்

மலர்ச்சி இல்லை. சோர்ந்து காணப் பட்டாள். "இப்பொவரைக்கும் வெளா டிக்கினுதானே இருந்துச்சு'' என்ற ஆயாவின் கூற்று, பொய்யா நிஜமா தெரியவில்லை. உடம்பில் காய்ச்சல் இல்லை. சரியாகச் சாப்பிடாமல் எட்டு மணிக்கெல்லாம் படுத்து விட்டாள். தாமரை மறுநாளுக்கு வேண்டிய காய் கறியை நறுக்கி ஃப்ரிட்ஜில் வைத்து விட்டு, ஒலி நாடாவில் பழைய பாடலா கப் பொறுக்கிப் போட்டாள்.

காலத்தையும், சூழலையும் தூக்கி எறிந்தது போல பாடல் ஒலித்தது.

*"மலரே! மலரே! நீ யாரோ?*
*வஞ்சனை செய்தவர் தான் யாரோ?*
*உனைச் சூடி முடிந்ததும்*
*பெண் தானோ?*
*பின் தூக்கி எறிந்ததும்*
*அவள் தானோ?"*

ஏ.எம்.ராஜாவின் பாடல். கதி ரேசனுக்குப் பிடித்த பாடல். ஏன் அவனுக்கு ஆரம்பத்திலிருந்தே சோகப் பாடல் பிடித்தது? வாழ்வின் பின் நிகழப் போகும் செயல்களை, தன் குடிப்பிறப்பை உணர்ந்திருந்த அவனால் அனுமானிக்க முடிந்ததா?

பாடலில் கரைவதற்குள் மீண்டும் ஒருமுறை குழந்தையின் பக்கம் கவனம் செலுத்தினாள். சோர்ந்து எழுந்த மகள், முடியாமல் படுக்கை முழுவதும் வாந்தி எடுத்தாள். பதறிப் போன தாமரை படுக்கையை உதறிப் போட்டு, மகளை சுத்தம் செய்து முடிப்பதற்குள் மீண்டும் ஒரு முறை வாந்தி எடுத்தாள். அவசர, அவசரமாய் உடை மாற்றி வருவதற்குள் மகள் துவண்டு விட்டாள். பக்கத்து ஃப்ளாட்காரர்களிடம் உதவி கேட்டால் வியாபார விஷயமாக கணவன் வெளியூர் சென்றுவிட்டதால் தனது இயலாமை யைக் கூறி விட்டு கதவடைத்துக் கொண்டுவிட்டாள். தெருமுனையில் ஆட்டோவில் உறங்கிக் கொண்டிருந்த ஆட்டோ டிரைவரை எழுப்பி, தெரிந்த மருத்துவர் இல்லத்துக்குப் போகச் சொன் னாள். மருத்துவரின் முதல் உதவியைப் பெற்றுக் கொண்டு அவர் எழுதிக் கொடுத்த மருந்தை வாங்க, மேற்கு மாம் பலம் முழுவதுமே அலைந்தாள். ஆட்டோ டிரைவர்தான் தனக்கு ஒரு கடை தெரியும் என அழைத்துப் போனான்.

அவசர, அவசரமாக கடையில் ஏறி மருந்துச்சீட்டை தாமரை நீட்ட, பேரேட்டில் கணக்குகளை எழுதி முடித்து விட்டு, கல்லாவை மூடப் போன கதி ரேசன் நிமிர்ந்து "என்ன வேணும்?" எனக் கேட்டான்.

(தொடரும்)



# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** உங்க ராசிக்கான கிரகங்கள்ல குருவும் சுக்கிரனும் சேர்ந்து உங்களுக்கு ஒரு தெளிவைக் கொடுத்து குழப்பங்களைத் தீர்த்து வைக்கப் போறாங்க. புது அறிமுகங்கள், தெய்வபலம், முக்கியஸ்தர்கள் ஆதரவுன்னு எல்லாம் உங்களுக்கு பக்க பலமா இருக்கும். உத்தியோகத்தில உங்கள் கோரிக்கை நிறை வேறி உற்சாகம் கூடும். எந்திரவகை, இண்டஸ்ட்ரீஸ், பத் திரிகை, ஆபரணம், தொழில்கள் முன்னேற்றமடையும். குடும் பத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். பெண்களுக்கு எதிர்பாராத சந்திப்பு, தெய்வீக ஈடுபாடு ஏற்படும். ஆரோக்கியத்தில் கவனமா இருங்க. சுபயோகம் கூடி வரும்.

**ரிஷபம் :** எந்தப் பக்கம் திரும்பினாலும் எதிர்ப்புக்குரல் கேட்டுக்கிட்டிருந்த நிலைமை மாறி, உங்க சொல்வாக்கு வெற்றி பெறும். துணிவு, நம்பிக்கை கூடும். உத்தியோகத்தில் கொஞ்சம் அதிகமா உழைக்க வேண்டி வந்தாலும், அதுக்கான பலனும் கிடைச்சு உயர்வு கிடைக்கும். புது முயற்சிகள் ஏதும் பண்ணுற யோசனை இருந்தா ஆரம்பிங்க. கொஞ்சம் சிக்கனமா இருக்கறது நல்லது. கெமிக்கல்ஸ், ஜவுளி, கலைத்துறை, ஏற்றுமதி இறக்குமதி தொழில்கள் முன்னேறும். குடும் பத்தில் நெருக்கடிகள் மறைந்து நிம்மதி ஏற்படும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

வளரும் நகைச்சுவை நடிகர் முத்துக்காளைக்கு (சிம்மம்) எதிர்பார்த்த உதவி கிட்டும்



**மிதுனம் :** சாதாரண திட்டம் போட்டாலும் அது ஐந்தாண்டுத் திட்டமா இழுத்துக்கிட்டிருந்த நிலைமை மாறி, எடுத்த காரியங் கள் நிறைவேறும். கல்வி, கேள்வி, விஞ்ஞானம்னு இருக்கறவங்க சாதனை படைக்கிற நேரம் இது. உத்தியோகத்தில அனுகூலமான திருப்பம் காத்திருக்கு. புத்திசாலித்தனமா பயன்படுத்திக்கோங்க. புது முயற்சி அனுகூலமாகும். கலைத்துறையினருக்கு பெயரும், புகழும் கூடும். சட்டம், ராணுவம், காவல் துறையினர் சவால்களைச் சந்திக்கிற நேரம், உஷாரா இருங்க. குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள் மறைஞ்சு ஒற்றுமை கூடும். பெண்களுக்கு உடல் நலனிலும், செலவுகளிலும் கவனம் தேவை.

## அக்னிசர்மா பக்கம்

நவம்பர் 3 முதல் 9 வரை

**கடகம் :** ஏகப்பட்ட ஸ்பீட் பிரேக்கர்கள் இருக்கிற ரூட்ல போயி, வேகமா போக முடியாம தவிச்சிட்டிருந்திங்க இதுவரை. இப்ப எல்லாம் கிளியராகி உங்க வண்டி வேகம் பிடிக்கும். புது திருப்பங்கள் சில காத்திட்டிருக்கு. உத்தியோகத்தில இதுவரை இருந்த குழப்பங்கள் மறைஞ்சுடும். புதிய பொறுப்புகள் கூடும். எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், தொழில் உபகரணங்கள், ரியல் எஸ்டேட் துறையினருக்கு முன்னேற்றமான நேரம். குடும்பத்தில்



## பரிகாரம்

மனிதருக்கு பித்தும் பிணியும் வினைப்பயனால் வரும் சொத்து. மொத்தமும் அனுபவித்தே தீர வேண்டும். இருந்தும், அபயம் என்று வந்தவரை அஞ்சல் என்று கூறி, பித்தத்தையும் சித்தத்தையும் தெளிய வைப்பது இறை. மனநோயும், உடல் நோயும் குணமடைய, மடவார்வளாகம் வைத்திய நாத சுவாமியையும் மனோன்மணியம்மையையும் சென்று வணங்கினால் பலன் நிச்சயம்.

மதுரை - தென்காசி பாதையில் 72 கி.மீ. தூரத்தில் உள்ளது இத்திருக்கோயில்.

- வி

சுப காரிய முயற்சிகள் வெற்றிகரமா நடைபெறும். பெண்களுக்கு எண்ணம் ஈடேறும்.

**சிம்மம் :** துணிஞ்சவனுக்கு துக்கமில்லை, நம்பினவங்க கெட்டதில்லை. உங்க துணிவும் நம்பிக்கையும் கூடி எதிர்ப்புகளை ஜெயிக்கிற நேரம்க இது. திடமா இருங்க. உத்தியோகத்தில அனுகூலமான திருப்பம் ஏற்படும். நிர்வாகத் துறையில இருக்கறவங்க மேன்மை அடைவாங்க. தொழில் ஈடுபாடு உள்ளவங்களுக்கு எதிர்பார்த்த உதவி கிட்டும். ஓட்டல், லாட்ஜ், டிராவல்ஸ் துறையினர் லாபம் பெறுவாங்க. குடும்பத்தில் இதுவரை இருந்த குழப்பங்கள் மறைஞ்சு, குதூகலம் கூடும். பெண்கள் உற்சாகமும் ஆரோக்கியமாகவும் இருப்பாங்க.

**கன்னி :** குழப்பங்களெல்லாம் தீர்ந்து ஒரு தெளிவான மனநிலை கிடைக்கிற நேரங்க இது. முக்கியஸ்தர்கள் ஆதரவும், பண வசதியும் கூடி உங்களுக்குத் தெம்பு கொடுக்கும். உத்தியோகத்தில உங்க திறமை கூடி கடினமான வேலைகளையும் சுலபமா முடிப்பீங்க. புது முயற்சிகள் சுமாரான வெற்றி பெறும். கலைத்துறை, பத்திரிகை, கம்ப்யூட்டர், விஞ்ஞானம், துறைகள்ல உயர்வு பெறுவாங்க. அரசியல்வாதிகள் நிதானமா செயல்பட வேண்டியது அவசியம். குடும்பத்தில் சுப காரிய முயற்சிகள் அனுகூலமாகும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.

**துலாம் :** தெய்வீக ஈடுபாடும், யோகமும் கூடி உங்க மனசுக்கு சந்தோஷமும் நிம்மதியும் தேடி வரப் போற நேரம்க இது. உத்தியோகத்தில இதுவரை இருந்த தடைகள், குழப்பங்கள் மறைஞ்சு அனுகூலமா மாறும். புது முயற்சிகள் வெற்றி பெறும். எஞ்சினிரிங், கமிஷன், கெமிக்கல்ஸ் துறையினர் முன்னேற்றம் காண்பார்கள். அரசியல்வாதிகள் கொஞ்சம் எச்சரிக்கையா இருப்பது நல்லது. குடும்பத்தில இதுவரை தாமதமாகி வந்த நல்ல காரியங்கள் ஈடேறி மகிழ்ச்சி நிலவும். பெண்களுக்கு அனுகூலமான வாரம்.

**விருச்சிகம் :** அதிர்ஷ்ட தேவதை உங்களைத் தேடி வர்ற நேரம்க. வாய்ப்பு கிடைக்கும்போது உஷாரா இருந்து காரியங்களை முடிச்சுக்கோங்க. துணிவும் நம்பிக்கையும் கூடி உயர்வு தரும். உத்தியோகத்தில் சிலருக்கு பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படலாம். இண்டஸ்ட்ரீஸ், கமிஷன், காண்ட்ராக்ட்ஸ், கெமிக்கல்ஸ் துறையினருக்கு ஆதாயம் கூடும். ஏற்றுமதி - இறக்குமதி தொழில் முன்னேற்றமடையும். குடும்பத்தில் குதூகலம் நிலவும். திருமணம் ஆகாதவங்களுக்கு சுப வேளை கூடி வரும். பெண்களுக்கு அனுகூலமான வாரம்.

**தனுசு :** தடைகள், குழப்பங்கள், பிரச்னைகள்னு வார ஆரம்பத்தில கொஞ்சம் டென்ஷனாகவே இருந்தாலும் பிற்பகுதியில் எல்லாம் தெளிவாயிடும். எக்கச்சக்கமா செலவினங்கள் காத்திருக்கு. கொஞ்சம் உஷாரா இருங்க. உத்தியோகஸ்தர்களுக்கு தாமதமாகி வந்த முக்கிய வேலைகள் முன்னேற்றமடையும். ஓட்டல், லாட்ஜ், டிராவல்ஸ், மருத்துவம், பத்திரிகை தொழில்கள் முன்னேற்றம் காணும். குடும்பத்தில் மகிழ்ச்சி கூடும். சுப

காரிய முயற்சிகள் வெற்றி பெறும். பெண்களுக்கு தெய்வீக ஈடுபாடும், ஆரோக்கிய மேன்மையும் உண்டாகும்.

**மகரம் :** நாலடி முன்னேறினா எட்டடி சறுக்கிட்டிருந்த காரியமெல்லாம், இனி திடமா முன்னேறும். தாராள பண நடமாட்டம், புதியவர்கள் அறிமுகம்னு உங்க சூழ்நிலையே மாறிடும். உத்தியோகத்தில உங்க திறமையைப் புரிஞ்சு. பதவி உயர்வு, ஊதிய உயர்வுன்னு அனுகூலங்கள் உண்டாகும். இரும்பு, யந்திரம், காண்ட்ராக்ட்ஸ், கம்ப்யூட்டர் துறையினர் ஆதாயம் பெறுவாங்க. அரசியல்வாதிகளுக்கு புதிய திருப்பம் காத்திருக்கு. குடும்பத்தில இருந்த கருத்து வேறுபாடுகள் மறைஞ்சு ஒற்றுமை ஏற்படும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கையால மகிழ்ச்சி ஏற்படும்.

**கும்பம் :** உங்க தெய்வ பலம் கூடி எதிரிகளையும் எதிர்ப்புகளையும் அடக்கற நேரம். எடுத்த காரியங்கள் வெற்றிகரமா நடக்கும். தேவைக்கேற்ப பண வசதியும், முக்கியஸ்தர் ஆதரவும் கிடைக்கும். உத்தியோகத்தில் புதிய பொறுப்புகளும், வெற்றிகளும் காத்திருக்கு. வெளியூர் / வெளிநாடு பயணம் நேரலாம். தோல் பொருள், எண்ணெய் வகை, கட்டடப் பொருள்கள், ரியல் எஸ்டேட் வியாபாரிகள் லாபம் பெறுவார்கள். அரசியல்வாதிகள் நிதானத்துடன் முடிவுகள் எடுப்பது நல்லது. குடும்பத்தில் குரு பார்வை காரணமா சுப யோகம் கூடும். பெண்கள் உறவினர் வருகையால் மகிழ்ச்சியடைவார்கள்.

**மீனம் :** இதுவரை தாமதமாகி இழுத்தடிச்சிட்டிருந்த பிரச்னைகள் ஒரு முடிவுக்கு வரும். எதிர்பாராத சந்திப்பும், பண வசதியும் ஏற்படும். கடன் தொல்லைகள் மறைஞ்சு நிம்மதி கிட்டும். உத்தியோகத்திலயும் திருப்பம் ஒண்ணு காத்திருக்கு. கலைத்துறை, ஆபரணத் தொழில், பத்திரிகை, ரியல் எஸ்டேட் தொழில்கள் முன்னேறும். பயணங்களில் எச்சரிக்கையோடு இருப்பது நல்லது. குடும்பத்தில் சிறு பிரச்னைகள் ஏற்பட்டு மறையும். வழக்கு, கோர்ட், சொத்து விவகாரங்கள் வெற்றி தேடித் தரும். பெண்கள் ஆரோக்கிய மேன்மையும், பண வரவும் பெறுவாங்க.

## இது நல்ல வாரம்

| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
|---|---|---|---|---|
| புதன் | நவ. 3 (ஐப். 18) | புனர்பூசம் | சஷ்டி | சுபமுகூர்த நாள் |
| வியாழன் | நவ. 4 (ஐப். 19) | பூசம் | ஸப்தமி | சர்வ முகூர்த்தம், சேங்காலிபுரம் அனந்த ராம தீக்ஷிதர் ஆராதனை |
| வெள்ளி | நவ. 5 (ஐப். 20) | ஆயில்யம் | அஷ்டமி | தில்லை சிவகாமியம்மை, திருக்கடையூர் அபிராமி, திருவேற்காடு கருமாரி - உற்சவம் |
| சனி | நவ. 6 (ஐப். 21) | ஆயில்யம் | நவமி | மதுரை கள்ளழகர் உற்சவம் |
| ஞாயிறு | நவ. 7 (ஐப். 22) | மகம் | தசமி | ஸ்ரீ பெரும்புதூர் மணவாள மாமுனிகள் தீர்த்தவாரி |
| திங்கள் | நவ. 8 (ஐப். 23) | பூரம் | ஏகாதசி | குடந்தை கும்பேஸ்வரர் உற்சவம் |
| செவ்வாய் | நவ. 9 (ஐப். 24) | உத்திரம் | துவாதசி | நெல்லையப்பர் புஷ்பாராதனை |



# தென்கச்சி சுவாமிநாதன்

# தெம்புக்குப் படிங்க..!

ஓர் இளைஞன் வேலை தேடினான். கிடைக்கவில்லை. விரக்தியடைந்தான். தற்கொலை செய்து கொள்ளலாம் என்று முடிவு செய்தான்.

தண்டவாளத்தில் தலையை வைத்துப் படுத்துக் கொண்டான். கண்ணுக்கெட்டிய தூரம் வரை எந்த ரயிலும் வருவதாகத் தெரியவில்லை...

அவனுக்குப் 'போர'டித்தது.

என்ன செய்வது என்று யோசித்தான்.

இந்த நேரத்தில் எங்கோ ஒருவர் பொதுக்கூட்டத்தில் பேசிக் கொண்டிருப்பது, ஒலிபெருக்கி வாயிலாக காதில் வந்து விழுந்தது.

எழுந்து நடந்தான்.

அங்கே ஒரு பெரிய திடலில் அந்தக் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. பேச்சாளர் பேசிக் கொண்டிருந்தார்.

"இளைஞர்களே! நீங்கள் எல்லாம் நல்லபடியாக வாழ வேண்டும் என்றால், உங்களுக்குத் தெம்பு வேண்டும். இந்தத் தெம்பு உங்கள் உடலுக்கும் வேண்டும்; மனசுக்கும் வேண்டும்" என்று ஆரம்பித்தவர் இரண்டு மணி நேரம் பேசி முடித்தார்.

கூட்டம் கலைந்தது.

தற்கொலை எண்ணத்தோடு வந்த இளைஞன் கூட்ட மேடையை நெருங்கினான்.

"உங்க பேச்சு என்னை ரொம்பவும் மாற்றிவிட்டது!"

"என்ன தம்பி சொல்றீங்க?"

"நான் தற்கொலை செய்து கொள்ளும் எண்ணத்தோடு தண்டவாளத்தில் தலை வைத்துப் படுத்திருந்தேன்... அந்த சமயத்தில் உங்க பேச்சு வந்து காதில் விழுந்தது... எழுந்து வந்தேன்... உங்க பேச்சைக் கேட்டேன். யோசித்துப் பார்த்தேன். அதன் பிறகு என் எண்ணத்தை மாற்றிக் கொண்டேன்...!"



"அப்படியென்றால்...?"

"நான் தற்கொலை செய்து கொள்ளப் போவதில்லை. தலை நிமிர்ந்து வாழப் போகிறேன்...!"

"தம்பி நீங்க இப்படி சொல்றதை கேட்கும்போது எனக்கு ரொம்பப் பெருமையா இருக்கு... என்னுடைய பேச்சு ஒரு தற்கொலையையே தடுத்து நிறுத்தியிருக்கிறது என்றால்... அது மிகப் பெரிய வெற்றிதான்! அது சரி தம்பி.. நீங்க எப்படி இந்த முடிவுக்கு வந்தீங்க?...!"

"சார்! உங்க பேச்சை இங்கே எவ்வளவு பேர் கேட்டிருப்பாங்க...?"

"என்னா.. ஒரு மூவாயிரம் பேர் கேட்டிருப்பாங்க...!"

"ஏன் சார்... ஒரு மூவாயிரம் பேரை ஒரே நேரத்துலே சாகடிக்கிற நீங்க உயிரோட இருக்கறப்போ... நான் எதுக்காக சாகணும்? இதை நினைச்சுப் பார்த்தேன்... எனக்குத் தெம்பு வந்துட்டுது!"

(அடுத்தவாரம் சந்திப்போம்)

# வம்புக்குப் படிங்க!



**போ**ற்றுவார் போற்றட்டும், தூற்றுவார் தூற்றட்டும்... சுமி இஸ் பேக்! ஒட்டைத் தமிழும் வம்பும் மணக்க, ஒரு பக்க தேவதையா இனிமே உங்களுடன். (செந்தமிழ் சபதமெல்லாம் உடைப்பிலே போட்டாச்சு - ஜாலிதானே!)

**வம்பு நம்பர் ஒன் :** இந்த வருஷம் சென்னை இசை விழாவுல மியூசிக் அகாடமி நிகழ்ச்சிகள் கிடையாது. உள் சபை பூசல்களின் தொடர்ச்சி, கோர்ட், கேஸ்னு பல காரணங்கள். சங்கீத கலாநிதி வாங்கறவருக்குத் தகுதியிருக்கா இல்லையான்ற சர்ச்சை இல்லாம, சீசனே டல்லடிக்கப் போகுது.

**வம்பு நம்பர் டூ :** பெண் கவிஞர்கள் உடல்ரீதியான வர்ணனைகளில் ஈடுபடுவது சர்ச்சையாச்சு அல்லவா? அந்த சர்ச்சைக்கு இன்னும் கொஞ்சம் சவால் விடுகிற மாதிரி ஒரு காரியம். அந்தக் கவிஞர்கள், நியூ பத்திரிகை ஒண்ணு ஆரம்பிச்சு, அதுக்கு 'பனிக்குடம்'னு பெயர் சூட்டியிருக்காங்க! இப்படியொரு பேர் வைச்சா, மேலதட்டு முகம் சுளிக்க மாட்டாங்களா!









* அம்பை * மேதா பட்கர்

பனிக்குடம் இதழ் 3ல் அம்பையோட பேட்டி அருமையாயிருக்கு. (கேள்விகள் குட்டி ரேவதி).

'பெண்ணியம் என்பது பெண் உடல் சார்ந்தது அல்ல. உடல், பற்றிய பட்டுணர்வைச் சார்ந்தது. உடல் சமுதாயத்தில் ஆக்கிரமிக்கும் இடத்தைச் சார்ந்தது... ஒரே குணங்கள் உடையதாய்ப் பெண் உடலைப் பார்ப்பது சரித்திரத்தைப் புறக்கணிக்கும் செயல்'

- இது அம்பையோட ஆழமான, அழகான ஸ்டேட்மெண்ட். பனிக்குடம்ன்ற பெயரையே கேள்விக்கு உட்படுத்தி, அவங்க பேசியிருக்கறது சுவாரஸ்யமான உண்மை.

இந்தப் பேட்டியை எத்தனை ஆண்கள் பொறுமையா படிப்பாங்க, படிக்கறவங்கள்ல எத்தனை பேர் அதை சீரியஸா எடுத்துப்பாங்கன்னு தெரிஞ்சா, அது இன்னும் இன்ட்ரஸ்டிங்கா இருக்கும். சூப்பர் மார்க்கெட்டின் ஆண்பிள்ளைச் சிங்க வாசகர்கள் எழுதிப்போடலாம்.

**வம்பு நம்பர் த்ரீ :** அவுட்லுக் லேடீஸ் ஸ்பெஷல் இஷ்யூ பார்த்தீங்களா...! அதுல பின்பற்ற விரும்பற ஆதர்ச 'பெண்கள்னு இந்தியா முழுக்கத் தேடிப் பட்டியல் போட்டு, வாசகர்கள் கிட்டே தேர்ந்தெடுக்கச் சொல்லிருக்காங்க. முதல் தேர்வு மேதா பட்கர்! செந்தமிழ்நாட்டுத் தமிழச்சி ஒருவர்கூட அந்த ஆதர்சப் பட்டியலில் இல்லை.

சுமி கொஞ்ச நாட்களுக்குக் காணாமல் போனது எவ்வளவு காஸ்ட்லி மிஸ்டேக் பாருங்க!

**சுமி**

# வீட்டிலிருந்தபடியே ஹிந்தியில் பேச கற்கலாமா?

சமீபத்தில் ஒரு அதிகாரி தில்லிக்கு தம் குடும்பத்துடன் சென்றிருந்தார். அங்கு அவர் ஒரு டூரிஸ்ட் காரில் ஏறி பல இடங்களை பார்க்கச் சென்றார். டூரிஸ்ட் வண்டி ஓட்டுனரிடம் "Red Fort" செல்ல வேண்டும் என்றார். தில்லியில் "Red Fort" என்றால் பலருக்குப் புரியாது. "லால் கிலா" (lal Kila என்றால் தான் புரியும். வண்டி ஓட்டுநர் திரும்பத் திரும்ப "லால் கிலா அழைத்து செல் லட்டுமா? (லால் கிலா லே ஜாஊங்? என்று கேட்டிருக்கிறார். "Red Fort" என்பதை ஹிந்தியில் "லால் கிலா" என்று கூறப்படும் என்பது தெரியாத நம் நண்பர், ஓட்டுநர் பணம் சம்பாதிக்கவே ஒரு புதிய இடம் காண்பிப்பதற்காக செல்ல விரும்புகிறார் என்று எண்ணி, "No, No we want to go only to Red Fort" என்று கூறியிருக்கிறார். நாள் முழுதும் சுற்றி விட்டு "லால் கிலா" என்ற "Red Fort"ஐ பார்க்காமலேயே சென்னைக்குத் திரும்பினார்.

நண்பர் செய்த தவறு என்ன? தில்லி செல்வதற்கு முன், சில முக்கியமான சொற்களையும், வாக்கியங்களையும் ஹிந்தியில் சொல்ல, பழகிக் கொண்டு சென்றிருக்க வேண்டும். அப்படிச் சென்றிருந்தால் தில்லிப் பயணம் அவருக்கு மிகவும் நிறைவானதாக இருந்திருக்கும். தில்லி மட்டுமல்ல, அரக்கோணத்தைத் தாண்டிவிட்டாலே ஹிந்தி மொழி அறிந்திருப்பது மிக அவசிய மானதாகிவிடுகிறது.

சுற்றுப் பயணமோ, சாதாரண பயணமோ! ஹிந்தி மொழி தெரிந்திருப்பது அவசியமாகி விட்டது. அப்படித் தெரிந்திருந்தால் பல பொருள்களை விலை கேட்டு வாங்குவது, பல இடங்களில் உள்ள அறிவிப்புகளைப் புரிந்து கொள்வது என்று பல விஷயங்களும் நமக்கு எளிதாகிறது. இது மட்டுமல்ல, வெளிநாடுகளுக்கு வேலைக்குச் செல்லும் போதும் ஹிந்தி மொழி அறிந்திருப்பது வசதியாக உள்ளது.

ஆனால் நம்மில் பலர் ஹிந்தி மொழி கற்க ஆர்வம் இருந்தும், ஏதோ ஒரு பயத்தினால் முயலாமல் இருந்து விடுகின்றனர். பலர் தமிழையும் ஹிந்தியையும் இரு மாறுபட்ட மொழிகளாக எண்ணி ஹிந்தி கற்பது கடினம் என்ற முடிவுக்கு வந்து விடுகின்றனர்.

உங்களுக்கு ஒன்று தெரியுமா? தமிழில் பயன்படுத்தப்படும் ஆயிரணக்கணக்கான சொற்கள் ஹிந்தியிலும் உள்ளன.

உதாரணத்திற்கு சில சொற்களை இங்கு கொடுக்கின்றோம் -

(அனுசார்) அனுசரித்து
(அனுபவ்) அனுபவம்
(உபகரண்) உபகரணம்

பல பெரிய பெரிய உத்யோகத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் கூட, ஹிந்தி மொழி தெரியாத காரணத்தால் மேல் பதவிக்கு உயர முடியாமல் இருந்து விடுகின்றனர்.

தமிழர்கள் மிகவும் அறிவாளிகள். அவர்களின் தொலைநோக்கு மிகவும் வியக்கத்தக்கது. ஹிந்தி மொழி தெரியாத காரணத்தால் அவர்களின் அறிவும் திறமையும் குடத்திலிட்ட விளக்காகி இருந்து விடுகின்றது.

இந்த அறிவையும், திறமையையும் குன்றிலிட்ட விளக்காகச் செய்யும் நோக்கில் பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்க பயிற்சி மையம், "Diploma in Conversational Hindi" என்ற பயிற்சியை நடத்தி வருகிறது.

தமிழ் மூலமாகவும் ஆங்கிலம் மூலமாகவும் நடத்தப்படும் இந்த ஆறு மாதப் பயிற்சியை நன்கு படித்தால் போதும் - மேலே குறிப்பிட்டது போன்ற பல சூழ்நிலைகளை திறமையாகக் கையாளலாம்.

**(பேச்சு மொழி இந்தி டிப்ளமோ பயிற்சிக்கான விபரங்கள்)**
**DIPLOMA IN CONVERSATIONAL HINDI**

1. இப்பயிற்சியில் மொழி ஆர்வ

முடைய எவரும் சேரலாம் (பள்ளிச் சிறுவர் முதல் ரிடையர் ஆனவர் வரை)

2. இது ஆங்கிலம் மூலமாகவும் தமிழ் மூலமாகவும் நடத்தப்படுகிறது.

3. அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எங்கிருந்தபடியும் சுலபமாகப் படிக்கலாம்.

4. 'இரு வழித் தொடர்பு' (TWO WAY COMMUNICATION) இப்பயிற்சியில் சிறப்பு அம்சமாகும். அதாவது ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் பாடங்கள் கூரியர்/Post மூலம் அனுப்பப்படும். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சிகள் இருக்கும். இப்பயிற்சிகளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இவற்றை திருத்தி, பயிலுபவர்களுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.

5. ஒவ்வொரு மாதமும் (இறுதி ஞாயிற்றுக்கிழமையில்) ஒரு நேர்முக வகுப்பு நடத்தப்படுகின்றது. இவ் வகுப்புகளில் அந்த மாதம் அனுப்பிய பாடங்கள் விளக்கப்படுவதுடன் இந்தி மொழியில் உரையாட (மதிய உணவுடன்) பயிற்சியும் அளிக்கப்படுகின்றது.

6. நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக (மொழி விளக்க மேம்பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான் போன்ற இடங்களில் உள்ளன. தவிர 15 பேர்களுக்கு அதிகமான எண்ணிக்கையில் மாணவர்கள் உள்ள இடங்களில் மொழி விளக்க நிபுணர்கள் உள்ளனர்.

7. அகர உச்சரிப்பிலிருந்து பலவகை சூழ்நிலைகளில் பேசும் பயிற்சிகளைக் கொண்ட இரட்டை ஒலி நாடாக்கள் (TWIN CASSETTES) வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுடன் வழங்கப்படும் துணை நூலை படித்த வண்ணம், ஒலிநாடாக் களைக் கேட்டால் மிக விரைவில் மொழியைக் கற்றுக் கொள்ளலாம். இந்த ஒலி நாடாக் களைப் பெற விரும்புபவர்கள் ரூ.150/-க் கான டிமாண்ட் டிராப்ட் SBIOA INSITITUTE, CHENNAI என்ற பெயரில் எடுத்து தனியாக அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

8. பயிற்சியில் தேறியவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் "Diploma in Conversational Hindi" சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இப்பட்டமளிப்பு விழாவில் இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திரசேகர், பாரத ரத்னா சி. சுப்ரமணியம், டாக்டர் கிரண்பேடி, ஐ.பி.எஸ், பாரத ஸ்டேட் வங்கியின் தலைமைப் பொது மேலாளர் திரு. R.C. ஷர்மா, அருட் செல்வர் Dr.N. மஹாலிங்கம், திரு.எஸ். குருமூர்த்தி, Chartered Accountant and Eminent Columinist, Dr.V.C. குழந்தைசாமி போன்றவர்கள் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள்ளனர்.




9. பயிற்சிக் காலம்: ஆறு மாதம் (ஜனவரி முதல் ஜூன் வரை ஜூலை முதல் டிசம்பர் வரை) **அடுத்த வகுப்பு ஜனவரி 2005ல் துவங்க உள்ளது.**

10. பயிற்சிக் கட்டணம் ரூ.600/- (ரூபாய் அறுநூறு மட்டுமே) நேர்முகப் பயிற்சி, தேர்வுக் கட்டணம் உட்பட)

ஜனவரி 2005ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் ரூ.100க்கான டிமாண்ட் டிராப்ட் அல்லது உள்ளூர்க் காசோலை SBIOA INSTITUTE, CHENNAIஎன்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட, தபால் தலையுடன் (ரூ.10) கூடிய உறையுடன் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும். உறையின் மேல் என்று பயிற்சி மொழியைக் குறிப்பிடவும். (இந்த ரூ.100/-க்கான பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்.

The Executive Director,
SBIOA Institute,
229, N.S.C.Bose Road, P.B.No.1279,
Chennai - 600 001.
Phone:044 - 25340226

● தி. ரங்கசாமி, மதுரை- 16.

***? குற்றவாளி வீரப்பன் மட்டும்தானா...? அவனை ஊக்குவித்துப் பாதுகாப்பு அளித்தவர்களுக்கு தண்டனை கிடையாதா?***

! அதற்கு தமிழக அரசு மனமுவந்து, வீரப்பன் எழுதிவைத்துள்ள டைரிகளை பகிரங்கமாக மக்கள் பார்வைக்குக் கொண்டு செல்ல வேண்டும். திருடனுக்குத் தேள் கொட்டிய மாதிரிதான் அரசியல்வாதிகள் விஷயத்தில் இதுவரை இருந்து வருகிறார்கள்.



• ஐந்தாவது இன்னிங்ஸ்!



• காட்டில் மரணம்!

# வீரப்பனைப் பாதுகாத்தவர்களுக்கு தண்டனை கிடையாதா?

! வேரில் பிடித்திருக்கிற ஹிந்துத்வா இருக்கிறவரை பூக்காது... குலுங்கும்!

● ஆசுரா, நெற்குன்றம்

***? படித்தவுடன் புரியும் கவிதை, புரியாக் கவிதை தங்களைக் கவர்ந்தது எது?***

! நம் எண்ணத்தில் ஆரோக்கியமான கிளர்ச்சி 'புரியும்' கவிதை.

●க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

***? 'அவசர நிலை காலத்தில் சில அத்து மீறல்கள் நடைபெற்றன. அது தவறுதான்" என்று ராகுல்காந்தி மன்னிப்புக் கோரும் விதமாகப் பேசியுள்ளாரே...?***

! தவறுகள் பொதுவாக நியாயப்படுத்தப்படும் அரசியல் உலகில், தவறைத் தவறாகவே பார்க்கும் ராகுல், தாமொரு பண்பட்ட அரசியல்வாதியாக உருவாக முடியும் என்பதை உணர்த்தியிருக்கிறார்.

● எஸ். ஏ.கேசவன், குருமலை

***? வெங்கையா போய் ஐந்தாவது முறையாக அத்வானி வந்துள்ளாரே... இனி பா.ஜ.க. பூத்துக் குலுங்குமா?***

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

***? மஹாராஷ்டிர மாநில தேர்தலில் 'மேன் ஆஃப் தி மாட்ச்' சரத்பவார் என்கிறாரே சுஷ்மா சுவராஜ்?***

! காங்கிரஸ் தலைமைக்கு வெறுப்பேற்ற வேண்டும் என்பதற்காகச் சொன்னாலும்

உண்மை அதுதான். காப்டன் பதவியை விட்டுக் கொடுக்காமல், காங்கிரஸ் இழுபறி செய்வதுதான் பரிதாபம்.



• ஆல்வேஸ் ஆதாயம்!

கட்சித் தலைவர்களான பாரூக் அப்துல்லா, ஓமார் அப்துல்லா மீது. இறைவன் அருளால் அவர்கள் உயிர் பிழைத்துள்ளனர்.

● பி.ஜெயப்பிரகாஷ், பொள்ளாச்சி

**? பீஹார் மாதேபுரா தொகுதியில், கொலைக் குற்றவாளியான பப்பு யாதவர் வெற்றி பெற்றுள்ளாரே..?**

! பீஹாரில் அரசியல்வாதிகள் பலரும் இவரைப் போலதான்! மக்களின் சிந்தனை வளராத வரையில் இது மாறாது. சிந்திக்கவிடாமல் ஏழைகளாக, கல்வியறிவற்றவர்களாகவே மக்களை வைத்திருப்பதிலும், பீஹார் அரசியல்வாதிகள் முதல் நம்பர் கில்லாடிகள்!

● வசீகரன், சென்னை-18

**? சட்டசபைத் தேர்தலுக்கு முன் ஜெயலலிதா ஏகப்பட்ட நல்ல பெயரை சேர்த்துக் கொள்வார் போல் தெரிகிறதே?**

! அதற்குத் திட்டமிட்டுச் செயல்படுவது தெரிகிறது; புரிகிறது... நாடாளுமன்றத் தேர்தல் வரை அனைவரது வெறுப்பையும் சம்பாதித்துக் கொண்டவர், அதற்குப் பிறகு அனைத்துத் தரப்பின் வாழ்த்துகளையும் பெற முயற்சி செய்கிறார். இது அவருக்குத் தேர்தலில் ஓரளவு பயன் படலாம். ஆனால் இத்தகைய 'கடுங்கொடுமை'; 'திடீர் கருணை' போக்கு நல்லாட்சிக்கு வழி வகுக்காது.

● பா.சு.மணிவண்ணன், திருப்பூர்

**? இந்த ஆண்டு தீபாவளி யாருக்கு உண்மையான மகிழ்ச்சியாக இருக்கு...?**

! கல்கி தீபாவளி மலர் வாங்குவோருக்கு!

● ஜி. ராமதாஸ், தஞ்சாவூர்

**? தமிழக காங்கிரஸ் தலைவராக ப.சிதம்பரம் நியமிக்கப்பட்டால் இங்கு கோஷ்டிப் பூசல் குறையுமா?**

! நிச்சயமாகக் குறையும்! அவரைப் பதவி இறக்க வேண்டுமெனக் கோரி, எல்லா கோஷ்டிகளும் ஒருங்கிணையும் (தற்காலிகமாக!)

● வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி.

**? சந்தன வீரப்பனை அதிரடிப்படை கட்டுக்**

• டெம்ப்பரரி ஒற்றுமை!

• தேர்தல் டைம் திருப்பங்கள்!

● சி.சசிகலா, விருதுநகர்

**? ஜம்மு-காஷ்மீர் தீவிரவாதிகள், இந்திய ராணுவத்தின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியிருக்கிறார்களா?**

! எங்கே! லேட்டஸ்ட் குண்டு தாக்குதல் முயற்சி எதிர்



• டார்கெட்-சோனியா



• 'பவர்' பாலிடிக்ஸ்!



• ஹெல்த் அரசியல்!

***கொன்றுள்ளதால் இனி மலைவாழ் கிராம மக்கள் நிம்மதியாக வாழ்வார்கள் தானே...?***

! அது அதிரடிப் படையின் நடத்தையில் இருக்கிறது. அதிரடிப் படையின் பணி முடிந்தது என்று கூறி, அதனைக் கலைக்காமல் அதன் ஆயுளைத் தற்போது நீடித்து வரும் தமிழக கர்நாடக அரசுகளின் இறுதி முடிவைப் பொறுத்திருக்கிறது.

• என்.பாலகிருஷ்ணன், மதுரை

***? "சோனியா பள்ளிப் படிப்பையே முடிக்காதவர். அவர் ஒரு ரெஸ்டாரண்டில் சர்வராக இருந்தவர்..." என்றெல்லாம் சொல்கிறாரே சு.சுவாமி?***

! கல்வி என்பது பள்ளி கல்லூரிகளில் மட்டும் பெறப்படுவதல்ல, உடல் உழைப்பு அகௌரவமானதல்ல. இதற்கு எத்தனையோ உதாரணங்களை உலகத் தலைவர்களின் வரலாறுகள் சொல்கின்றன. மெத்தப் படித்த சு.சுவாமிக்குத் தெரியாதிருக்கலாம், நமக்குத் தெரியும்.

• க.பொன்னிலாசேகர், பெங்களூர்-53

***? வீரப்பனைச் சுட்டுக் கொன்ற அதிரடிப்படையினருக்கு மூன்று லட்சம் ரூபாய், ஒரு வீட்டு மனை, பதவி உயர்வு... தேவைதானா?***

! இது கூடப் பரவாயில்லை. அதிரடிப் படையினருக்கான பாராட்டு விழாவுக்கு மட்டும், முதல்வர் முப்பது லட்ச ரூபாய் ஒதுக்கியுள்ளதுதான் வேதனையாக உள்ளது. அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம். இப்போ பாருங்க... காட்டிலாகாவைச் சேர்ந்த அரசு ஊழியர்கள், தங்களுக்கும் பரிசுகள் கேட்கிறார்கள்!

• உமரி பொ.கணேசன், மும்பை-37

***? தமது ஆட்சியில் வீரப்பன் சரணடைந்திருந்தால், இந்தக் கதி ஏற்பட்டிருக்காது என்று கருணாநிதி கூறுகிறாரே?***

! யார் ஆட்சியானாலும் வீரப்பன் சரணடைந்திருந்தால் அவனுக்கு இந்தக் கதி வந்திருக்காதுதான். ஆனால் ஒரு சமூக விரோதியின் கதை முடிக்கப் பட்டதை ஒட்டு மொத்த தமிழ்நாட்டின் வெற்றியாக நாம் கருதாததுதான் வேதனையாக இருக்கிறது. எல்லா விஷயங்களிலும் அரசியல் ஆதாயம் தேடுவது அதைவிட வேதனை!

**ரூ.100/- பரிசு பெறுபவர்:**

தி.ரங்கசாமி,
3, நாலாவது குறுக்குத் தெரு,
டோக் நகர்,
கோச்சடை

**ரூ.50/- பரிசு பெறுபவர்:**

வே.சித்ரா,
12, வி.எம்.இரண்டாம் தெரு,
சாந்தி ஸ்டோர் பின்புறம்,
கும்மிடிப்பூண்டி - 601 201



# புதுப் பெரிய அண்ணன்!

அமெரிக்க ஜனாதிபதித் தேர்தல் இந்நேரம் முடிந்து புதிய பெரிய அண்ணன் வந்திருப்பார்.

புஷ் அமெரிக்க ஜனாதிபதித் தேர்தலில் வென்றுவிட்டார் என்ற ஒரு செய்தி, சில வாரங்களுக்கு முன்பே ஒரு கட்டுரையில் வெளியாகியிருக்கிறது. ஒரு வேளை வழக்கமான தேர்தல் ஆருடமோ? இல்லை. இது வேறு விஷயம். ஈ. அண்ட் எஸ்., டைபோல்ட், சிகொலா ஆகிய மூன்று நிறுவனங்களும் அப்படி முடிவெடுத்துவிட்டார்களாம். அந்த மூன்று நிறுவனங்களும் தான், தேர்தலில் முக்கியப் பங்கு வகிக்கும் மின்னணு வாக்குப் பதிவு இயந்திரங்களின் உரிமையாளர்கள்.

கம்ப்யூட்டிங் மெஷினரி கூட்டமைப்பு என்ற நிறுவனமும், வின் லாண்டெஸ், ஜெர்ரி போல்ஸ் ஆகிய சில பத்திரிகையாளர்களும், இந்த வாக்குப் பதிவு இயந்திரங்களில் சில மாயங்களைச் செய்து, புஷ் அடுத்த ஜனாதிபதியாவதற்கான வகையில் மின்னணு இயந்திரங்கள் ஏற்கெனவே தயார் செய்யப்பட்டுள்ளன என்கிறார்கள் இவர்கள்.

போனமுறையே மிகவும் மயிரிழையில் தான் புஷ் வெற்றிபெற முடிந்தது. இந்த முறை அந்த அதிர்ஷ்டத்தை அவர் பெறக்கூடாது என்பதற்காக கெர்ரி தன்னால் முடிந்த அத்தனை வழிகளையும் முயன்று பார்த்திருக்கிறார். இறுதிச் சுற்றுப் பிரசாரத்தில் முன்னாள் ஜனாதிபதி கிளின்டனும் இவருக்கு ஆதரவுக் கரம் நீட்டியிருக்கிறார். இதய அறுவைச் சிகிச்சை ஒன்றுக்கு ஆளான கிளின்டன், உற்சாகமாக தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டு, "இதைவிட என் இதயத்துக்கு ஆரோக்கியமான விஷயம் வேறு உண்டா?" என்று வசனம் பேசியிருக்கிறார்.

ஈராக் தாக்குதலை வன்மையாகக் கண்டித்த கெர்ரி, 2002 அக்டோபரில் "சதாம் ஹுசேனை நம் முழுபலத்தைக் காட்டி ஆயுதமிழக்கச் செய்ய வேண்டும்" என்று முழங்கினார்.

இந்த மாறுபட்ட பேச்சை சுட்டிக்காட்டி புஷ் தரப்பினர் எக்காளமிட்டனர். "நிலையற்ற புத்தி கொண்டவர்" என்ற பிரசாரம் கெர்ரிக்கு எதிராக முடுக்கிவிடப்பட்டது.

ஈராக் போரில் மட்டுமல்ல, புஷ்ஷின் பல நிலைபாடுகளிலிருந்து கெர்ரி மாறுபடுகிறார். கடுமையான சுற்றுச் சூழல் நலச் சட்டங்கள் தேவையென்கிறார். ஓரினச் சேர்க்கைக்காரர்களை அரசு தண்டிக்கக் கூடாது, வேலைகளில் சேர அவர்களுக்குத் தடை இருக்கக் கூடாது என்கிறார். கெர்ரி ஜனாதிபதியானால் அமெரிக்காவில் பணியாற்றும் இந்தியர்களுக்கு விசாக்கள் எளிதாகக் கிடைத்துவிடும் என நம்பப்படுகிறது. ஆனால் பி.பி.ஓ. என்கிற வகையில், இந்தியா போன்ற பிற நாடுகளில் அமெரிக்க நிறுவனங்கள் பெரிய அளவில் வேலை வாய்ப்பு அளிப்பதை அவர் கட்டுப்படுத்துவார் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

நம் ஊரைப் போலவே அங்கும் பலவித தேர்தல் நாடகங்கள் அரங்கேறின. 'உங்களில் ஒருவன்' இமேஜை வளர்த்துக் கொள்ள படாத பாடு படுகின்றனர். எப்படியோ, தேர்தல் முடிவுகள் வெளியாகும்போது 'யாருடைய கையில் அமெரிக்கா பாதுகாப்பாக இருக்கும்?' என்ற அமெரிக்க மக்களின் கேள்விக்கு விடை கிடைத்திருக்கும். ஏனென்றால் செப்டம்பர் 11க்குப் பிறகு பெரும்பாலானவர்களின் மனதில் உள்ள கிலியின் வெளிப்பாடு அது.

- ஜி.எஸ்.எஸ்.

# குறையொன்றுமில்லை

## ஏழாம் பாகம் ஆரம்பம்



மட்டபள்ளி க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும்படியான ஸ்ரீ ராஜ்ய லக்ஷ்மி சமேத எம்பெருமான் லக்ஷ்மி நரசிம்ஹனின் பரிபூரண அனுக்கிரஹத்தினாலேயும், பகவத் - பாகவத ஆசார்ய கடாக்ஷத்தினாலேயும், இங்கே குழுமியிருக்கும்படியான பாகவத பக்தர்களினுடைய கடாக்ஷத்தாலேயும் இந்த ஆஸ்திக சமாஜத்தில் மீண்டும் எம்பெருமான் திருநாம விசேஷங்களைச் சொல்லும்படியான உபன்யாஸம் நடக்கிறது.*

இந்த ஆஸ்திக சமாஜமானது, உயர்ந்த யக்ஞ பூமி. நரசிம்ஹ மஹா யக்ஞம் இங்கே முதன் முதலில் நடந்ததாலேதான், உத்தர மஹாயக்ஞங்கள் பல க்ஷேத்திரங்களில் நடந்தன.

இன்றைய தினம் மட்டபள்ளி க்ஷேத்திரத்திலே விசேஷமாக எம்பெருமான் லக்ஷ்மி நரசிம்ஹன் எழுந்தருளியிருக்கிறான். அந்த எம்பெருமான் நமக்கு சேவிக்கக் கிடைக்கிறான் என்றால், அதற்கான ஆரம்பம் இங்கேதான் விசேஷமாக நடந்தேறியது.

அப்படிப்பட்ட யக்ஞ பூமி இது. ஆஸ்திகர்கள், மகான்கள் எழுந்தருளியிருக்கும்படியான உத்தமமான சபை இது.

ஆஸ்திகர்கள் என்றால் யார்...?

தைத்ரீய உபநிஷத்தில் 'ஸத் என்றால் யார், அஸத் என்றால் யார்' என்று பிரித்துச் சொல்லியிருக்கிறது.

ஸத் என்றால் அஸ்தி. - 'பகவான் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு அத்தனை பேரும் தாஸர்கள்' என்பது ஸத்.

பிராணி வர்க்கமாயிருந்தாலும் சரி, பறவையாயிருந்தாலும் சரி, எந்த ஜீவராசிக்கு இந்த ஞானம் ஏற்படுகிறதோ, அப்படிப்பட்டதெல்லாம் ஸத்து. இப்படி பிராணி - பறவை வடிவிலேயும் அது ஸத்து; மனித வடிவிலேயும் இவன் ஸத்தாகிறான்.

இந்த ஞானம் யாரிடத்தில் இல்லையோ, அவர்கள் நாஸ்திகர்கள்.

'நிற்கின்றதெல்லாம் நெடுமால். அவனுக்கு நாம் நிலையடியோம்' என்று 'காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்றின்றி கண்ணனையே கண்டுரைத்த கடிய காதல்' என ஆழ்வார் எப்படி காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்று இல்லை என்கிறாரோ; கண்ணால் பார்ப்பதும், பேசுவதும் அந்த எம்பெருமானையே என்று அந்த ரங்கநாதனிடத்திலே திருப்பாணாழ்வார் எப்படி ஈடுபட்டாரோ, அப்படி ஈடுபட்டு, அவர் பாடிய பாடல் பத்தும் வேதத்தின் பொருள் என்கிறார் சுவாமி தேசிகன்.

அந்த மாதிரி, நிற்கின்றதெல்லாம் நெடுமால், காணும்படியான வஸ்துக்கள் அனைத்திலும் அவன் அந்தர்யாமியாய் உறைகிறான் என்பதை உணர்ந்து,

---

* 'குறையொன்றுமில்லை' என்கிற தலைப்பில் வெளிவரும் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாம விளக்கம் ஸ்ரீ முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார், சென்னை ஆழ்வார்பேட்டை ஆஸ்திக சமாஜத்தில் ஆற்றிய உபன்யாஸ ஒலிப்பதிவின் தொகுப்பு.

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**



'அவனுக்கு நாம் தாஸர்கள்' என்று இருக்கக் கூடிய அத்தனை பேரும் ஸத்துக்கள் ஆகிறார்கள். அவர்கள் ஆஸ்திகர்கள்.

பகவான் இல்லை என்றும், அப்படிப்பட்ட எம்பெருமானிடத்திலே அன்பு இல்லாதவர்கள், உயர்ந்த ஞானமிருந்தும் பகவானிடத்திலே பக்தி செலுத்தாதவர்கள் எல்லாம் நாஸ்திகர்கள் ஆகிறார்கள். சாஸ்திர ஞானம் நிறைய இருக்கும்; நிறையப் படித்திருப்பார்கள்; பகவானிடத்தில் பக்தி இல்லாது போனால் பிரயோஜனம் இல்லை.

அந்த உயர்ந்த பக்தி யாரிடத்தில் அமைகிறதோ, அவர்களெல்லாம் உயர்ந்தவர்கள் என்று உபநிஷத் கொண்டாடுகிறது.

அப்படிப்பட்ட ஆஸ்திகர்களின் சமாஜம் இது. உயர்ந்த சென்னையிலே, ஹ்ருதய ஸ்தானத்திலே அமைந்திருக்கிறது.

எங்கே அமைந்திருக்கிறது என்று கேட்டால், 'திவ்யசூரி க்ஷேத்திரத்தில்' என்று சொல்லலாம். 'ஆழ்வார்'(களின்) பேட்டை அல்லவா! ஆழ்வார்களுக்கெல்லாம் திவ்ய சூரிகள் என்று பெயர். ஆகவே இந்த இடத்தின் பெயரைச் சொல்கிறபோதே, விசேஷமாக ஆழ்வார்களை தியானம் பண்ணுகிறோம்.

அப்படிப்பட்ட திவ்ய சூரிகள் இருக்கும்படியான இடம் இது. இங்கே வருபவர்களும் அந்த நித்ய சூரிகள் கோஷ்டியிலே சேர வேண்டும் என்பதற்காக, எம்பெருமானின் திருக்கல்யாண குணங்களைப் பரஸ்பரம் அனுபவிக்க வருபவர்கள்.

'காயந்தி, துஷ்யந்தி, ரமந்தி' என்றான் பகவான் கீதையில்.

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களைச் சொல்லுதல்... அதைக் கேட்டு எழுந்தும் பறந்தும் துள்ளாதா மனமும் உடலும்...?" என்று கேட்கிறார் ஆழ்வார்.

கேட்டு சிரக்கம்பம் பண்ணி (தலை அசைத்து) எகிறிக் குதித்துத் துள்ள வேண்டுமாம்! ஒஹோ! ஆஹா என்று

"அந்த D.M.C. ரிப்போர்ட்டை எடுத்துட்டுவா!"

"தீபாவளி மாமூல் கலெக்ஷன் ரிப்போர்ட்டையா? இதோ கொண்டாரேன் ஸார்!"

- உ. ராஜாஜி



சந்தோஷப்பட்டு - துஷ்யந்தி, ரமந்தி - அதிலேயே ரமித்துப் போகிறார்கள். அந்த எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களைக் கேளாமல் எப்படிப் பொழுதைப் போக்க முடியும் என்று கேட்கிறார் நம்மாழ்வார், பெரிய திருவந்தாதி என்கிற பிரபந்தத்திலே.

*கார் கலந்த மேனியான் கை கலந்த*
*ஆழியான்*
*பார் கலந்த வல் வயிற்றான், பாம்பு*
*- அணையான் சீர் கலந்த*
*சொல் நினைந்து போக்காரேல்,*
*சூழ்வினையின் ஆழ்துயரை*
*என் நினைந்து போக்குவர்*
*இப்போது?*

'என் நினைத்துப் போக்குவர்?' என்று இந்தப் பாசுரத்திலே ரொம்ப அழகாக ஒரு கேள்வி கேட்கிறார்.

இந்த உலகத்திலே ஒருத்தர் வாழ்ந்து கொண்டிருக்கிறார். சங்கு - சக்கரங்களைத் திருக்கரத்திலே தரித்திருக்கும்படியான எம்பெருமான், கமலத்தையும் தன் உதர பந்தத்திலே தரிக்கக் கூடியவன்.

*பஞ்சாறு வரையேழும் கடல்கள்*
*ஏழும்*
*வானகமும் மண்ணகமும்*
*எஞ்சாமல் வயிற்றடக்கிக் காக்கும்*
*பிரான் அவன்!*

அப்படிப்பட்ட எம்பெருமானது சீர் கலந்த சொல் இருக்கிறதே... அவன் உத்தம திவ்ய சரித்திரத்தைப் பேசும்படியான அவனது நாமங்கள் உள்ளனவே... அவற்றை நினையாமல் சூழ்வினையைப் போக்கிக் கொள்ள வழி ஏது? அவற்றை நினையாமல் காலத்தை எப்படிக் கழிக்க முடியும்? வேறு எதை நினைத்துப் பொழுதைப் போக்குவதாம்!

இந்த உலகத்திலே வேறு எந்த விதத்திலே நாம் முன்னேற முடியும்? 'பகவான் அனுபவத்தைத் துய்ப்பது தவிர நமக்கு வேறு வழி இல்லை' என்கிறார் ஆழ்வார். திட்டவட்டமாக இதை எடுத்துச் சொல்வதனாலே, நாம் இந்தப் பெரும் வாழ்க்கையிலே அவனை அடைவதற்கு 'பாதேயம் புண்டரீகாக்ஷம் நாம ஸங்கீர்த்தனாம்ருதம்' என்று திருநாம வைபவங்களைப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

அந்தத் திருநாமங்களாகிய சாத முட்டையை நாம் பக்கத்திலே வைத்துக் கொள்ள வேண்டும். அதை வைத்துக் கொண்டால்தான், களைப்பில்லாமல் திவ்ய ஸ்தானத்தை நாம் அடைய முடியும். அந்தப் பெரும் பயணத்திலே நமக்குக் களைப்பில்லாமல் இருக்கும்.

இப்படி எம்பெருமானின் கல்யாண குணங்கள் எல்லாவற்றையும் அனுபவிக்கக் கூடியவர்கள், பேசக் கூடியவர்கள் ஆஸ்திகர்கள்.

அப்படிப்பட்ட ஆஸ்திகர்களின் சமாஜத்தில், மண்டபத்துக்குப் பெயரானது 'நைமிசாரண்ய மண்டபம்' என்று அமைந்திருக்கிறது.

உத்தர தேசத்திலே உள்ள நைமிசாரண்யம், எல்லா புராணங்களும் ஆவிர்ப்பவித்த உயர்ந்த இடம். கோமதி சக்ர தீர்த்தம் விசேஷமாக அமைந்திருக்கிறது. அஹோபில மடத்து நாற்பத்து மூன்றாவது பட்டத்து ஸ்ரீமத் அழகிய சிங்கரின் பிருந்தாவனம், அந்த க்ஷேத்திரத்தில் அடங்கியிருக்கிறது. ஆழ்வார் அந்த க்ஷேத்திரத்தை

**வான் நிலா முறுவல், சிறு நுதல்**
**பெருந் தோள்**
**மாதரால் வன முலைப் பயனே**
**பேணினேன்; அதனைப் பிழை**
**எனக் கருதி**
**பேதையேன் பிறவி நோய்**
**அறுப்பான்.**
**ஏன் இலேன் இருந்தேன்;**
**எண்ணினேன்; எண்ணி**
**இளையவர் கலவியின் திறத்தை**
**நாணினேன்; வந்து உன் திருவடி**
**அடைந்தேன் -**
**நைமிசாரண்யத்துள் எந்தாய்!**

என்று கதறிப் பாடி அழுகிறார்! நிர்வேதப் படுகிறார் திருமங்கை ஆழ்வார்! 'வீணாகக் காலத்தைக் கழித்து விட்டேன். தவறி பல காரியங்கள் செய்து விட்டேன்' என்று நைமிசாரண்யத்தைப் பார்க்கிறபோதே அவருக்கு உடம்பு நடுங்குகிறது.

அரண்ய ரூபியாய் அந்த க்ஷேத்திரத்திலே பகவான் இருக்கிறான். பர்வத ரூபியாய் திருமலையிலே இருக்கிறான். தீர்த்த ரூபியாய் புஷ்கரத்தில் இருக்கிறான்.

'ஜோதிஷ் ஸ்ரீ விஷ்ணு: புவனானி விஷ்ணு:' என்று விஷ்ணு புராணத்திலே வருகிறது.

"ஜோதிஸ்ஸாக - அக்னி ரூபியாய் இருக்கிறான். அவனுடைய ஒளியினால் எல்லாமே ஒளி பெறுகிறது' என்கிறது உபநிஷத். எல்லாவற்றுக்கும் மூலமான ஒளியாய் எம்பெருமான் விளங்குகிறான்.

வனானி விஷ்ணு: புவனானி விஷ்ணு: வனமாய் இருக்கிறான். புவனமாய் இருக்கிறான். எல்லாமாய் இருக்கும்படியான எம்பெருமான், நைமிசாரண்யத்தில் அரண்ய ரூபியாகக் காட்சி அளிக்கிறான். அரண்யத்தைப் (காடு) பார்த்தவுடனேயே நடுக்கம் ஏற்பட்டு, திருமங்கையாழ்வார் பத்து பாசுரங்களிலே நிர்வேதப்பட்டுக் கதறி அழுகிறார். அப்படிப்பட்ட திவ்ய க்ஷேத்திரம் அது.

அங்கு சென்றாலே, சாமான்யர்களுக்கும், ரொம்ப லௌகிகத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும், வைராக்கியமே இல்லாதவர்களுக்கும் கூட வைராக்கியம் வரும். அப்படிப்பட்ட திவ்ய க்ஷேத்திரம் அது. அந்தப் பெயரையே இந்த ஆஸ்திக சமாஜத்தின் மண்டபம் தாங்குவதாலே, இங்கே எம்பெருமான் திருக்கல்யாண குண விசேஷங்களைக் கேட்க வருகிறவர்களுக்கும் வைராக்கியம் உண்டாகும்.

(வளரும்)



**"இலவச பொருள்களை கொடுக்கறது சரிதான், அதுக்குன்னு இப்படியா?"**
**"ஏன்?"**
**"இந்த வாரம் இலவச பொருள்கள் மட்டும்தானாம், புஸ்தகம் கிடையாதாம்!"**
**- வாசுகிசோமு**




அகண்ட திரைக்கு அடியோடு மாறி விட்டது தமிழ் சினிமா. விஷ்வதுளசி விரிவதோ, முப்பத்தைந்து எம்.எம்.மில். இந்த ஃபார்மேட்டை, இயக்குனர் ஏன் தேர்ந்து கொண்டார் என்ற கேள்விக்கு, படம் ஆரம்பித்த பத்தாவது நிமிடத்திற்குள் பதில் கிடைத்துவிடுகிறது. படம் ஒரு சலன ஓவியமாக வசீகரிக்க வேண்டும். அதற்கு முப்பத்தைந்து எம்.எம். சதுரத்திரை, ஓவியத்தின் வெளிப்புறச் சட்டம் போல் பார்வையாளனின் கவனத்தை ஒருமுகப்படுத்தும் என நம்பியிருக்கிறார். அவரது நம்பிக்கையும், உழைப்பும் வீண் போகவில்லை. ஒவ்வொரு ஃபிரேமிலும் ஓவியத் தன்மை. கதையிலும், பாத்திரப்படைப்பிலும் காப்பியத்தன்மை.

இருபது வருடங்களுக்குப் பிறகு சுந்தரபுரிக்கு வருகிறாள் கதைநாயகி துளசி. கூடவே அவளது காதல். காதலென்றால் விதையாய் விழுந்து, இதயத்துள் மௌனக் காடாக மண்டிக் கிடக்கும் மானசீகக் காதல். அவளது காதலன் விஷ்வமும் அதே காதலோடு, முதிர் கண்ணனாக வாழ்ந்து வருவதைக் காணும் துளசி, மீண்டும் துளிர்க்கிறாள். இருபது வருடங்களுக்கு முந்தைய இளம்பிராய வாழ்க்கையை இடையிடையே துளசி அசைபோட, நம்மை 1942க்கும் 1962க் கும் இடைப்பட்ட காலகட்டத்தின் கதைக் களத்திற்கு, ஓர் உணர்ச்சிகரமான அழகியல் பயணம் அழைத்துக் கொண்டு போகிறார்கள்.

நாயகனுக்கு நாற்பதாவது பிறந்தாள். துலாபாரத்தின் ஒரு தட்டில் விஷ்வம் உட்கார்ந்திருக்க, மறுதட்டில் பாத்திரங்கள், அணிகலன்களை அடுக்கிக் கொண்டேயிருக்கிறார்கள். ஆனால் துலாக்கோலின் முள் நேராகாமல் ஊசலாடுகிறது. விஷ்வம் ஒரு துளசிக் கொத்தை எடுத்து வைக்க, தட்டுக்கள் சமமாகின்றன. நாயகன் வீட்டு வாசலில் சலவைத் தொழிலாளி காத்திருக்கிறார். அவரிடம் வெளுக்க துணிகளைத் தருகிறார்கள். விஷ்வத்தின் வேஷ்டியை விரித்து, அதில் துளசியின் பட்டுப்புடைவையை வைத்து மூட்டையாகக் கட்டி எடுத்துச் செல்கிறார். இந்தக் காட்சியைப் பார்க்கும் துளசியின் முகத்தில், வாழ்க்கையை மறுபடியும் கண்டெடுத்த மகிழ்ச்சி. இப்படி கவித்துவமான, வசனங்களற்ற காட்சிகளை, அதிக ரசனையோடு பயன்படுத்தியிருக்கிறார் இயக்குனர் சுமதி ராம்.

எம்.எஸ்.வி. - இளையராஜா கூட்டணியின் இசை புதிய பரிமாணத்தைத் தந்துவிடுகிறது.

- விஷுவல்தாசன்

● டிஸ்டிங்ஷன்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka

கல்கி வழங்கும்
# சென்னை ஸ்டேஜ்
கல்கி தூண்டலில் ஒரு மின்னல்!
(சென்னை வாசகர்களுக்கு மட்டும்)



8 பக்கங்கள் | 7, நவம்பர் 2004 இதழுடன் இலவச இணைப்பு

# மந்த்ரா பேடியும், பேய்ச் சிரிப்பும்!





கிரிக்கெட் ரசிகர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். கிரிக்கெட்டுக்காக கிரிக்கெட்டை ரசிப்பவர்கள். மந்த்ரா பேடிக்காக கிரிக்கெட்டை ரசிப்பவர்கள். அதேபோல், லாஃபிங் வைல்ட் நாடக ரசிகர்களையும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். நாடகத்திற்காக நாடகத்தை ரசித்தவர்கள். மந்த்ரா பேடிக்காக நாடகத்தை ரசித்தவர்கள்.

மியூசிக் அகாடெமி நிரம்பி வழிந்தது. முதல் காட்சியில் மந்த்ரா பேடியும், தர்ஷன் ஜரிவாலாவும் ஒரு பல்பொருள் அங்காடியில் சந்தித்துக் கொள்கிறார்கள். ரொம்ப நேரம் நூடுல்ஸ் பாக்கெட்டை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த தர்ஷனை, மந்த்ராபேடி படீரென்று அடித்துவிட்டு மறைந்து விடுகிறார். பின்பு இருவரும் ஒருவர் பின் ஒருவராக மேடைக்கு வந்து தங்களைப் பற்றி சொல்லுகிறார்கள்.

முதலில் மந்த்ரா. கிட்டத்தட்ட மூன்றாம் பிறை ஸ்ரீதேவியைப் போல 'அபார அறிவாற்றல்' மிக்கவர் இவர். திடீரென்று சிரிப்பார். பின்பு சத்தமாக 'ஐ லவ் யூ' என்று பார்வையாளர்களைப் பார்த்து கொஞ்சலாகக் குழைந்து குழைந்து சொல்வார். தரையில் உட்கார்ந்து கொண்டு 'வாழ்க்கையின் அர்த்தத்தை' அலசி ஆராய்வார்.

ஒருவர் தனது வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் தெரியுமா? தொடர்ந்து மூச்சு விட்டுக் கொண்டே. ஏன் தொடர்ந்து மூச்சு விட வேண்டும்? தெரியாதவர்கள் இப்பொழுது தெரிந்து கொள்ளலாம். மூச்சு விடவில்லை என்றால் நம்மால் வாழ முடியாது. 'அடடா, அமர்க்களமான தத்துவமாக இருக்கிறதே, பேஷ் பேஷ்' என்று பேய்ச் சிரிப்பு சிரித்தார்கள் ஜொள்ளு பார்வையாளர்கள்.

அடுத்து வந்தவர் மந்த்ராவிடம் அடி வாங்கிய அப்பாவி, தர்ஷன். தன்னைச் சுற்றி நடப்பதெல்லாம் நன்மைக்கே, உலகத்தில் உள்ள எல்லா இன்பங்களும் தனக்காகத் தான் தோன்றின என்று எல்லாவற்றையும் 'பாஸிடிவ்வாக' எடுத்துக் கொள்ள முயலும் ஒரு கதாபாத்திரம் இவருடையது.

"நான் இந்தப் பிரபஞ்சத்தின் ஒரு பங்கு. எல்லையற்ற இன்பங்களை நான் அடைகிறேன். நட்சத்திரங்கள் என் தலை மீதுதான் தோன்றுகின்றன" என்று இரண்டு கைகளையும் மேலே தூக்கிக் கொண்டு இவர் ஆடும் ஆட்டமும், செய்யும் சேட்டைகளும் அரங்கத்தை அதிர வைத்தது.

இந்த நாடகத்தில் கதை என்று தனியாக் ஒன்றும் கிடையாது. அதற்குத்தான் மந்த்ரா இருக்கிறாரே. பிறகு தனியாக கதை வேறு எதற்கு என்கிறீர்களா? அதுவும் நியாயம்தான்.

✍ மருதன்

# சி.ஐ.பி. தீபாவளி!

**ஏற்கெனவே நம் சென்னை ஸ்கேனில் சி.ஐ.பி.ஆக வலம் வந்த சிலரிடம் தீபாவளி சம்பந்தப்பட்ட கேள்வியை ராக்கெட்டாக அனுப்பினோம். பதில் பட்டாசாக வந்தது.**



• ஷாலினி

**சுசித்ரா:**

***இந்த தீபாவளிக்கு உருப்படியா என்ன செய்யப் போறீங்க?***

...ம். எனக்குத் தெரிஞ்ச ஒரு குழந்தைகள் ஆசிரமத்துக்குப் போய் அவங்க கூட தீபாவளியைக் கொண்டாடுவேன். மனசுக்கு ரொம்ப சந்தோஷமாக இருக்கும் தெரியுமா! அப்புறம் ரொம்ப நாளா நான் பண்ண நினைச்சது இது- அதாவது மகாலிங்கபுரம் ஐயப்பன் கோவில்ல இருந்து ஒரு தாயத்து வாங்கிக் கட்டப் போறேன். எல்லாம் நல்லதா நடக்கவும், பாதுகாப்பா இருக்கவும்தான் அந்த கேரள தாயத்து. வேறென்ன, ஐ லைக் தீபாவளி வேகெம் வெரி மச்!

**பாஸ்கி**

***தீபாவளி அன்றைக்கு டி.வி. சிறப்பு நிகழ்ச்சிகள் பார்ப்பதுண்டா.***

ஐய்யய்யோ.. சத்தியமா மாட்டேன். 95ம் வருஷம் தீபாவளி சிறப்பு நிகழ்ச்சிகளில் பங்குபெற்ற அதே நடிகர் நடிகைகள்தான் இன்றைக்கும் காஸ்ட்யூம்களை மட்டும் மாற்றிக் கொண்டு, ஒரே மாதிரியான கேள்வி பதில்களோடு பேட்டி தர்றாங்க. வெல், ஆக்சுவலி, யூ ஸீ போன்ற இங்கிலீஷ் வார்த்தைகளைப் பயன்படுத்தக் கூடாது, முன்னால் தொங்கும் முடிக்கற்றையை அடிக்கடி பின்னால் தள்ளக் கூடாது என்றெல்லாம் கட்டளையிட்டால், ஒரு நடிகையும் பேட்டி கொடுக்க வர மாட்டாங்க. நடிகைகள் முடி தள்ளுவதற்காகவே பி.ஏ. கூட வைத்திருப்பதாகச் சொல்கிறார்கள்!

டி.வி. நிகழ்ச்சிகளால் நேரிலோ, ஃபோனிலோ வாழ்த்து சொன்னால் கண்டு கொள்ள மாட்டேன்கிறார்கள் என்பதால், பிரபல சானல்களின் ப்ரைம் டைமில் ஸ்லாட் வாங்கி, டி.வி. வழியாகவே உறவினர்களுக்கு வாழ்த்துச் சொல்ல இருக்கிறேன். தீபாவளி அன்றைக்கு நடு ரோட்டில் வெடி வைத்து பொது மக்களை துன்புறுத்தக் கூடாது என்பதாலேயே, போலீஸ் ஏற்பாட்டின்படியே அன்றைய தினம் டி.விக்களில் பாட்ஷா போடறாங்கன்னு நினைக்கிறேன். அப்பத்தானே யாரும் வீட்டை விட்டு வெளியேறாம வெடி வைக்க மாட்டாங்க. இந்த பாட்ஷா, சிங்காரவேலன், மைக்கேல் மதன காமராஜன் படங்களெல்லாம் டி.வியிலேயே 175 நாட்களெல்லாம் ஓடியிருக்கும். (நவம்பர் 11 அன்று பொதிகையில் டி.வி சீரியல்களை கிண்டலடித்து பாஸ்கி நாடகமொன்றை வழங்கவிருக்கிறார்.)

**ஷாலினி:**

***தீபாவளி அன்று பட்டாசு கொளுத்துவீர்களா?***

அப்பா பஞ்சாபி, அம்மா கிறிஸ்டியன். ஆனாலும் நான் 11வது படிக்கும் வரை தவறாம தீபாவளியை வெடிச்சத்தங்களோடு கொண்டாடிட்டிருந்தேன். ஆனா அப்போ எங்க ஸ்கூலுக்கு சிவகாசியிலிருந்து ஒரு சமூக சேவை அமைப்பு வந்து குழந்தை தொழிலாளர்கள் அனுபவிக்கும் கொடுமைகளைக் கூற, அப்படியே உருகிப் போய் அன்றையிலிருந்து தீபாவளி அன்னைக்கு பட்டாசு வெடிக்கிறதையே விட்டுட்டேன். வீட்லயும் 'பரவாயில்லையே பொறுப்பான பொண்ணா விட்டா'ன்னு கண்டுக்கல. ஆனா போன வருஷம் கஸின்ஸ் நிறைய பேர் வந்ததால கொஞ்சமா பட்டாசு வெடிக்க மத்தாப்பு கொளுத்தினேன். கஸின்ஸ் வரலைன்னா இந்த முறையும் பட்டாசு வெடிக்க மாட்டேன். போன வருஷத்தை விட இந்த முறை நூறு பாட்டு தமிழ்ல பாடினதால கூடுதல் சந்தோஷம்.

**ஸ்ரேய்யா**

**(மிஸ் சவுத் இந்தியா):**

***தீபாவளி படங்களில் எது ஜெயிக்கும்?***

அஜித் நடிச்ச டூயல் ரோல் படங்கள் எல்லாமே அட்டகாசமா வந்திருக்கு. அதே எதிர்பார்ப்பு 'அட்டகாசம்' படத்துக்கும் உண்டு. ட்ரெயிலர் பார்த்தேன். காமெடியா, துள்ளலா இருக்கு. எனக்குப் பிடிச்ச அஜித் இந்த முறை ஜெயிக்கணும்ங்க. அப்புறம் இதுவரை சிம்பு நடிச்ச எந்தவொரு படமும் சூப்பர் ஹிட்டாகல. அந்தக் குறையை மன்மதன் போக்கும். ட்ரெயிலர் செம கலக்கலா இருக்கு. யாரா குப்தா? அம்மாடி! 'காக்க காக்க'வை விட இதுல ஜோதிகா கண் மையைக் குறைச்சு ரொம்ப இளமையாயிருக்காங்க. மற்ற படங்கள் பற்றி அவ்வளவா தெரியாது. ஆனா இந்த இரண்டு படங்களும் நிச்சயம் ஜெயிக்கணும். பர்ஸ்ட் டே, பர்ஸ்ட் ஷோ என் சாய்ஸ் மன்மதனும் அட்டகாசமும்தான்.

✍ எழில், முகில்

# பட்டாசு பாட்டுப் பாடுமா?!



எழுத்தாணி

அப்பொழுதெல்லாம் சில வெடி சீனாவிலிருந்தே வந்ததாக இருக்கும். அப்படிப்பட்ட சில வெடி உருளைகளைத்தான் தீபாவளிக்காக சிறு வயதில் அசோகமித்திரனுக்கு வாங்கிக் கொடுத்திருக்கிறார் அவருடைய அப்பா.

'இது என்ன வெடி?' என்று அப்பாவிடம் கேட்க, 'இது பாடும் வெடி' என்ற பதில் கிடைத்திருக்கிறது. அசோகமித்திரனால் ஆச்சர்யத்தை அடக்க முடியவில்லை. அதெப்படி வெடி பாடும்? அப்படியே பாடினாலும் என்ன பாட்டுப் பாடும்? ஒருவேளை சீனாவிலிருந்து வந்ததால் சீனப் பாடல்கள் பாடுமோ? அவருக்கு ஒரே குழப்பம். வீட்டில் யாரும் அந்த வெடியைப் பற்றி நினைக்கவில்லை, அசோகமித்திரனைத் தவிர.

'பரவாயில்லை, சீனர்கள் கெட்டிக்காரர்கள்தான்' என்று நினைத்துக் கொண்டார் அவர். இல்லையென்றால் ராம லீலாவைப் போல் பெரிதாக இல்லாமல், சிறியதாய் திரியை மட்டும் வைத்து எவ்வளவு அற்புதமாக அந்த வெடியை வடிவமைத்திருக்கிறார்கள். இதற்கு பிரத்தியேகத் திறமைகள் வேண்டாமா? சீனர்கள் மகாத்திறமைசாலிகள். சந்தேகமேயில்லை.

தீபாவளி வெடியை தீபாவளி அன்றுதான் வெடிக்க வேண்டும் என்பது பெரியவர்களின் குழந்தைத் தனமான நம்பிக்கை. வெடிகளையும் வாங்கிக் கொடுத்துவிட்டு 'அதை எடுக்காதே இதை வெடிக்காதே' என்று மிரட்டியும் வைத்து அப்பப்பா! தீபாவளி வரும்வரை குழந்தைகளுக்கு இருக்கும் தவிப்பு யாருக்கும் தெரிவதில்லை.

ஒருவழியாக தீபாவளியும் வந்தது. வேடிக்கை பார்க்க மழையும் கூடவே வந்துவிட்டது. பாடும் வெடியிலிருந்து ஒன்றை எடுத்து செங்கலில் வைத்தாகி விட்டது. அசோகமித்திரனுக்கு தானே வெடியை கொளுத்த வேண்டும் என்ற ஆசை. ஆனாலும் முடியவில்லை. அவர் கைகளில் நடுக்கம், பயம். கடைசியில் அவர் அப்பா தான் வெடியை பற்ற வைத்தார். அது என்ன பாட்டு பாடும் என்று கூர்மையாக கவனிக்கத் தொடங்கினார் அசோகமித்திரன். அதற்கு பின்பு நடந்ததை இப்படி குறிப்பிடுகிறார் அவர்.

"பாட்டுக்காகக் காத்திருந்தேன். அது மிகவும் லேசாக வெடித்து முடிந்தது. மற்ற உருளைகளும் வெவ்வேறு அளவுக்கு வெடித்து சிதறின. வெடி பாடாததை யாரும் பொருட்படுத்தவில்லை. எனக்கு மட்டும் ஏமாற்றமாக இருந்தது. பாடாத வெடி அவருக்கு ஏமாற்றத்தை மட்டும் அளிக்கவில்லை. ஒரு மிகப் பெரிய வஞ்சகமான செயலாகவும் தோன்றியது.

✍ மருதன்





• சீனுவாசன் - ராமன்


• சௌந்தரராஜ்

சென்னை மக்களுக்கு நித்ய வேதனைகள் லிஸ்டில் முதலிடத்தில் இருப்பது போக்குவரத்துச் சிக்கல்கள்தாம். இதற்காக நித்தம் ஒரு தீர்வு பல்வேறு தரப்பினரிடமிருந்து தரப்பட்டாலும், பொது மக்களின் ஏகோபித்த வரவேற்பினைப் பெற்றது புறநகர் ரயில் போக்குவரத்து மட்டுமே. இந்த அளவுக்கு ரயில் மீது விருப்பம் ஏற்பட்டதன் காரணம் பேருந்துகளில் பயணிக்கும் போது அனுபவித்த அவஸ்தைகள், சிக்னல் சிக்கல்கள், குழிகளாகவும், மேடு - பள்ளங்களாகவும் மட்டுமே காட்சியளிக்கும் சாலைகள் - இவற்றைக் கண்டு மிரண்டு போனதுதான். இதைப் புரிந்து கொண்ட தென்னக ரயில்வே சென்னை மக்களுக்கு அவ்வப்போது சலுகைகள் வழங்கும். அப்படி சமீபத்தில் வழங்கியதுதான் எழும்பூர் தாம்பரம் இடையேயான இரட்டை அகலப்பாதை.

இந்த இருபத்தைந்து கிலோ மீட்டர் நீளம் கொண்ட ரயில் பாதையில் பயணிகளின் வேண்டுகோளுக்கு இணங்க கிட்டத்தட்ட 14 இடங்களில் நின்று செல்ல ஏற்பாடு செய்யப்பட்டிருந்தாலும், குறித்த நேரத்தில் அந்தந்த இடத்தை வந்தடையும் வகையில் வேகம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அதாவது எழும்பூர், சேத்துப்பட்டு, நுங்கம்பாக்கம், கோடம்பாக்கம், மாம்பலம், சைதாப்பேட்டை, கிண்டி, மவுண்ட், பழவந்தாங்கல், மீனம்பாக்கம், திரிசூலம், பல்லாவரம், குரோம்பேட்டை, சானிடோரியம், தாம்பரம் என்று பாதை வகுக்கப்பட்டுள்ளது. சாதாரண சமயங்களில் 15 நிமிடத்திற்கு ஒருமுறை என்ற அளவிலும், பீக் அவர்களில் 8 நிமிடங்களுக்கு ஒரு முறை என்ற அளவிலும் தினசரி 206 நடைகள் கிட்டத்தட்ட 20 ரயில்கள் இயக்கப்பட உள்ளன. அவற்றுள் நான்கு ரயில்கள் புதியவை. ஏறத்தாழ தொண்ணூறு கோடி ரூபாய் செலவில் அமைக்கப்பட்டுள்ள இந்தப் பாதையில் மின்சார ரயில்களுக்கு வரவேற்பு எப்படி இருக்கும் என்பது குறித்து இத்தகைய அனுபவங்களை ஏற்கெனவே பெற்றுள்ள கடற்கரை ரயில் நிலைய மேலாளர் சௌந்தரராஜ் சொல்கிறார்:

"பொதுமக்கள் மிகுந்த ஆர்வத்துடன் இருக்கின்றனர். அதனால் வரவேற்பு எதிர்பார்த்ததை விடக் கூடுதலாக இருக்கும். ஒவ்வொரு நிறுத்தத்திலும் நின்று செல்லும் நேரம் 30 நொடிகள் என்ற அளவை ஒரு சிலர் அதிகரிக்கச் சொல்கிறார்கள். ஒரு சிலர் அப்படியே இருக்கட்டும் என்கிறார்கள். ஆனால் அப்படியே இருப்பதுதான் எல்லோருக்கும் நல்லது. மொத்தத்தில் எழும்பூர்-தாம்பரம் அகல ரயில் பாதை போக்குவரத்துச் சிக்கலை பெருமளவில் குறைக்கும். அதன் காரணமாக பயணாளிகளின் எண்ணிக்கை உயரும். அந்த வேகத்திற்கு எங்களுடைய சேவையும் செம்மையாக இருக்கும்."

இந்த அகலப்பாதை ரயில்களில் சென்று வரும் பயணிகளான சீனுவாசன் - ராமன் இருவரும் கூறுகையில்,

"நிர்வாகம் நல்லா இருக்கும். டைம்டேபிளை நல்லபடியாக கடைப்பிடிக்கறாங்க. இப்போ நாங்களெல்லாம் இந்த ரூட்டில் சந்தோஷமாக பயணிக்கிறோம். அதுமாதிரி நிச்சயமாக எழும்பூர் - தாம்பரம் ரயில் பாதையில் செல்ல இருக்கும் பயணிகளுக்கு மிகுந்த பயனுள்ளதாக இருக்கும்" என்று சேம்சைட் கோல் போட்டனர்.

துவக்கத்திலேயே குறைசொல்ல வேண்டாம் என்ற நல்லெண்ணத்துடன் கருத்துத் தெரிவித்துள்ளனர் பொதுமக்கள். இந்த ரயில் பாதை சென்னையில் தலைநோவுப் பிரச்சனையான போக்குவரத்துச் சிக்கல்களை ஓரளவுக்கேனும் குறைக்கும் என்றால், நிச்சயமாக இது தென்னக ரயில்வேயால் சென்னைக்கு அளிக்கப்பட்டுள்ள தீபாவளிப் பரிசுதான்!

+ இரா. முத்துக்குமார்

உள்நாட்டுத் தொழில் நுட்பத்தில் ரூ.15 கோடி செலவில் இரு நவீன ரயில்கள் பல்வேறு சிறப்பு வசதிகளுடன் ஐ.சி.எஃப்-ஆல் தயாரிக்கப்பட்டுள்ளன. அதில் தொங்கிக் கொண்டோ, வெளியே காலையோ, கையையோ நீட்டிக் கொண்டோ செல்ல முடியாது. அப்படி நீட்டினால் வண்டியே புறப்படாது. கதவுகள் மூடினால் மட்டுமே வண்டி இயங்கக் கூடிய வகையில், நவீன யுக்திகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அது மட்டுமின்றி தீ பிடித்தால் உடனடியாக எச்சரிக்கை செய்ய அலாரம், பெட்டிகளில் தீப்பிடித்தால் அதுகுறித்து ஓட்டுநருக்கு தகவல்தர ஒலிபெருக்கி வசதி ஆகியன செய்யப்பட்டுள்ளன. இது போன்ற நவீன வசதிகளுடன் இந்த இரு ரயில்கள் தயாரிக்கப்பட்டிருந்தாலும், இவற்றைத் தற்போது பயன்படுத்த வாய்ப்பில்லை என்பதுதான் ஒரே வருத்தம்.

## ஹாய் சென்னை...!

ஃபோக்கஸ் பிரச்னைகள், காலேஜ் புரோகிராம்ஸ், டேஸ்ட், காம்ஸ், கச்சேரி, ஸ்பெஷல் விழாக்கள் என சென்னை ஸ்கேனுக்கு பொருத்தமான விஷயங்களை எங்க போஸ்ட் பாக்ஸ், இன்பாக்ஸ், ஃபோன் ரிசீவர் என எதுக்கும் அனுப்பலாம். [illegible] போடு எங்க டியூப் ரெடி. உங்கள் கற்பனை காதல் கடிதங்களை 'லப் டப் லவ் லெட்டர்' என்று தலைப்பிட்டு அனுப்புங்கள். அடுத்த இதழும் தீபாவளி கொண்டாட்டம்தான்.

முகவரி :
சென்னை ஸ்கேன்,
47NP, ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல்,
சென்னை - 600 032.
ஃபோன்: 22345622, 23, 24
E-mail:chennaiscan@kalkiweekly.com

# கல்கி

ARIGNAR ANNA
CO-OP SILKS
KANCHEEPURAM PURE SILK SAREES

இணைந்து வழங்கும்

# பட்டான போட்டி

குதூகலமான பண்டிகைக் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. சந்தோஷப்பட்டு, இஷ்டப்பட்டு, கஷ்டப்பட்டு, பாடுபட்டு, அல்லல்பட்டு, ஆவேசப்பட்டு, ஆனந்தப்பட்டு, நேசப்பட்டு, அவசரப்பட்டு, கடன்பட்டு பட்டுப் புடைவைகள் வாங்கிக் குவிக்கும் விசேஷ காலம்.

பட்டுப் புடைவை சம்பந்தப்பட்ட உங்களுடைய அனுபவங்களை, முழு நீளத்தாளில் ஒரு பக்கத்துக்கு மிகாமல் எழுதி அனுப்புங்கள். சுவையான அனுபவங்களுக்குப் பரிசுகள் காத்திருக்கின்றன.

முதல் பரிசு : ரூ.5,000/-
இரண்டாம் பரிசு : ரூ.3,000/-
மூன்றாம் பரிசு : ரூ.2,000/-
(பெறுமானமுள்ள பட்டுப்புடைவைகள் பரிசு!)

தேர்வு பெறும் அனுபவங்களுக்கு வழக்கம்போல அன்பளிப்பு உண்டு.

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

கடைசித் தேதி : 23.11.04

அனுப்ப வேண்டிய முகவரி
பட்டான போட்டி, கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

"ஏண்டி, கம்ப்யூட்டர் இன்ஜினியரா ஒரு ஜீன்ஸ், டீ ஷர்ட்னு வாங்காம பட்டுப் புடைவை, அதுவும் அரதப் பழசான கலர், டிசைன் தேடறே. இது உன் மொத மாச சம்பளம்டி, அதுவும் தீபாவளிக்கு வாங்கறே'' பக்கத்தில் ஸ்வேதா இடித்தாள்.

"நீ சும்மா இருடி"

கண்ணிலும் மனதிலும் பதிந்துபோன அந்தக் கலரும், டிசைனும் பட்டதும், எடுத்தாள். நேவி புளூ கலர், மெஜந்தா மாங்காய் பார்டர்.

"பில் போடுங்க, இதுக்கு"

"லூஸு டி நீ" என்ற ஸ்வேதாவை அலட்சியப்படுத்தினாள்.

"பளார்"

''அப்பா'' அலறினாள் குழந்தை மைதிலி, ஒரு கையில் புரோக்ரஸ் ரிப்போர்ட்டையும், மறுகையால் கன்னத்தையும் பிடித்தபடி.

வேகமாக உள்ளே வந்தார் அப்பா. அடித்தவளையும், அடிபட்டவளையும் மாறிமாறிப் பார்த்தார். "என்னடி இது? குழந்தையை அடிச்சுட்டு நீ அழறே?"

கண்களில் நீரோடு பதில் சொல்லாமல் உள்ளே போனாள் அம்மா.

"இல்லப்பா, ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்கினா, தீபாவளிக்கு பட்டுப் பாவாடை தைச்சுத் தர்றேன்னு சொன்னாப்பா. அதான் கேட்டேன்பா''

இப்போது அந்த அறை அப்பாவின் நெஞ்சில் விழுந்தது. சின்ன கம்பெனியில் சின்ன வேலை. கைக்கும் வாய்க்குமே போராட்டம். போனஸ் கேட்டு நடந்த ஸ்டிரைக்கால், இரண்டு மாதம் கதவடைப்பு. கூடிப்போன கடன். மீண்டும் வேலை கிடைத்ததே பெரிய விஷயம்.

பட்டுக்கு எங்கே போவது?

"அழாதேடா, நல்லா படிக்கிறே. படி. நீயே பட்டு பட்டா வாங்குவே, படி."



# முதல் பட்டு!

தேவநாதன்

ஆனால் அந்த தீபாவளிக்கு மைதிலிக் குட்டிக்கு காலையில் ஆச்சரியம் காத்திருந்தது. பட்டுப் பாவாடை, வெற்றிலை பாக்கு, அட்சதையுடன் கொடுத்தாள் அம்மா. குதியலோடு போட்டுக் கொண்டு வந்து, முகம் மலர நின்றாள் மைதிலி, "ஏதும்மா, இல்லன்னு சொன்னியே?"

பதில் அப்பாவிடமிருந்து வந்தது. "அது உங்கம்மாவோட கல்யாணத்துக்கு எடுத்த ஒரே பட்டும்மா. உள்ளயே இருந்தது. அதுக்குப் பிறகு இத்தனை வருஷமா வேற எடுத்துத் தர என்னால முடியலேடா''

மைதிலி குனிந்து பார்த்தாள்.

நேவி புளூ கலர், மெஜந்தா மாங்காய் பார்டர்!

**கா**ஞ்சிபுரத்தின் பெருமை அறிஞர் அண்ணா. அன்னாரது பெயரிலுள்ள காஞ்சிபுரம் அறிஞர் அண்ணா பட்டு கூட்டுறவுச் சங்கம், சமீபத்தில் எடுக்கப்பட்ட கருத்தாய்வின்படி, சிறந்த கூட்டுறவுச் சங்கம் என்ற நற்பெயரைப் பெற்றுள்ளது. இதன் தலைமைப் பொறுப்பிலிருக்கும் எஸ். நாகராஜைச் சந்தித்தோம்.

கூட்டுறவுச் சங்கங்களின் பட்டு விற்பனை நிலையத்தைப் பற்றி விளக்குங்களேன்.

நெசவாளர்களின் நலனுக்காக குறைந்தபட்சம் இருபத்தைந்து பேரைக் கொண்டு ஆரம்பிக்கப்படுவதுதான் பட்டு கூட்டுறவுச் சங்கம் எழுபதுகளில் ஜாதியின் அடிப்படையில் உருவானது. தற்பொழுது கட்சி சார்பு கலந்து, புரட்சித் தலைவி



# பட்டுன்ன

ஜெயலலிதா, கலைஞர் கருணாநிதி, வைகோ என்றும், வரலாற்றுச் சிறப்புமிக்க தமிழர்களின் பெயரிலுமாக தற்பொழுது இருபத்து இரண்டு சங்கங்கள் உள்ளன. அரசாங்கத்தின் நேரடிப் பார்வையில், பிரத்யேக அரசு அதிகாரி



தலைமையில் சீரான அமைப்பாகச் செயல்பட்டு வருகின்றன. காஞ்சிப் பட்டு முந்நூறு வருட பாரம்பரியம் கொண்டது. அதைக் காப்பாற்றி வருகின்றன இந்தக் கூட்டுறவுச் சங்கங்கள்.

பட்டுப்புடைவை கிடைக்கும் என்கிற சிறு குழப்பம் இருக்கும். இங்குள்ள எல்லா கூட்டுறவுச் சங்கங்களுமே, தமிழ்நாடு சிலக் ஃபெடரேஷன் மூலமாக பரிசோதிக்கப்பட்ட பட்டுத் துணிகளை மட்டுமே வாங்குகிறோம். டெண்டர் மூலம் சூரத்திலிருந்து தங்க முலாம் பூசிய அசல் வெள்ளி ஜரிகை வாங்குகிறோம். தரமான பட்டு, அசல் ஜரிகை நெசவு என்பதால் நம்பிக்கையுடன் வாங்கலாம்.

**தனியார் கடைகளில் எண்ணற்ற டிசைன்கள் இருக்கிறதே! அப்படி ஒரு வெரைட்டி உங்களிடம் இருக்குமா?**

எங்களிடம் வெரைடி இருக்காது என்ற தவறான கருத்து மக்களிடையே

# காஞ்சிப் பட்டுதான்!

**தனியார் கடைகளில் பட்டு வாங்குவதற்கும், உங்களிடம் வாங்குவதற்கும் என்ன வேறுபாடு?**

பொதுவாக இங்கு வருபவர்களுக்கு எந்தக் கடையில் வாங்கினால் ஒரிஜினலான



இருப்பது உண்மைதான். சமீபகாலமாக நாங்களும் பல விதமான கண்கவர் டிஸைன்களை உருவாக்கி வருகிறோம். நாங்களே இது தொடர்பான சாஃப்ட்வேர்களை வாங்கி, புதுப்புது டிசைன்களில்



# கதம்ப மாளிகை!

காஞ்சிபுரம் பஸ் நிலையம் அருகிலுள்ள பச்சையப்பன் தெருவில் புதிதாக இரண்டு கோடி செலவில் திறக்கப்பட்டுள்ளது 'ஹூம் வோர்ல்டு' எனப்படும் கதம்ப பட்டு காம்ப்ளெக்ஸ்.

காஞ்சிபுரத்துக்கு ஜவுளி எடுக்க வருபவர்களுக்காகவே இருபத்திரண்டு பட்டு கூட்டுறவு சங்கங்களும் ஒரே கூரையின் கீழ் தனித்தனியே தத்தம் கடைகளை நிறுவியிருப்பதுதான் இதன் சிறப்பம்சம்.

எங்கு திரும்பினாலும் விதவிதமான அரசியல் தலைவர்கள் பெயரிலும் சுதந்திரப் போராட்ட, தமிழறிஞர்களின் பெயர்களிலும் சங்கப் பலகைகள் தென்படுகின்றன.

இதுபோன்ற ஹூம் வோர்ல்டு காம்ப்ளெக்ஸ், சென்னை, ஈரோடு, கோவை, திருச்சி போன்ற நகரங்களிலும் உள்ளன.

**- எழில்**

---

ஆர்வம் செலுத்துகிறோம். நமது அரசாங்கமும், அகமதாபாத்திலுள்ள தேசிய வடிவமைப்புக் கழகத்துக்கு ஐம்பது லட்சத்துக்கு ஒரு திட்டம் கொடுத்துள்ளது. வருகிற தீபாவளிக்கு முந்நூறு புது டிசைன்களை இதன்மூலம் அறிமுகப்படுத்த உள்ளோம்.

கல்யாணம், முகூர்த்தப் பட்டு என்றால் சொஸைட்டிகளில் வாங்க வருகிறார்கள். அன்பளிப்புக்காகத் தருகிற பட்டுப் புடைவைகள் என்றால், மிகக் குறைந்த விலையில் தனியார் கடைகளில் வாங்கி விடுகிறார்கள்.

**தனியார் கடைகளில் விலை குறைவாக இருப்பது ஏன்?**

இது உண்மையில்லை. அவர்களது தரத்துக்கு ஏற்ற விலைதான் நிர்ணயிக்கிறார்கள். தரமுள்ள பட்டுப் புடைவையை எப்படி மிகக் குறைந்த விலையில் கொடுக்க முடியும்?

**அண்ணா கூட்டுறவுச் சங்கத்தில் பட்டுப்புடைவை வாங்க காஞ்சிபுரம் தான் வரவேண்டுமா?**

எங்களுக்கு மதுரை, சென்னை, கோவை, ஈரோடு போன்ற நகரங்களில் கிளைகள் இருந்தாலும், அங்கெல்லாம் ஒரு கோடி ரூபாய் அளவுக்கே ஸ்டாக் இருக்கும். ஆனால் தலைமைக் கழகமான காஞ்சிபுரத்துக்கு வந்தால், எட்டு கோடி மதிப்பில் ஆயிரக்கணக்கான புடைவைகளை நீங்கள் தேர்ந்தெடுக்க முடியும். மற்றபடி எங்கு எடுத்தாலும் ஒரே தரம் தான். ஒரே விலைதான். வித்தியாசமே இருக்காது.

**உங்களது தனிச்சிறப்பு என்ன?**

முகூர்த்தப் பட்டுப் புடைவைகள் தான் கூட்டுறவுச் சங்கங்களின் தனிச் சிறப்பு. முப்பதாயிரத்துக்கும் அதிகமான மதிப்புள்ள முகூர்த்தப் புடைவைகளுக்கு எப்பொழுதும் டிமாண்ட் இருக்கிறது. அதேபோல ஐயாயிரத்துக்கும் குறைவான பட்டுப்புடைவைகளும் வேகமாக விற்பனையாகின்றன.

பேட்டி, படங்கள் : **ச.ந.கண்ணன்**



# எடுத்த கை சிவக்குதா?

"தரமான பட்டு, அசல் ஜரிகையை எப்படிக் கண்டு பிடிப்பது?" என்று நாயுடு ஹால் உரிமையாளர் சுசிலாவிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார், பட்டுப்புடைவை வாங்க வந்திருந்த மாடலிங் தங்கை ஜனனி பார்த்தசாரதி. இதோ சில டிப்ஸ்..!

* எடுத்த கை சிவக்கணும்' பாங்க! அதாவது தரமான பட்டு, கனமா இருக்கும்.

* இயற்கையான மினுமினுப் போடு, நெசவில் ஒரு பாந்தம் தெரியும்.

* இழையைப் பார்த்தீங் கன்னா, சிங்கிள் நூலா இல்லாமல், முறுக்கா இருக்கும்.

* புடைவையின் முந்தானை யைப் பரிசோதித்தாலே நெசவின் தரம் தெரிஞ்சுடும். கோத்து வாங்கின தலைப்பாக இருக்கக் கூடாது. சேர்த்த இடமே தெரி யாமல் நெய்வதுதான் தரமான நெசவு டெக்னிக்!

* ஜரிகையும் அப்படித்தான். கண்ணைப் பறிக்கக் கூடாது. ஆனால் மென் மையான மினுமினுப்பு இருக்கணும். பித்தளை ஜரிகை, மஞ்சள் ஷேட் அடிக் கும். வெள்ளி ஜரிகை, தங்க நிறத்தில் இருக்கும்.

* நம்பகமான கடைகளில் பட்டுப் புடைவை வாங்குறவங்க, தரத்தைப் பற்றிக் கவலையே பட வேண்டாம். விலையும் நியாய மாக இருக்கும். தரமும் உயர்வாக இருக்கும்.



அட்டை, படங்கள் : **யோகா**

**சரோஜா ரகுபதி :** *(உள்துறை இணை அமைச்சர் ரகுபதியின் மனைவி)*

நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் மலேசியாவில்... 1978ம் வருடம் குழிப் பிறையில் எங்கள் திருமணம் நடந்தது. பெரியவர்கள் நிச்சயித்த திருமணம்.

அப்போது என் கணவர் சட்டக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். நானும் மலேசியாவில் படித்துக் கொண் டிருந்தேன். அதனால் திருமணம் முடிந்து பதினைந்தே நாளில் மலேசியாவுக்குச் செல்ல வேண்டிய நிலை.

அப்போது என் கணவர், எனக்காக தேடித்தேடி ஒரு புடைவை வாங்கி வந்தார். கிளிப்பச்சை நிறத்தில் பட்டுப் புடைவை. அன்னப்பட்சி பார்டர் போட் டது. பார்க்கவே அவ்வளவு அருமையாக இருக்கும்.

அவர் எனக்கு அளித்த அந்த முதல் அன்புப் பரிசை இன்னமும் பொக்கிஷமா பாதுகாக்கறேன். எடுத்துக் கட்டினா உதிர்ந்திடுமோ என்கிற நிலையில்தான் அந்தப் புடைவை இருக்கு!

• சதா

# மனசுக்குப் பிடிச்சது!







இனிய நினைவுகளைத் தருவதால் ஆசையாக வைத்திருக்கிறேன்.

**ரேவதி :** *(சன் டி.வி.)*

எப்போ பட்டுப்புடைவை உடுத்தினாலும் 'நீ மகாலட்சுமி மாதிரி இருக்கே'ன்னு மெச்சிக்குவாங்க. 'வணக்கம் தமிழகம்' விழா நாட்களில் ஒளிபரப்பாகும்பொழுது பட்டுப்புடைவை தான் உடுத்திக்குவேன். தீபாவளி, பொங்கல், என் பிறந்த நாள் இந்த மூணு சமயத்திலயும் எனக்கு

படம் : ரெயின்போ ஆனந்த்



• சரோஜா ரகுபதி

பட்டுப்புடைவை பரிசா வீட்டிலிருந்து கிடைச்சுடும். கறுப்பு நிறப் பட்டுப் புடைவையில ஆரஞ்சு பார்டர் போட்டது எனக்கு ரொம்ப பிடிக்கும்னாலும் கறுப்புப் புடைவைக்கு எப்பவுமே வீட்ல தடாதான். சென்டிமெண்டா சரிவராதாம்.

**மமதி** *(விஜய் டி.வி.) :*

நான் எப்பவும் அஹிம்சா பட்டுதான் உடுத்திப்பேன். தூங்கிக் கிட்டிருக்கிற பட்டு பூச்சியைக் கொல்றது பாவமில்லையா? கொடிலிருக்கிற மலர்களைப் பறிச்சுத் தலையில வைப்பதுகூட பிடிக்காது எனக்கு. வாடினாலும் அது கொடியில்தான் வாடி உதிரணும்னு நினைப்பேன்.

**நித்யஸ்ரீ :**

எங்க பாட்டி பேரே பட்டம்மாள். அவங்க ஊரும் காஞ்சிபுரம். அதனால பட்டுக்கும் எங்கக் குடும்பத்துக்கும் சென்டிமெண்டா நிறையப் பிணைப்பு இருக்கு. ஒரு முறை யு.எஸ். ஏர்போர்ட்டில் என்னை செக் செய்யும்பொழுது எங்கு அந்தக் கருவியை வைத்தாலும் 'பீப்' ஒலியில் சத்தமிட்டதைப் பார்த்து அரண்டு விட்டார்கள். பிறகு ''இது பட்டுப்புடைவை. ஜரிகைகளில் தங்கம் கலந்திருக்கும்'' என்றவுடன் வாவ் என வாயைப் பிளந்து சோதனை செய்த அமெரிக்க, பெண்மணிப் பல பெண்களை அழைத்து என் பட்டுப் புடைவையைக் காண்பித்தார். என் கணவருக்கு மெரூன் கலர்தான் பிடிக்கும். எனக்கு பனிச் நிறப் பட்டுப் புடைவைகள் பிடிக்கும். இன்றைக்கு என் குழந்தை தேஜஸ்ரீயை பட்டுக்குட்டி, பட்டுக் குட்டி என்றுதான் கொஞ்சுகிறேன் என்றால் எனக்கு பட்டு எவ்வளவு பிடிக்கும்னு தெரிஞ்சுதா?

**சதா :**

பள்ளிப்படிப்பு முடிச்சதும், ஃப்ரெண்ட்ஸ் எல்லாம் சேர்ந்து புடைவையில் ஃபோட்டோ எடுத்துக்க ஆசைப்பட்டோம். அதற்காகவே, மஞ்சள் நிறத்தில் அரக்கு பார்டர் போட்ட பட்டுப் புடைவையை வாங்கினேன். அதுதான் நான் வாங்கிய முதல் பட்டு... அதைக் கட்டி எடுத்த ஃபோட்டோவைப் பார்த்துதான் சினிமா வாய்ப்பும் வந்தது. 'மகா பாரதம்' டி.வி. சீரியலில் துகிலுரியும் காட்சியில், திரௌபதி உடுத்திய மஞ்சள் நிற புடைவை போன்றது அது. எனக்கும் ராசியாகி உதவியது.

**- கண், சோம்ஸ்**

Follicle Laser

Beauty Sans 'air



பாதுகாப்பான லேசர் சிகிச்சை

பக்க விளைவுகள் இல்லை! வலி இல்லை! தழும்பு இல்லை! தேவையற்ற முடிக்கு நிரந்தர தீர்வு

இந்தியர்களின் தோல்வாகுக்கு ஏற்ற வகையில் பல்வேறு சோதனைக்குப் பிறகு அமெரிக்காவைச் சேர்ந்த 'லேசர் ஸ்கோப்' நிறுவனம் தயாரித்த 'லீரா' லேசர் மூலம் தேவையற்ற முடி வளர்ச்சிக்கு நிரந்தர தீர்வு பெற உடனே அணுகுங்கள்.

Laser Hair Removal



BEFORE



AFTER

முடி உதிர்தலுக்கு லேசர் சிகிச்சை மூலம் நிரந்தர தீர்வு

BEFORE



AFTER



தீபாவளி சிறப்பு சலுகை 30%

FollicleLaser

எண்.16, ஜெகந்நாதன் தெரு,
(லிஸ்ட்டர் லாப் எதிரில்),
(ஹோட்டல் கணபத் எதிரில்)
நுங்கம்பாக்கம், சென்னை - 34.
போன்: 28216316, 6332

தைராய்டு மற்றும் ஹார்மோன் குறைபாடு உள்ளவர்களுக்கு டாக்டர்களின் மேற்பார்வையில் சிறப்பு சிகிச்சை.

# உயர்தர காஞ்சிபுரம் பட்டுப் புடவைகள்




உண்மையான தள்ளுபடி விலையில்

Sri Palam Silk Sarees

PONDY BAZAR







ஸ்ரீ பாலம் சில்க் சாரீஸ்

Look Trendy in Silk

115, பாண்டிபஜார்,
முதல் மாடி,
பாத்திமா ப்ளாசா எதிரில்
தியாகராயர் நகர்,
சென்னை - 17
☎ : 24323334



# செம ஜாலி தங்கக் குருவி

முன்பெல்லாம் கலைநயத்துடன் உருவாக்கப்பட்ட மென்மையான விளம்பரங்கள், சினிமா பாணி ஜிங்கிள்ஸும், குதியாட்டங்களுமாய் இன்றைக்கு ஆர்ப்பாட்டமாக அலறுகின்றன. ஏன் இந்த திடீர் மாற்றம்?

ஒரு கட்டத்துக்கு மேல் இது அலுத்து விடாதா? சினிமாப் பாடல்கள் போல் இவையும் நாளடைவில் மலினப்பட்டு விடுமா? ஏராளமான கேள்விகளுடன் விளம்பரப் படமெடுக்கும் இரண்டு முன்னணி இயக்குநர்களைச் சந்தித்தோம்.

**தினேஷ்:** *(சென்னை சில்க்ஸ் 'தீபாவளி செம ஜாலி' விளம்பரத்தின் டைரக்டர்)*

பட்டுக்கு மட்டும் விளம்பரம் எடுத்தா நீங்க சொல்ற மாதிரி மென்மையா, பாரம்பரிய இமேஜ் வர்ற மாதிரி விளம்பரம் எடுக்கலாம். ஆனா, நான் எடுத்த சென்னை சில்க்ஸ் விளம்பரத்தைப் பொறுத்த வரை அது எல்லா துணி வகைக்குமானது.

குழந்தைங்க துணியிலிருந்து, பெரியவங்க டிரஸ் மெட்டீரியல் வரைக்கும் பலதரப்பட்ட ஐட்டங்களுக்கானது. எல்லாத்தப் பத்தியும் விளம்பரத்துல நாம சொல்லியாகணும். இந்த விஷயங்களெல்லாம் கவனத்துல எடுத்துட்டு செய்யும்போது, தனியா கிளாசிக்கா செய்தா எடுபடாது. மேலும் இன்னிக்கு இருக்குற டிரெண்ட்டுக்கு ஏத்த மாதிரி கொடுக்க வேண்டியிருக்கு. அடிப்படையில எனக்கும் இப்படி கும்பல் கும்பலா டான்ஸ் ஆடுறது பிடிக்காதுதான். ஆனா

ஒரு சந்தோஷத்தக் காண்பிக்க, குறிப்பா ஒரு குடும்பத்தோட சந்தோஷத்தக் காட்ட இப்படி எடுத்தாத்தான் சக்சஸ் கிடைக்கும்.

ஆனா ஒண்ணு, தொடர்ந்து இதே மாதிரி எல்லாரும் கும்பல், கும்பலா ஆட்களை வச்சு பண்ணிட்டிருந்தோம்னா, சீக்கிரமே அலுத்துப் போயிடும். ஆனா சினிமாப் பாடல்கள் மாதிரி ரொம்ப மலினப்பட்டுப் போகாது. தப்பான எந்த ஒரு விஷயத்தையும் மக்கள் நிராகரிக்கத் தயங்க மாட்டாங்க.

**ஜேடி-ஜெர்ரி:** *(சரவணா ஸ்டோர்ஸ் 'தங்கக் குருவி சிநேகா' விளம்பரங்களின் இயக்குநர்கள்)*

இந்த மாதிரியான ஆர்ப்பாட்டமான விளம்பரங்களுக்கு பிள்ளையார் சுழி போட்டதே நாங்கதான். இன்னிக்கு இதுதான் ட்ரெண்ட்டா இருக்குங்கறத நினைக்கும்போது, ஒரு விதத்துல சந்தோஷமாகவும் இருக்கு. இன்னொரு விதத்துல வருத்தமாகவும் இருக்கு. நாங்க என்ன பண்றது... க்ளையண்ட்ஸ் கேக்கறாங்க. அதனால தான் இப்படித் தரவேண்டியிருக்கு. இன்னிக்குப் பார்த்தீங்கன்னா, சினிமாப் பாட்டுக்கள் கூட நல்லா வேகமா, ஆட்டம் போட வச்சாத்தான் மக்கள் விரும்பி ரசிக்கறாங்க. அதனால, நாங்களும் அப்படிக் கொடுத்தாத்தான் ரசிக்கறாங்க. ஆனா தொடர்ந்து இதே போல பண்றதுல எங்களுக்கு விருப்பம் இல்ல. வெவ்வேறு வகைல வித்தியாசமா பண்ணத்தான் விரும்புறோம். அதே மாதிரி விளம்பரங்கள் போகப் போக ரொம்ப மோசமா போகவும் வாய்ப்பில்லன்னுதான் தோணுது. ஏன்னா, கூடிய சீக்கிரமே இந்த கான்செப்ட் போரடிச்சுப் போய் மறுபடி எல்லாரும் க்ளாசிக்குக்குத் திரும்பிடுவாங்க பாருங்க.



• தினேஷ்



• ஜேடி-ஜெர்ரி

- மு.மாறன்

படம்: ராஜன்

"உங்க 'வீட்டு' அம்மணியோட, புடைவை மோகம் எப்படி?" என்று சில வி.ஐ.பிகளிடம் கேட்டபோது... எல்லாருமே ஸேம் ஸைட் கோல் போட்டார்கள்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் ஆர். நல்லகண்ணு

"அவங்களுக்கு பட்டுப்புடைவை எடுத்துக் கொடுப்பதில் எனக்கு ஆர்வம் கிடையாது. எனக்குப் பிடிச்சது கைத்தறிச் சேலைகள்தான். பெரும்பாலும் கைத்தறிச் சேலை களைத்தான் வாங்கித் தருவேன். அவங்களுக்கு எது கட்டினாலும் பாந்தமா இருக்கும். நான் எடுத்துத் தரும் எந்தப் புடைவையையும் சந்தோஷமா கட்டிக்குவாங்க.



• நல்லகண்ணு • ரஞ்சிதம்



• மணியம்செல்வம் • ஜனனி

# அவங்க டேஸ்டே தனி!

மீட்டிங் சம்பந்தமா நான் எந்த ஊருக்குப் போனாலும், அந்தந்த ஊர்ல இருக்குற பிரபல கைத்தறிப் புடைவைகளை வாங்கிட்டு வர்றதுண்டு. குடும்பத்தோட போய் அவங்களுக்கு சேலையெல்லாம் அதிகமா வாங்குறதில்ல. ரொம்ப வருஷத்துக்கு முன்னால கைத்தறிக் கண்காட்சி நடந்துச்சு. அப்பதான் முதன்முதலா அவங்களுக்கு சேலை வாங்கித் தந்தேன். அதுக்கப்புறம் அந்த மாதிரி ஒரு வாய்ப்பு கிடைக்கவே இல்ல!"

ஓவியர் மணியம் செல்வம்:

"எங்களோட இந்த முப்பத்தஞ்சு வருஷ தாம்பத்ய வாழ்க்கைல ஒருமுறையோ, இரண்டு முறையோதான் என் மனைவி ஜனனி, என்கிட்ட பட்டுப்புடைவை வேணும்னு கேட்டிருக்காங்க. மத்தபடி விளம்பரங்களைப் பார்த்துட்டு, இந்தப் பட்டு வேணும், அந்தப் பட்டு வேணும்னெல்லாம் அவங்க என்கிட்ட கேட்டதே இல்ல.

பட்டுப்புடைவையை அடிக்கடி கட்ட முடியாது. மேலும் இன்வெஸ்ட்மெண்ட் அதிகம். அதனாலயே அவங்க பட்டுப் புடைவையை அதிகம் விரும்ப மாட்டாங்க. ரொம்ப முக்கியமான விஷேசத்துக்கு மட்டும்தான் அவங்க பட்டுப் புடைவை வாங்கியிருக்காங்க. பத்துக்கும் குறைவாத்தான் அவங்ககிட்ட பட்டுப்புடைவை இருக்கு. பட்டைவிட என் மனைவிக்கு



• ராஜகுமாரன் • தேவயானி



• ஸ்ரீ வித்யா ரமேஷ் •

காட்டன் புடைவைங்க ரொம்பப் பிடிக்கும். ஆனா என்னென்ன விதங்கள்ல பட்டுப் புடவைங்க லேட்டஸ்டா வருதுன்னு ஆர்வத்தோட கவனிப்பாங்க.

**இயக்குனர் ராஜகுமாரன்:**

என் மனைவி தேவயானிக்கு எந்தப் புடைவை கட்டினாலும் அழகா இருக்கும். அவங்க நிறமும், உருவமும் அப்படி! எங்களோட கல்யாணம் திடீர்னு முடிவானது. பத்தே நிமிஷத்துல செலக்ட் பண்ணி செவ்வல்லிப் பூ நிறத்துல ஜரிகையா இழைச்ச புடைவையை வாங்கித் தந்தேன். தேவதை மாதிரி அப்படி ஒரு அழகைத் தந்தது அந்தப் புடைவை. மற்றபடி, காட்டனோ, மைசூர் சில்க்கோ எதைக் கொடுத்தாலும் ஆசையா கட்டிக்குவாங்க. ரொம்ப டேஸ்ட் உள்ளவங்க. புடைவையை வாங்கி அடுக்க மாட்டாங்க. தேர்ந்தெடுத்துதான் வாங்குவாங்க! பர்ஸை காலி பண்ற டைப் கிடையாது.

**ரமேஷ் விநாயகம் (இசையமைப்பாளர்):**

பட்டுக்கு பதிலாக 'ப' பக்கத்துல ஒரு கால் போட்டு 'பாட்டு' பத்தி கேட்டீங்கனா உற்சாகமா இருக்கும். என் மனைவி ஸ்ரீவித்யா புடைவை வாங்கச் சென்றால், காசைக் கொடுத்து விட்டு ஒதுங்கிக் கொள்வேன். அங்கு என் மனைவியிடம் மணிக்கணக்காய் பாடுபடும் சேல்ஸ்மேனின் அவஸ்தையைப் பார்க்க முடியாது. தக்காளி சிவப்புநிற பட்டுப்புடைவையை சீமந்தத்தின் பொழுது வாங்கித்தரச் சொன்னார். இப்பொழுது மகன் பிரணவ் பிறந்தும் அதை வாங்கித் தராததால் மேடம் இன்னும் கோபமாகவே இருக்காங்க.

- ச.ந., மது, ஸ்வரா

மினி மூளையில், மேக்ரோவாக ஒரு ஐடியா உருவானதும், அதை அப்படியே கட்டுச்சோறு போல கட்டிக் கொண்டுபோய், எஸ். எஸ். மியூசிக் பாப் ஸ்டார் பேண்டிடம் (Star Band) அவிழ்த்தோம்.

''ஐயோடா! ஹைதரா

பேண்டுலே மொத்தம் அஞ்சு பேரு! தனியா பிரிச்சிங் கன்னா கேஸ் போட்டுடுவோம். நாங்களும் வருவோம்" என்று அடம்பிடித்து ஒட்டிக் கொண்டார்கள் இரண்டு ஆண்கள். (ஆண்களுக்கு என்ன வர்ணனை வேண்டிக்கிடக்கு?)

# எப்படியிருந்த நாங்க..

• அர்ஜுன்

• பார்கவி

• அனைதா

• ஸ்வேதா

பாதுல இருக்கிற என்னோட ஃப்ரெண்ட்ஸ் செல்ஃப் (?) கூயிஸைட் பண்ணிக்குவாங்க!" என்று அலறினார் பார்கவி பிள்ளை.

''வெரி ஃபன்னியா'' என்று சட்டென்று ஒப்புக் கொண்டார் ஸ்வேதா.

"வொய் நாட்?" என்று துள்ளிக் குதித்தார் அனைதா.

'மூன்று பஞ்சவர்ணக் கிளிகளே போதும்' என்று முடிவு கட்டியிருந்தபோது, "எங்க பாப்

கட்டுச்சோறு ஐடியா கொஞ்சம் வில்லங்கமாக விஷயம்தான்.

லோஹிப் ஜீன்ஸ், ரெயின்போ தலைமுடி, ஸ்டூல் செருப்பு, இளமைச் சிரிப்பு, ஆட்டம் பாட்டம் என மாடர்ன் மத்தாப்புகளாகக் காட்சி தரும் எஸ்.எஸ். மியூசிக்

பாப் ஸ்டார்களுக்கு, ஆறு முழுப் புடைவை (வேஷ்டி) கட்டி அழகு பார்க்கும் ஆசை வந்தது.

“அஞ்சே நிமிஷம். இதோ வந்துடறேன்” என்று விரைந்த அனைதா, கடியாரத்தின் பெரிய முன் இரண்டு ரவுண்டு

ஹெவி பட்டுப்புடைவைன்னா ஓடியே போயிடுவேன். மென்மையாக உடலைத் தழுவி, மிதந்து தவழும் புடைவைதான் என்னோட சாய்ஸ்” என்றார் அனைதா. ‘அனைதா’ என்றால் பார்ஸி மொழியில் ‘தூய்மை’ என்று அர்த்தமாம்.




சுற்றி முடித்தபோது, எதிரே பிரசன்னமானார்.

மினி ஸ்கர்ட்டும் டாப்ஸும் காணாமல் போயிருக்க, ஓணம் பண்டிகையில் காணாமல் போன மலபார் குட்டியாக வந்து நின்றார்.

“எனக்குப் புடைவை கட்டி ரொம்ப பழக்கமில்லே. கல்யாணம், விசேஷம்னா, அம்மாக்கிட்டே ஆசையா கட்டிக்குவேன். நான் சின்னப் பெண்ணாக (இப்ப மட்டும் என்னவாம்!) இருந்தபோது, டவலை எடுத்து புடைவை போல சுற்றிப்பேன். இப்பவும் புடைவை கட்டிக்க ஆசைதான். ஆனால், பட்டையா ஜரிகை போட்ட

டிவைடட் ஸ்கர்ட்டில் மாநிற முயலாய்ப் புன்னகை செய்துக் கொண்டிருந்த பார்கவிபிள்ளை, அடுத்த பத்தாவது நிமிஷமே கனத்த ஜரி புடைவையில் பதவிசாக வந்து நின்றார்.

“ஏதோ வேற்று கிரக மனுஷியைப் பார்க்கற மாதிரி ஸ்டுடியோவுலே முறைக்கிறாங்க. எனக்கு புடைவை நல்லா இல்லியா?” என்று எல்லோரிடமும் கேட்டுக் கொண்டேயிருந்தார். நழுவி நழுவி விழுந்த பார்கவியின் முந்தானையைச் சரி செய்துவிட, சுற்றி ஒரு டீமே இயங்கியது.

“ஜீன்ஸ், ஷாட்ஸ்லே நான் ரொம்ப சௌகரியமா இருப்பேன். புடைவையும்

பிடிக்கும்தான். ஆனால் ப்ளெயின், டிஸைனர்ஸ் சாரீஸ்தான் கட்டிக்குவேன்" என்றார். பார்கவியைப் பற்றி இன்னொரு தகவல். இவர் தெலுங்கு சினிமா உலகில் மிகப் பிரபலம். 'சந்தோஷம்', 'பேக் பாக்கெட்' போன்ற படங்களில் பாடியிருக்கிறார். கிளாசிகல் வெஸ்டர்ன் என கலந்தடிச்ச கலக்ஸ்.

முரட்டு ஜீன்ஸ், புரட்டு சட்டை, செம்பு வளையல், தடி செயின் என படு லோக்கலாக இருந்த பென்னி தயாள், நம்முடைய பொறுமையைச் சோதிக்கவில்லை. 'சடக்' என்று காஸ்ட்யூம் மாற்றிக் கொண்டு வந்து விட்டார். "வேட்டியே கட்டறதில்லே. அதிலும் பட்டு வேஷ்டி நோ சான்ஸ்! உங்களுக்காக கட்டறேன். ஆனால் என் பர்ஸனாலிடிக்கு எதுவுமே நல்லாதான் இருக்கு" என்று தாடியைச் சொரிந்து ஸ்டைலாக லுக் விட்டவரை, "டோண்ட் லுக் கான்ஸ்டிபேடட் யா" என்று கேரோ செய்து துரத்தினார்கள். பென்னிக்கு பாட மட்டுமல்ல; ட்ரம்ஸ் வாசிக்கவும் தெரியும். ஹரிஹரன், சங்கர் மகாதேவனின் நிரந்தர ஏ.வி.யாம்.

அடுத்து தயாரானவர் அர்ஜுன். "ஃபன்னியா போஸ் தர்றேன்" என்று ஃபோட்டோகிராபரிடம் சொன்னதைக் கேட்டு, "கேஷுவலா இருந்தாலும் ஃபன்னியாதான் இருப்பே. மெனக்கெட்டு போஸ் தராதே!" என்று கலாய்த்தார்கள்.

"வேஷ்டி, கைலி, பஞ்ச கச்சம், பிள்ளையார் துண்டு எல்லாமே கட்டிக்குவேன். கரூரில் இன்ஜினியரிங் படிக்கிறேன். அம்மா காயத்ரி பஜன் சிங்கர். அப்பா சசிதரன் மேனன் புல்லாங்குழல் கலைஞர். எனக்கு பாப், மாடர்ன்ராக், ராப் எல்லாமே அத்துப்படி" என்றவர், பட்டு மாமிக்கு ஏற்ற கிட்டுமாமாவாக, பார்கவியுடன் சேர்ந்து போஸ் கொடுத்தார்.

'பேக்அப்' சொல்லும் சமயத்தில் மூன்று விரல்களைக் காட்டிக் கொண்டு ஓடோடி வந்தார் ஸ்வேதா, "நாமமா? யாருக்குப் போட்டே?" என்று நண்பிகள் போட்டு ஓட்ட, "இந்த கூர்கி புடைவை கட்டிக் கொண்டு மூன்று முறை தடுக்கி விழுந்தேன்" என்று அபிநயத்துக்கு விளக்கம் தந்தார்.

"எனக்கு பதினேழரை வயசுதான் ஆகுது. இப்ப யாராவது பாட்டி மாதிரி புடைவை கட்டுவாங்களா? ஆனால் அம்மாவுக்கு புடைவையை நான்தான் செலக்ட் செய்வேன். நாளைக்கு அம்மாவுடைய அலமாரியின் குத்தகைக்காரி நான்தானே!" என்றார். ஸ்வேதா, சென்னை சௌந்தர்யம். எதிராஜில் அட்வான்ஸ்ட் ஜுவாலஜி அண்ட் பயோடெக்னாலஜி என்ற நவீனப் படிப்பு படிக்கிறார்.

"இளைஞர்களை என்டர்டெயின் பண்றது இலேசுப்பட்ட காரியமில்லை. அதுல தனி கிக் இருக்கு. அடுத்து வரப் போற எஸ்.எஸ். மியூசிக் ஆல்பத்தைக் கேட்டுப்பாருங்க. 'நினைத்தாலே', 'மலரே', இஃப் யூ வாண்ட்'னு பாட்டெல்லாம் தூளா இருக்கும்" என்று சிலாகித்தார்கள்.

சந்திப்பின்போது, பூனை போல சுத்தியும், நரி போல ஊளையிட்டும் ஊக்குவித்துக் கொண்டிருந்த, குறும்பு டீமுடன், சாதுவாகப் பேட்டி கொடுத்த பாப் ஸ்டார்களும் சேர்ந்து கொண்டு கடைசியாகப் போட்ட ஆட்டம் இருக்கே... சரியான கும்தலக்கா கும்மாதான்!



• குறும்பு டீம்

- ஐஸ்

அட்டை, படங்கள் : ஸ்ரீஹரி



# பட்டு டெஸ்ட்!

அண்மையில் சென்னையில் நடந்த கலெக்டர்கள், காவல் துறை மாநாட்டில், முதல்வர் முன்னிலையில், பெருகிவிட்ட போலிப் பட்டு விற்பனை குறித்து முறையிடப்பட்டபோது, பிறந்ததுதான் இந்த் தீர்வு. கைத்தறித் துறை சார்பாக, காஞ்சிபுரத்தில் வைக்கப்பட்டுள்ள இக்கருவியை, சென்னை உட்பட இதர பெரிய நகரங்களிலும் வைக்க முதல்வர் ஜெயலலிதா உத்தரவிட்டுள்ளார்.

தற்பொழுது காஞ்சிபுரத்தில் மட்டும் அமைக்கப்பட்டுள்ள இந்த XRF கருவிகள், இன்னும் சில மாதங்களில் தமிழ்நாட்டின் முக்கிய நகரங்கள் அனைத்திலும் நிறுவப்பட உள்ளனவாம்.

''இந்தியாவிலேயே முதன் முறையாக பட்டின் மிக உயரிய அங்கமாய் விளங்கும் ஜரிகையின் தரத்தைச் சோதிக்க எக்ஸ்ரே ஃப்ளோரஸண்ட் என்பதன் சுருக்கமான XRF கருவிகள் நிறுவப்பட்டுள்ளன. பட்டுப்புடைவையைச் செலுத்தினால், அதிலுள்ள லேசர் புள்ளி ஜரிகைமீது விழுந்து பரிசோதிக்கும். எதிரேயுள்ள கணினியில் பட்டுப்புடைவையின் ஜரிகையிலுள்ள தங்கம், வெள்ளி, செம்பு... இவற்றின் அளவுகளை ஒரு நிமிடத்தில் சொல்லி விடும். இதன் அளவுகோலின்படி, ஜரிகையில் தங்கம் 0.56% மற்றும் வெள்ளி 52.5% நிச்சயம் இருக்க வேண்டும்'' என்கிறார் தமிழ்நாடு கைத்தறி மற்றும் ஜவுளித் துறை இணை இயக்குனர் எல். சுப்ரமணியம்.

ஒரு புடைவையைப் பரிசோதிக்க ரூ.30 முதல் 50 வரை வசூலிக்கிறார்கள். மேலே சொன்ன அளவுகள் குறைவாக இருந்தால், உடனே புடைவை மீது போலி என்கிற முத்திரையெல்லாம் குத்திவிடுவதில்லை. இதுஇது இன்னின்ன அளவு என்று சான்றிதழில் குறிப்பிட்டு, வாய்வழியாக மட்டும் அது போலியா அல்லது பட்டான பட்டா என்பதைத் தெரிவித்து விடுகிறார்கள்.

ஒரு நாளைக்கு, சுமார் நூறு புடைவைகள் பரிசோதிக்கப்பட்டால், அறுபது புடைவைகளின் ஜரிகை, தரம் குறைவாக இருக்கிறதாம்.

ஒரு பட்டுப்புடைவையின் விலை தோராயமாகப் பதினைந்தாயிரம் என்றால், அதிலுள்ள பட்டின் மதிப்பு இரண்டாயிரத்தை தாண்டாது. மீதியனைத்தும் ஜரிகையின் மதிப்பைச் சொல்லும்.

இக்கருவி கல்பாக்கம் அணுமின் நிலையத்தினால் கண்டுபிடிக்கப்பட்டது.

- செந்தில்

பொதுவாகவே பெண்களுக்குப் புடைவை சென்டிமெண்ட் அதிகம். "இது ரொம்ப ராசியான ஸாரி, இதைக் கட்டிக்கிட்ட அன்னிக்குத் தான் பரீட்சையில் நல்ல மார்க், இந்தப் புடைவையில் தான் 'அவர்' என்னை பெண் பார்த்து செலக்ட் செய்தார்..." என ஒவ்வொரு புடைவைக்கு பின்னாலும் ஒரு கதையை நெய்து வைத்திருப்பார்கள்.

ராசியான புடைவை விரும்பி அணியும் பெண்களுக்கென ஓர் இனிய செய்தி. அவரவர் ராசிக்குத் தகுந்தாற் போல இனி புடைவை அணியலாம். கர்நாடகா ஹேண்ட்லூம் கார்ப்பரேஷனின் தீபாவளி லேட்டஸ்ட் கலெக்ஷன்தான் ஸோடியாக் சாரீஸ்!

"இந்தப் புடைவைகளைத் தயார் செய்வதற்கு முன், இரவு பகலாக பல மாதங்கள் ஜோதிட சாஸ்திரத்தை ஆராய்ந்தோம். நம் வேத புராணங்களில் சொல்லாதது ஏதும் பாக்கியில்லை. ஒவ்வொரு ராசிக்கெனடிமே பூ, நிறம், மணிக் கற்கள் உண்டு. அதை புடைவையில் கொண்டு வந்தால் நன்றாக இருக்குமே எனத் தோன்றியது. ஜோதிடத்துடன் நிற்காமல் நியூமராலஜியும் படித்தோம். இந்த 2004ம் ஆண்டு வீனஸ் ஆண்டு, அதாவது பெண்களுக்கு சிறப்பு (2+4=6=வீனஸ்) ஆறு மீட்டர் புடைவை. ரவிக்கைத் துணி தனியே தருகிறோம். ப்யூர் சில்க். அதற்கு முழு உத்தரவாதம் உண்டு. பட்டுக்கும் எடை உண்டு. அறுபது கிராம் சில்க் புடைவை தான் இந்த ராசிப் புடைவைகள். இப்போது மேஷ ராசி என்று எடுத்துக் கொண்



டால், ஆழ்ந்த சிவப்பு தான் உகந்த கலர். இதற்குத் தோழமை நிறங்கள் காப்பர், பிங்க், ஆழ்ந்த ப்ரௌன், பொன் மஞ்சள்... போன்றவை. இந்த ராசிக்காரர்களுக்கு பவழம் தான் ராசிக்கல். அரளி, ராசியான பூ. இவை எல்லாவற்றையுமே நாங்கள் புடைவையில் வடிவமைத்திருக்கிறோம். பூக்கள் போடும் போது படு கவனத்துடன் கையாண்டோம். 108 அல்லது 1008 வருமாறு பார்த்துக்



கொண்டோம். 9 என்பது மிக முக்கியமான பவர்ஃபுல் என் (வேறொருவருக்குக் கூட 9 என்பது படு ராசியாச்சே!) ஜோதிடத்தை மையமாக வைத்து, பார்த்துப் பார்த்து புடைவைகளை டிஸைன் செய்திருக்கிறோம்'' என்கிறார்கள் டிஸைனர்கள் கஜேந்திராவும் ஜகன்னாத்தும்.

கஜேந்திராவுக்கு பல வருடங்களாகவே ஜோதிடத்தில் பயங்கர ஈடுபாடு. ஜோதிடத்தை பல வருடங்கள் முனைந்து அதற்கென இருக்கும் கல்லூரியில் படித்திருக்கிறார். இவர்களுடைய இந்த 'ஜோடியாக் ஸாரீஸ்'க்கு பக்கபலமாக இருந்து செயல் வடிவம் கொடுத்தது, கர்நாடகா ஸ்டேட் ஹாண்ட்லூம் கார்ப்பரேஷனின் மானேஜிங் டைரக்டர் மதன் கோபால் ஐ.ஏ.எஸ். மதன்கோபால் ரமண மகரிஷியின் தீவிர பக்தராம்.

புடைவைகளை ப்ரிண்ட் செய்வதற்கு முன்னால், பெங்களூரின் புகழ் பெற்ற ஜோதிடர் கம் வாஸ்து நிபுணர் தெய்விக்ன சோமயாஜியையும் கேட்டு ஆலோசனை பெற்றிருக்கிறார்கள். அவரும் அலசி ஆராய்ந்து உபயோகமான யோசனைகளை வழங்கியிருக்கிறார்.

ராசிக்கு ஒன்றாக பன்னிரண்டு புடைவைகள். ஒவ்வொரு ராசியிலும் ஐந்து கலர் புடைவைகள் கிடைக்கும். விலை ரூபாய் இரண்டாயிரம். இங்கே புடைவை வாங்கினால், உங்கள் ஜாதகத்தை இலவசமாகக் கணித்து கொடுத்துக் விடுகிறார்கள். எந்த மொழியில் வேண்டுமானாலும் என்பது கூடுதல் சிறப்பு.



இங்கிருந்து பக்கிங்ஹாம் அரண்மனைக்கு ஐந்து புடைவைகள் போயிருக்கின்றன வாம். (அடி ஆத்தி!)

"பெங்களூரில் உள்ள எங்கள் ப்ரியதர்ஷிணி ஷோரூமில் மூன்று இடங்களில் மாத்திரமே இப்புடைவைகள் விற்பனை செய்யப்படுகின்றன. இதுவரை சுமார் ஆயிரம் புடைவைகள் விற்றிருக்கின்றன. தற்சமயம் வேறொரு புடைவை நிறுவனம் ராசிப் புடைவைகள் தயாரிப்பதாக டி.வி.யில் விளம்பரம் வருகிறது. எங்களுடையதை காப்பியடித்தாலோ, அல்லது டூப்ளிகேட் செய்திருந்தாலோ சட்டப்படி நடவடிக்கை கண்டிப்பாக எடுப்போம். உங்கள் தமிழ்நாட்டில் ஜோடியாக் புடைவைகளை அறிமுகப்படுத்த படு ஆவலாக இருக்கிறோம்" என்கிறார் சீஃப் மார்க்கெட்டிங் மானேஜர் பகதூர்.

**நா**ம் அல்சூரில் இருக்கும் ப்ரியதர்ஷிணி ஷோரூமில் நுழைந்து ஒவ்வொரு ராசிப் புடைவையையும் ஆராய்ந்தோம். ப்யூர் சில்க் புடைவையில் மிக கவனமாக டிஸைன் செய்யப்பட்ட பூக்கள், கண்ணைக் கவருகின்றன. "இப்புடைவைகளை அணிந்தால், வரன் தட்டிக் கொண்டே போவது, திருமணத் தடை, தோஷம் எல்லாம் விலகி திருமணம் கை கூடும். நல்ல முகூர்த்தத்தில் வாங்கி, அதை நல்ல நேரத்தில் கட்டினால் பலன் நிச்சயம்'' என்கிறார் கஜேந்திரா.

"எல்லாம் சரி... ராசிப் புடைவை என்று அரசு சார்ந்த கைத்தறி நிறுவனமே சொல்லுவது சரியா? மூடநம்பிக்கையை வளர்ப்பது போலில்லையா?"

பட்டுப் புடைவை அணியும்போது தான் ஒரு பெண் மகிழ்ச்சியாகவும் எனர்ஜிட்டிக்காகவும் இருப்பாள். ஏனென்றால் சுப்ரீம் பாஸிட்டிவ் எனர்ஜி அவள் உடலில் பாய்கிறது. இது விஞ்ஞான பூர்வமான உண்மை! மேலும் மக்கள் சந்தோஷமாக அதிர்ஷ்டம் பொங்க இருக்கட்டுமே என நினைப்பது தவறா?'' - ஒரே போடாகப் போடுகிறார் கஜேந்திரா! (சினிமா கஜேந்திராவை விட ரியல் கஜேந்திரா அதிரடி!)

மகம் நட்சத்திர சிம்ம ராசிக்கான புடைவையைப் பார்த்தோம். காப்பர் கலர், இதற்குத் தோழமை நிறங்கள் லைட் பிங்க், சிவப்பு, ஆழ்ந்த ப்ரௌன் மற்றும் மஞ்சள், ராசிக்கல், மாணிக்கம். பூ, செம்பருத்தி. சின்னம் சிம்மம். (யாருக்கு என்று கேட்கும் தொட்டில் குழந்தைகளே... தங்கத் தாரகைக்குத்தான். ராசிப் புடைவை கட்டி இன்னொரு ரவுண்ட் வருவாராக!)

**"ஏ**ங்க இது உங்களுக்கே நியாயமா, யிருக்கா... ஷிபான், ஜார்ஜட், அபூர்வா, செட்டிநாடு... என ஏற்கெனவே 'அவ' ரகளை பண்ணிண்டிருக்கா... இப்ப ராசிப் புடைவையா? எங்க பரிதாப நிலையைப் பார்த்து யாரேனும் ராசி உள்ளாடைகளேனும் தயாரிப்பார்களா?" ஆண்களின் அழுகுரல் கேட்கிறது.

ரிலாக்ஸ்... உங்கள் மனைவி ராசியான புடைவை கட்டிக் கொண்டால் பாதி அதிர்ஷ்டம் உங்களுக்கும்தான்!

- லதா சேகர்



## பூச்சி அங்கே... பட்டு இங்கே!

**பெ**யர் என்னவோ காஞ்சிப் பட்டு. ஆனால் பட்டுப் பூச்சிகள் இங்கு வளர்க்கப்படுவதில்லை. அதன் தட்பவெட்ப நிலைக்குச் சாதகமான கிருஷ்ணகிரி, தர்மபுரி, கோவை, ஓசூர் போன்ற இடங்களில் பட்டுப்பூச்சிகள் வளர்க்கப்படுகின்றன.

- செ





# சின்ட்ரெல்லாவின் பாட்டி!

**எழுத்தாளர் சுஜாதாவின் மனைவி, நிஜ சுஜாதா, ஆர்.எம்.கே.வி.யின் சின்ட்ரெல்லா பாவாடை விளம்பரத்தில் பாட்டியாக நடித்துள்ளார். புதிய அனுபவம் எப்படி?**

"எனக்கு ஆர்.எம்.வி.காரங்க ரொம்ப வருஷமா சிநேகம். அவங்க ராஜீவ் மேனன்கிட்ட வொர்க் பண்ற ரோஷிணி கிட்ட, பாட்டி கேரக்டர்ல நடிக்க, ஹோம்லியா ஆள் வேணும்னு கேட்டிருக் காங்க. திடீர்னு அவங்களுக்கு என் நினைவு வந்திருக்கு. என்னைக் கேட் டாங்க. 'டயலாக் எதுவும் இல்லைன்னா நல்லா இருக்கும்'னு சொல்லி ஒப்புக் கிட்டேன்.

"என்கூட ஒரு சின்னப் பையன், இரண்டு சின்னப் பொண்ணுங்க எனக்கு பேரப் பசங்களா நடிக்க வந்தாங்க. எல்லாருக்கும் மேக்கப் போட்டாங்க. எனக்குக் கொஞ் சம் அதிகமா மேக்கப் போட்டுட்டாங்க. "நான் என்ன ஹீரோயினாவா நடிக்கப் போறேன்? எனக்கு எதுக்கு இவ்வளவு மேக்கப்?"'னு நான் கேட்டதும் டைரக்டர், "அவங்களுக்குப் பிடிக்கலைன்னா விட்டு டுங்க''ன்னு சொல்லிட்டார். அப்புறம் காலைல பதினொரு மணிக்கு ஷூட்டிங் ஆரம்பிச்சாங்க. இரண்டே இரண்டு வசனம் எனக்கு சொல்லிக் கொடுத்தாங்க. இரண்டு பொண்ணுல ஒண்ணு, குஜராத் திப் பொண்ணு. அந்தக் குழந்தையும் தமிழ் டயலாக்கை மனப்பாடம் பண்ணிடுச்சு. ஏற்கெனவே அந்தக் குழந்தை நிறைய விளம்பரங்கள்ல நடிச்சதால, ரொம்ப சுலபமா டயலாக் பேசினா. ஆனா கூட நடிச்ச அந்தப் பையன் ரொம்ப வாலு.

குழந்தைகளை வச்சு விளம்பரம் எடுக் கறது எவ்வளவு கஷ்டம்னு நான் அன்னைக்குத்தான் உணர்ந்தேன் இரண்டு மூணு நிமிஷம்தான் டீவில விளம்பரம் வருது. ஆனா அதுக்குப் பின் னாடி ஒரு சினிமா எடுக்குற அளவுக்கு உழைப்பு இருக்கு. ஒரு குழந்தை டயலாக் நல்லா சொல்லும், அடுத்த குழந்தை சரியான பொசிஷன்ல இருக்காது. இதை சரியா உட்கார வைக்கறதுக்குள்ள, அடுத்தது தலைமுடி யப் பிச்சுக்கும். இன்னொண்ணு அப்பத் தான் லாலிபாப் கேக்கும். வாங்கித் தர லேன்னா சரியா ஒத்துழைப்பு கொடுக் காது. அடம் பிடிக்கும். குழந்தைகளோட அம்மாக்கள் பசங்கள ஸ்பாட்ல விட்டுட்டு, ரூம்ல போய் உக்கார்ந்துக் குறாங்க. அவங்க கூட இருந்தாலும் சிக்கல். அவங்க ஒழுங்கா நடிக்கச் சொன்னா, பயத்துல குழந்தை மிரண்டு டும். செட் டைரக்டர்ஸ் பாடுதான் திண்டாட்டம். பாவம், குழந்தைக்கு அது வாங்கித் தர்றேன், இது வாங்கித் தர்றேன்னு ஆசைகாட்டி அவங்கதான் அதுங்கள நடிக்க வைக்க மெனக்கெடு வாங்க.

என்னோட பகுதி முடிஞ்சு நான் கிளம்ப ராத்திரி பத்து மணியாயிடுச்சு. நானாவது பரவாயில்ல... மும்பைலேர்ந்து வந்து நடிச்ச ஒரு பெண் குழந்தை பாவம் தூங்கியே போயிடுச்சு. அதை எழுப்பி நடிக்க வச்சு, ஒரே கலாட்டாதான் போங்க. அந்தக் குழந்தை ஷூட்டிங் முடிஞ்சு கிளம்ப, ராத்திரி பன்னிரண்டு மணி ஆயிடுச்சுன்னு கேள்விப்பட்டேன். 'அஞ்சலி' படத்தை அத்தனை குழந்தை கள வச்சு மணிரத்னம் எப்படித்தான் எடுத்தார்னு ஆச்சர்யமா இருக்கு."

**- மதுமிதா**

படம் : ராஜன்

# அமெரிக்க மாடல் ஷோரூம்!

"நோம்புக்கு ஜவுளி எடுக்கணும்" என்று குடும்ப சகிதம் ஜவுளிக் கடைக்குள் நுழைந்து, பாயில் உட்கார்ந்து, ஆற அமர பேரம் பேசிய காலம் போயே போச்!

லேட்டஸ்ட் புடைவைகளை ஸ்பெஷல் ஃபோகஸ் லைட்ஸ் வைத்தும், புதிய வரவுகளை பேக் லைட்ஸ் வைத்தும் விளம்பரப்படுத்தும் நவீன உத்திகள் வந்துவிட்டன.

பாரம்பரியப் பட்டுப் புடைவைக்குப் பெயர் திருச்சி சாரதாஸ் நிறுவனத்தினர், இன்னும் ஒரு படி மேலே போய், அமெரிக்கன் மாடல் ஷோருமாகவே நவீனமாக விரிவுபடுத்தியுள்ளார்கள்.

"எங்களுடைய நீண்ட நாள் கனவு நிறைவேறியுள்ளது. இந்த வெற்றியை வாடிக்கையாளர்களுக்கே சமர்ப்பிக்கிறோம். ஷாப்பிங் என்பது வெறும் வியாபாரமாக இல்லாமல், மனதுக்கினிய அனுபவமாக இருக்க வேண்டும் என்பதே எங்கள் விருப்பம். கிட்டத்தட்ட முப்பதாயிரம் சதுர அடியில், கண்ணாடியால் இழைத்து, மின் அலங்காரம் செய்து, வகைவகையாக துணி ரகங்களைக் குவித்திருக்கிறோம். இது, திருச்சி மக்களுக்கு சாரதாஸின் தீபாவளிப் பரிசு" என்கிறார் சாரதாஸின் சென்னைக் கிளை மேலாளர் எஸ். சுந்தர்ராஜன்.

- ஜஸ்



• திருச்சி சாரதாஸ்

# பட்டு பராமரிப்புக்கு பாட்டி வைத்தியம்!

ரேவதி சங்கரன்

"என்கிட்டே ஒரு பீரோ நிறைய பட்டுப் புடைவைங்க இருக்கு. (ஆனா எதுவும் விற்பனைக்கு அல்ல!) ஐம்பது வருஷத்துக்கு முன்னாடி எங்க பாட்டி கட்டிய புடைவைகளைக் கூட பத்திரமா, புதுசு போல வைச்சுருக்கேன். "மூணு வருஷத்துக்கு முன்னாலே காசு கொட்டி வாங்கின புடைவைங்க கூட, ஒரு டிரை வாஷ்லே டிஷ்யூ பேப்பர் மாதிரி கசங்கிடுதுங்க. நீங்க மட்டும் எப்படி இவ்வளவு பழைய புடைவைகளையும் மினுமினுப்பு மாறாம வைச்சுருக்கீங்க?"னு நிறையப் பேர் ஆச்சரியப்படுவதுண்டு. அவங்கக்கிட்டே பகிர்ந்துக்கிட்ட அதே யோசனைகளை, உங்களுக்கும் ஃப்ரீ ஆஃப் காஸ்ட் சொல்லித் தருகிறேன். குறிச்சுக் கோங்க!

★ பிசுபிசுப்புள்ள பூந்திக் கொட்டைகளை கைப்பிடி அளவு எடுத்துக் கொண்டு, வெந்நீரில் ஊறப் போடவும். நன்றாக ஊறியதும் மிக்ஸியிலிட்டு கூழாக்கிக் கொள்ளவும்.

★ ஒரு பக்கெட் நீரில் பூந்திக் கொட்டைக் கூழை சேர்த்துக் கலக்கினால், 'புசுபுசு' என்று நுரை ததும்பும். பட்டுப் புடைவையை நனைத்து முக்கி, பத்து நிமிஷம் ஊற வைக்கவும்.

★ அழுக்கோ, கறையோ உள்ள இடங்களை கைகளாலேயே மென்மையாகத் தேய்க்கவும்.

★ சுத்தமான நீரில் அலசவும். இரண்டு தண்ணீரில் அலசுவது அவசியம் (சென்னைவாசிகள் மன்னிக்க!)

★ முறுக்கிப் பிழியாமல், இலேசாகக் கொசுவி உதறவும். (முறுக்கிப் பிழிந்தால் இழை இத்துப் போகும்... உஷார்!)



• நிழலில், காற்றாட காய விடவும்.

• பார்டர் கீழே வருவதுபோல காய விடுவது உத்தமம்.

• இன்னொரு முக்கியமான கண்டிஷன். வானியில் இரண்டு, மூன்று புடைவைகளை ஒரே சமயத்தில் நனைக்கக் கூடாது. ஏதாவது ஒரு புடைவையில் சாயம் இறங்கினாலும், மற்ற புடைவைகளில் கலர் ஒட்டிக் கொள்ளும். விரட்டினாலும் போகாது. அப்புறம் எவர்சில்வர் பாத்திரக்காரனுக்குப் போட வேண்டியதுதான்.

• சலவைக்குக் கொடுக்கும்போது, மென்மையான அங்கவஸ்திரத்தையும் சேர்த்துக் கொடுக்கவும். எதுக்கு? பட்டுப் புடைவை மீது பரத்தி, இதமான, பதமான சூட்டில் தேய்த்தெடுக்கத்தான்.

• அழகாக மடித்து வரும் புடைவையை, துணிப் பைக்குள் வைத்து, பிள்ளை வளர்ப்பான் அலையஸ் வசம்பைப் போட்டு பீரோவுக்குள் பத்திரப் படுத்துங்கள்.

• 'ராவணன் பூச்சி' என்று யார் நாமகரணம் செய்தார்களோ தெரியவில்லை. பட்டுப் புடைவைகளுக்கு சரியான வில்லன்தான். 'காஞ்சிப் பட்டாச்சே... கொள்ளை விலையாச்சே'னு துளியும் கவலைப்படாமல், இந்தப் பக்க மடிப்புலே சல்'னு புகுந்து, அந்தப் பக்கம் வந்துடும். பட்டுப் புடைவை முழுக்க பொட்டுப் பொட்டாய் ஓட்டைகள்! ராவணன் பூச்சியை அண்ட விடாமல் செய்ய, வசம்பால் மட்டுமே முடியும். சிறு



• பாட்டியுடன் ரேவதி சங்கரன்

சிறு கர்ச்சிப்களில் வசம்பை முடிந்து, பீரோ தட்டுகளில் ஆங்காங்கே போட்டு வைக்க, ராவணன் பூச்சிக்குத் தடா, பொடா, டாடா!

• பட்டுப் புடைவை கட்டிக் கொண்டு வெளியே போய்விட்டு வந்ததும், முதல் வேலையாகக் கழற்றி, காற்றாட ஆறப் போட்டுவிடவும். வியர்வை வாடை போனதும், அயர்னுக்குத் தந்து பத்திரப்படுத்தவும்.

• பட்டுப் புடைவையை பயன்படுத்தாமலேயே பூட்டிப் பூட்டி வைத்தால், அதன் ஆயுசு அம்பேல். அடிக்கடி கட்டி, துவைத்து, பராமரிக்கப்படும் புடைவைகள்தான் நீண்ட காலம் உழைக்கும்.

இதெல்லாம் என்னுடைய பாட்டி ஜானகி சொல்லி, அம்மா செய்து, நானும் கடைப்பிடிக்கும் வழிவழி பட்டுக் குறிப்புகள். தாங்க்ஸ் சொல்லணும்னா, ஜானகி பாட்டிக்குச் சொல்லிடுங்க.

## சில்க் மார்க்!

தற்பொழுது பட்டுப் புடைவைகளை விற்கும் பிரபல ஜவுளி நிறுவனங்கள் தாங்கள் மத்திய அரசிடமிருந்து 'நேச்சுரல் சில்க்' என்கிற தகுதி முத்திரையைப் பெற்றுவிட்டதாக விளம்பரப்படுத்துகின்றன.

SMOI (Silk Marking of India) என்கிற மத்திய அரசாங்க அமைப்பு மூலமாக பத்தாயிரம். ரூபாய் செலுத்தினால் உறுப்பினராகும் தகுதியைப் பெறலாம்.

பட்டுப் புடவையின் மகத்துவமே அதன் ஜரிகையில்தான் இருக்கிறது என்றாலும் இந்த அமைப்பு பட்டின் தரத்தை மட்டுமே பரிசோதித்து முத்திரை தருகிறது.





# கலை நயம் மிகுந்த

‘கலாக்ஷேத்திரா’ என்றாலே இசையும், நாட்டியமும்தான் என்று நினைப்பவர்கள், கருத்தை மாற்றிக் கொள்ளுங்கள்.

பாரம்பரியமான கைத்தறிச் சேலைகளும் இங்கேதான் உருவாகின்றன. பட்டுச் சேலைகள், பருத்திச் சேலைகள், பட்டும் பருத்தியும் கலந்த சேலைகள், துப்பட்டா, தாவணி என்று இங்கே தயாராகும் ரகங்கள் வித்தியாசமானவை.

“இதற்குக் கொஞ்சம் சரித்திரப் பாரம்பரியமும் உண்டு!” என்கிறார் சகுந்தலா ரமணி. “1937ஆம் வருடம் பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் அவர்களுடைய துணிகள் மான்செஸ்டர், லங்காஷயரிலிருந்து கொண்டுவரப்பட்டு இங்கே விற்கப்பட்டன. நம் சுதேசி கலாசாரத்தைப் பிரதிபலிக்கிற சேலைகளைத் தயாரிக்க வேண்டும் என்று, ருக்மிணி தேவியும், அருண்டேலும் இங்கேயே தறியைப் போட, கைத்தறி நெசவுக் கலைஞர்களை தியாசபிகல் சொசைட்டி வளாகத்துக்கு வரவழைத்தார்கள். குறிப்பாக, டாக்டர் அருண்டேலின் உந்துதல் காரணமாகத்தான் இது துவங்கியது. நமக்கு வேண்டிய வர்ணங்களில், இரண்டே இரண்டு தறிகள் போடப்பட்டு சேலைகள் நெய்யப்பட்டன. அப்போது தொழில் அமைச்சராக இருந்த வி.வி.கிரியும் உதவினார். பக்கத்து கிராமங்கள், மயிலாப்பூர்வாசிகள் எல்லோரும் இதில் ஆர்வம் காண்பித்தார்கள்.

# கலாக்ஷேத்ரா சேலைகள்

சி.பி.ராமசாமி அய்யர், டி.என்.எஸ். மணி, 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி, ராம கோடீசுவர ராவ், ராஜாஜி எல்லோரும் ருக்மிணி தேவியின் முயற்சிக்கு ஆதரவு தெரிவித்தார்கள்!" என்றார் கைவினைத்துறைக் கல்வி மற்றும் ஆராய்ச்சி மையத் தலைவி சகுந்தலா ரமணி.

இரண்டு, நான்கு என்று மெல்ல மெல்ல உற்பத்தி அதிகரித்து, பிறகு தியாசபிகல் சொசைட்டி வளாகத்திலிருந்து கலாக்ஷேத்திரா வளாகத்துக்கு வந்தது. கைவினைஞர்கள் வாரியம் இதற்குப் பெரிதும் உதவியதாம்.

அடைசலான சூழலில் வேலை செய்து கொண்டிருந்த கைத்தறி நெசவாளர்களுக்கு, இங்கே காற்றும், வெளிச்சமும் மிகுந்த சூழ்நிலை ஊக்கம் அளித்தது.

இதில் விசேஷம் என்ன?

"ஒரு லூமுக்கு இரண்டு பேர் வேண்டும். முதலில் நீள வாக்கில், பிறகு குறுக்கே தறி போட வேண்டும். இதை காஞ்சிபுரம் கோர்வை என்பார்கள். திறமையான கலைஞர்களாக இவர்கள் இருந்தார்கள். பார்டரில் எப்படி கான்ட்ராஸ்ட்டோ, அதே மாதிரி தலைப்பிலேயும் கான்ட்ராஸ்ட் இருக்கும்!" என்கிறார் சகுந்தலா ரமணி.

இவற்றின் தனித் தன்மை வாடிக்கையாளர்களைக் கவர முக்கியக் காரணம் தரமும் உயர்வாக இருப்பதுதான். நெசவுத்திறன் முத்திரை பதிக்கிறது. "இதை முறுக்குப் பட்டு என்போம். இரண்டு இரண்டு இழைகளாக எடுத்து நான்கு இழைகளாக முறுக்குகிறோம். அதனால் நாள்பட நீடிக்கும்" என்கிறார் தலைவி.

பார்டர்களில் அன்னம், யாளி, யானைக் கண், மயில்கண், குயில்கண் (மயில் கண்ணை விடச் சின்னதாக!) ஜடை நாகம், மாங்காய், பன்னீர்ச் செம்பு என்று அழகும் கலையுணர்வும் வெளிப்படும் படைப்புகள், 'இவை கலாக்ஷேத்திரா சேலைகள்' என்று தனித்துக் காண்பிக்கின்றன.

'சபை அலங்காரம்' என்றே ஒரு சேலை இருக்கிறது! கேள்விப்பட்டிருக்கிறீர்களா? உடல் பகுதியில் வைர ஊசி மாதிரி, 'செக்' இருக்கும். சிவப்பு, மஞ்சள் வண்ணங்களில் இவை அசத்துகின்றன. இதெல்லாம் கலாக்ஷேத்திராவின் கலைப் பெருமைகள்!



• சகுந்தலா ரமணி



- சாருகேசி

படங்கள்: யோகா

(பரதநாட்டிய மாணவி காயத்ரியும் இசை மாணவி கமலாட்சியும் கலாக்ஷேத்திரா புடவையில்)

# சரிகையின் சரிதை

சரிகையைப் பயன்படுத்தத் தொடங்கியது 1867ல்தான் என்கிறார் தொழிலதிபர் நல்லி குப்புசாமி செட்டியார்.

"1920க்கு முன்னால், ஃபிரான்ஸ் நாட்டிலுள்ள லயான் என்ற நகரத்திலிருந்துதான் 'ஜரி' எனப்படும் சரிகை வந்து கொண்டிருந்தது. இதற்கு இந்தியா மட்டும்தான் கஸ்டமர்! பிறகு ஜப்பானிலிருந்து ரூபி க்வீன், லேடி ஹேமில்டன் இயந்திரங்களை இறக்குமதி செய்து, அதே தரத்தில், அதே விலையில், இந்தியாவிலேயே சூரத்தில் தயாரிக்க ஆரம்பித்தார்கள். 1924க்கு அப்புறம் சூரத்திலிருந்து சரிகை கிடைக்கத் தொடங்கியது.

"ஃபிரான்ஸில் இருந்த கார்ல்ஹியான் ஜரி தொழிற்சாலையை மூடி எண்பது வருடங்களாகின்றன. இதை ஆரம்பித்தவர் டேனியல் கொன்ட்டார்ட். ஆர்டர்கள் எதுவும் இல்லாததால் மூடிவிட்டார்கள். சமீபத்தில் ஃபிரான்ஸுக்குப் போயிருந்தபோது, தொழிற்சாலையை மறுபடி ஆரம்பிக்கலாமே, இப்போதுதான் இறக்குமதிக் கட்டுப்பாடுகள் இல்லையே என்று, லயான் சேம்பர் அஃப் காமர்ஸைச் சேர்ந்த புரொபசர் ஃபிராங்காய்ஸ் கிராஸ் மூலம் யோசனை கூடத் தெரிவித்தேன். இப்போது அங்கே இருக்கும் டியரி கொன்ட்டார்ட் அதற்குப் பதில்கூட எழுதினார் எனக்கு. ஆனால் இப்போது கிடைக்கிற விலைக்கு இனி அவர்களால் தர முடியாது!" என்கிறார் நல்லி.

"சூரத்துக்குப் போய் ஜரி தொழிற்சாலைகளைப் பார்த்தேன். காலை பத்து முதல் மாலை ஆறு வரை வேலை நேரம் என்றால், காலை ஆறு மணிக்கே வந்து வேலை செய்யத் தொடங்கிவிடுகிறார்கள். அதனால் பன்னிரண்டு மணி நேர உழைப்பில், உற்பத்தி பிரமாதமாக இருக்கிறது. இந்த உழைப்பை வேறு எங்கும் எதிர்பார்க்க முடியாது.

"ஏன், சென்னையிலேயே இதைத் தயாரிக்க முடியாதா, என்று 1947ல் ஜானகிராமய்யர் என்ற அந்த நாளைய ரெயில்வே கான்ட்ராக்டர், பாண்டி பஜாரில் சரிகைத் தொழில் தொடங்கினார். அவரால் நடத்த முடியவில்லை. அதே விலைக்கு அவரால் விற்க முடியவில்லை. பிறகு பெங்களூருக்குப் போய் விட்டார்.

"சூரத்தில் தயாராகும் சரிகையில் தொண்ணூறு

சதவிகிதம் தமிழ் நாட்டில்தான் உபயோகிக்கப்படுகிறது. இதை எப்படித் தயாரிக்கிறார்கள் தெரியுமா? 76 சதவிகிதம் வெள்ளி, 0.5 சதவிகிதம் தங்கம், மீதி 23.5 சதவிகிதம் பட்டு நூலிழை. இதில் வெள்ளி 76% என்பது இப்போது குறைந்துபோய், 55% இருந்தாலே போதும் என்று ஆகிவிட்டது. மீதி 21% செம்பு உபயோகிக்கிறார்கள். பட்டு நூலிழை எப்போதும் சிவப்பு வண்ணச் சாயத்தில் இருக்கும். வெள்ளி இழையை இதன் மேல் சுற்றி விடுவார்கள். தங்கத்தை எலக்ட்ரோ-பிளேட்டிங் முறையில் பூசி விடுவார்கள். பளபளப்புக்கு வெள்ளியும் நூலிழையின் சிவப்பு நிறமும்தாம் காரணம்.

''வெள்ளிக்குப் பதிலாக செம்புக் கம்பி மேல் கெமிகல் பூசி, தங்க கலர் கொண்டு வந்து விடுவார்கள். அதனால் வெள்ளி இல்லாத இந்த வகை சரிகைப் புடைவைகளை, ஹாஃப் ஃபைன் என்றே லேபில் பகுதியில் குறித்துவிடுகிறோம். விவரம் தெரிந்தவர்களுக்கு, வித்தியாசம் தெரிய வேண்டும் என்பதற்காக இப்படிச் செய்கிறோம். இதன் விலை குறைவு. இதில் கூட இப்போதெல்லாம் ட்ரீட்மெண்ட் கொடுத்து, பளபளப்பைக் கொண்டு வந்துவிடுகிறார்கள்'' என்றார்.

இனி சரிகைச் சேலை வாங்கும் போது, இதெல்லாம் இருக்கிறதா என்று கேட்டு அசத்துங்கள்!

**- சாருகேசி**

படம் : **யோகா**





# 'பட்டு'ன்னு சிரிங்க!





கருத்து :
ரேஞ்சர்சன்
ஓவியம் :
லெட்சுமிபிள்ளை



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.



மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.



உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

**முதியோர் சேவை பெரியது!**

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

### Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700,
2475 7777 2475 5799,
e-mail:svhome@vsnl.net

தரம் என்பதே சாரதாஸின் தாரக மந்திரம்
விலை என்பதோ கையளவு மாத்திரம்



# சாரதா'ஸ்

சுப முகூர்த்த பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்

45,என்.எஸ்.பி. ரோடு, திருச்சி-2